




பிஸ்மில்லா ஹிர்றஹ்மா நிர்றஹீம்.

உம்முல் முஃமினீன்

## ஹலரத் ஆயிஷா நாயகி

அவர்களின்

# ஜீவிய சரித்திரம்.

இஃது

மதுராஸ் திருவல்லிக்கேணி

**எம். எ. ஷாஹுல் ஹமீது லெப்பை**

அவர்களின் நன் முயற்சியால்,

ஸஹீஹான உருது கிதாபுகளிலிருந்து

மொழி பெயர்ப்பித்து,

தனது

**ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திரசாலையில்**

பதிப்பிக்கப்பட்டது.

---

முதற் பதிப்பு.

**1928.**

இதன் விலை] [ரூ. 1—4—0

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி அவர்களின்

# ஜீவிய சரித்திர அட்டவணை.



| எண். | உள்ளுறை. | பக்கம். |
|---|---|---|
| 1. | நாமமும் வமிச பாம்பரையும். | 2 |
| 2. | குழந்தைப் பருவம். | 3 |
| 3. | ஹஸரத் கதீஜா நம்பிராட்டியாரின் வபாத்து, ஆயிஷா நாயகியை மணம் பேசுதல். .... | 5 |
| 4. | திருமணமும், பெருமானாவர்களின் பிராயமும். | 9 |
| 5. | மஹர் (விவாகக் கட்டணம்) விவரம். .... | 9 |
| 6. | நபிகள் பெருமானாவர்கள் ஹிஜ்ரத் செய்தல். | 10 |
| 7. | ஆயிஷா நாயகி மதீனாவுக்குப் போதல். .... | 13 |
| 8. | எச்சரிப்பு. .... | 17 |
| 9. | சீதனச் சாமான்களும் வலீமா விருந்தும். .... | 18 |
| 10. | ஆயிஷா நாயகியின் குடித்தன ஆரம்பம். .... | 22 |
| 11. | ஆயிஷா நாயகியின் பொம்மை விளையாட்டு. .... | 23 |
| 12. | ஆயிஷா நாயகிபால் நபி பெருமானாவர்களின் அன்பு | 25 |
| 13. | ஆயிஷா நாயகியின் செல்வாக்குகள். .... | 26 |
| 14. | நீதியும் சமத்துவமும். .... | 31 |
| 15. | ஹஸ்ரத் ஆயிஷா நாயகியின் மேம்பாடு. .... | 46 |
| 16. | ஆயிஷா நாயகியவர்களின் கல்வித்திறமை. .... | 69 |
| 17. | ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களின் சம்பந்தங்களும், குடித்தனக் காரியங்களும். .... | 81 |
| 18. | ஆயிஷா நாயகியவர்களின் கல்விப்பயிற்சி. .... | 102 |
| 19. | ஆயிஷா நாயகியின் பெருந்தன்மைகள். .... | 112 |
| 20. | ஆயிஷா நாயகியின் கவலை. .... | 112 |
| 21. | ஆயிஷா நாயகியவர்களின் தர்மகுணம். .... | 113 |

பிஸ்மில்லாஹி.

## உம்முல் முஃமினீன் ஹஸரத்

## ஆயிஷா நாயகி அவர்களின்

# ஜீவிய சரித்திரம்.



ஆயிஷா நாயகி, நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ஹிஜ்ரத் (நாட்டைவிட்டுச் செல்லுதல்) திற்கு 8 அல்லது, 9 வருஷங்களுக்கு முந்தியே அவதரித்தவர்கள்; அவர்களின் அவதாரத்திற்குரிய காலம் கிறிஸ்தவ சகாப்தம், 613 அல்லது, 614 என கணக்கிடப்பட்டிருக்கிறது. மக்கத்தில் ஆயிஷா நாயகி பிறந்த மஹல்லாவின் பெயர் * "மஸ்பலா" அல்லது "மன்கலா" என்பதாகும். முதல் கலீபாவுடைய திரு கிரகத்தில் பிறக்கப்போகும் பெண் குழந்தையானது "உம்முல் மூமினீன்" (மூமினுனவர்களின் தாய்) ஆவார் என்ற இரகசியம் ஒருவருக்கும் தெரியாமலிருந்து வந்தது.

அம்மாது சிரோன்மணி, இருலோக ரட்சகரான நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் நம்பிராட்டியார் என்ற

---

* "மஸ்பலா" என்பது மக்கா முகர்ரமாவிலுள்ள ஒரு மஹல்லாவின் பெயராகும். ஹஸரத் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களும், ஹஸரத் ஆயிஷா நாயகியவர்களும் அதே மஹல்லாவில் தான் பிறந்ததாகக்கூறப்பட்டிருக்கிறது. முதல் கலீபாவானவர் பிறந்துள்ள ஜாகை 'தாரே அபூபக்கர்' அல்லது 'குப்பயெ அபூபக்கர்' என அழைக்கப்பட்டிருக்கின்றது. இது ஒரு பெரிய கட்டிடம், கட்டிடத்திற்கு மேல் பெரிய வில்வளையொன்றும் அமைந்திருக்கிறது. கட்டிடத்தின் முதல் பாகத்தில் முற்றமும் இரண்டாவது பாகத்திற்கு மேலே வில்வளையுமுண்டு. அதற்கு நேர் கீழ்ப்புறத்திலேயே கலீபா அவர்கள் அவதரித்த ஸ்தலத்தில் பெரிய திண்ணையொன்று கட்டப்பட்டிருக்கிறது. சையதினு அமீர் ஹம்ஸா றலியல்லாஹு அன்ஹு அவர்களும் இதே மஹல்லாவில்தான் அவதரித்தார்கள் என்றும், ஹலீமா (செவிலித்தாய்) அவர்களுடைய பள்ளிவாசலும், இவ்விடத்திலேயே இருந்து வருகிறதென்றும் யாத்திரீகர்களால் அறிவிக்கப்பட்டுள்ளது.

நிகரற்ற பதவியை அடைவார என்பதும் யாருக்குத்தான் தெரிந்திருந்தது? சர்வ வல்ல இறைவனும் அவனுடைய உண்மை தீர்க்கதரிசியும் அந்த அம்மையாரைச் சிலாக்கியப்படுத்தல், வல்ல இறைவனின் திருவேதமாகிய குர்ஆன் ஷரீப் அம்மாது சிரோன்மணியை ஆதரிக்குமளவில், அவாது நல்லாச்சாரங்களுக்குச் சாட்சியங்கொடுத்தல் குறிப்பிடத்தக்கது. ஆயிஷாநாயகி அவதரிப்பதற்கு 4-வருஷ காலத்திற்கு முன்னமேயே அவருடைய தந்தையாராகிய ஹஸ்ரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்லாத்தின் அரிய பாக்கியத்தை அடையப்பெற்றிருந்தனர். ஆனதால் ஆயிஷா நாயகி, பிறந்ததும், இஸ்லாத்தின் ஒளியே அவர்களுக்கு தென்பட்டது. எல்லாவற்றிற்கு முன் "அல்லாஹு அக்பர்" என்னும் தக்பீரின் சப்தமே அவருடைய செவிகளில் முழங்கியது. அடுத்தாற்போல் "முஹம்மதுர் றசூலுல்லா" என்ற திருநாமச் சொல்லையும் அவர் செவியுற்றார்.

அரபிய சடங்கு வழக்கங்களுக் கேற்ப அவர்களை குளிப்பாட்டி, துணி மணிகளை அணிய வைக்கப்பட்டது. தாயாரின் மடி நிறப்பமாக்கப்படவே அதைப் பார்த்த யாவரும் குழந்தையை ஆசீர்வதிக்கத் தொடங்கினர்.

## நாமமும் வமிச பரம்பரையும்.

குழந்தைக்குப் பெயர் "ஆயிஷா" என வைக்கப்பட்டது. பட்டப்பெயர்களாவன:—"உம்மெ அப்துல்லா" ஸித்தீகா, 'ஹிமைரா' 'அபீஷ்' முதலியனவாம்.

தந்தையாரின் வமிச வழியை யனுசரிக்குமளவில் அவர்களுக்கு குறைஷ் வகுப்பிலும் அடியிற் கண்ட விவரப்படி சம்பந்த மேற்படுகிறது:—ஆயிஷா நாயகியின் தந்தையார் ஸித்தீக் அபூபக்கர், அவருடைய தந்தை அபீ குஹாபா, அவருடைய தந்தை ஆமீர், அவருடைய தந்தை அம்ரு கஅப், அவருடைய தந்தை ஸஅத், அவருடைய தந்தை தமீம், அவருடைய தந்தை மரா, அவருடையதந்தை கஅப், அவருடைய தந்தை லவி.

தாயின் வமிச பரம்பரையாவது:—ஆயிஷா நாயகி யவர்களின் தாயார் உம்மெ ரோமான், இவருக்குத் தாய் ஆமிர், இவருக்குத் தந்தை அவீர், இவருக்குத்தந்தை அப்தெஷம்ஸ், இவருக்குத்தந்தை

இதாப், இவருக்குத்தந்தை அஷீனதா, இவருக்கு தந்தை ஸீஃ, இவருக்கு தந்தை பின் தஹ்மான், இவருக்கு தந்தை அல் ஹாரிஸ், இவருக்கு தந்தை அம், இவருக்கு தந்தை மாலிக், இவருக்கு தந்தை கினுனு''

பாஜீல் அப்துல்லா ஸக்ரி "கிதாபுல் இஸ்தீ ஆப்'' என்னும் கிரந்தத்தில் தமீம் அல்லது கினுனு வரையினுமுள்ள வமிச பாம்பரை வரையில் எவ்வித மாறுபாடும் கிடையாதென்றும், வமிச பாம்பரையில் ஏற்பட்டுள்ள தகராறுகள்யாவும் அதற்கு முன்னுளுள்ளவைகளே என்றும், ஹஸரத் அபூபக்கர் ஸித்தீக் அவர்களும் தம்மை "பனிஸரஸ்'' வகுப்பிலேயே எண்ணி வந்தார்கள் என்றும், பஹருக்கு முன்னுல் இத்தோரணைக்குட்பட்ட எல்லா சமூகத்தார்களும் கினுனுஎன்ற பட்டப் பெயருடன் நினைக்கப்பட்டு வந்தார்கள் என்றும், பஹருக்குப்பின் இவர்களெல்லோரும் குரைஷியர் என அழைக்கப்பட்டனர் என்றும், ஆதலால் தம்முடைய தாய் தந்தை இருவர்களுடைய வமிசப் பாம்பரையாலும் எவ்வித பேதமும் கிடையாது என்றும் வரைந்திருக்கிருர்கள்.

## குழந்தைப் பருவம்.

ஆயிஷா நாயகியின் பெற்றோர் குழந்தைக்குப் பாலூட்டுவதற்காக "அபூகயீஸ்'' உடைய மனைவியை செவிலித்தாயாக நியமித்தனர். அச்செவிலித்தாயே, ஆயிஷா நாயகியின் குழந்தைப் பருவத்தில், அவர்களுக்குப் பாலூட்டி வந்தார். பாலூட்டும் காலம் முடிந்ததும் குழந்தை பெற்றோரிடம் ஒப்பிக்கப் பட்டது.

ஆயிஷா நாயகி, தம்பெற்றோருக்கு ஒரே குழந்தையாக இருக்கவில்லை யாயினும், அவரது குழந்தைப் பருவத்தின் நல்லம்சங்களின் அறிகுறிகளைப் பார்த்த பெற்றோர் அக்குழந்தையை தமது இதர குழந்தைகளைக் காட்டிலும் மிக்க அன்புடன் வளர்த்து வந்தனர். இந்நிலைமையில் அந்தக் குழந்தையானது தன் தாய்க்கு உயிரைப்போலும், தந்தைக்குக் கண்மணியைப் போலும் பாவிக்கப்பட்டுவந்தது. அவரது வீட்டில் இதர குழந்தைகளுக்கு ஏற்படாத செல்வாக்கு அவருக்கு ஏற்பட்டுள்ளது. குழந்தைப் பருவத்திலேயே பெருந்தன்மைக்குரிய லக்ஷணங்கள் நிறைந்திருந்தன. பிற்காலத்தில் என்ன நடக்கப்

போகிறது என்பதற்குரிய அடையாளங்களும் அவருடைய திரு மேனியிலிருந்து புலனாயின. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய மேம்பாட்டின் திரு ஒளியானது அக்குழந்தையின் நெற்றியில் இலங்கி நின்றது. குழந்தையின் அருமையான மொழிகளும் புத்தி தீக்ஷண்யமுள்ள செய்கைகளும் மனதை கவரத் தக்கவைகளா யிருந்தன.

விளையாட்டுப் பருவமாக இருந்ததாயினும், அக்குழந்தையின் விளையாட்டானது குறைஷிய தலைவர்களின் குழந்தைகளுடைய விளையாட்டைப்போலொத்த கம்பீர விளையாட்டாகவே இருந்து வந்தது. பெற்றோர்கள் ஜாக்கிரதையாகப் போஷித்து வரவே, வல்ல இறைவன் அக்குழந்தையை வளரவைத்தான். குழந்தையின் தேக அவயவங்கள் பலமடைந்தன. லக்ஷணம் அதிகரித்திருந்ததால், அது அதனை கண்ணுற்றவர்களின் ஆசீர்வதத்தை யடைந்து வந்தது.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி, சிறு பிராயத்தில் தம் தோழிகளினிடை, நல்லொழுக்கம், சௌந்தரியம், ஆழ்ந்த யோசனை முதலிய எல்லா லக்ஷணங்களிலும் மேம்பாடடைந் திருந்தமையால், அவரது கூட்டத்தின் சிறுமிகள் யாவரும் சேர்ந்து விளையாடுவதற்காக வேண்டி, ஆயிஷா சிறுமியாரிடத்திற்கே வந்து விடுவர். பொம்மை விளையாட்டிலேயே அவர்களுக்கு அதிக உற்சாகமிருந்து வந்தது. அவர்களைச் சேர்ந்த கூட்டத்தாரின் எல்லா சிறுமிகளிடத்திலுள்ள பொம்மைகளை ஒன்றாகச் சேர்த்தாலும் ஆயிஷா சிறுமியாரிட மிருந்து வந்த பொம்மைகளின் அளவுக்கு அவைகள் எட்டிருந்திருக்க மாட்டா. இதன் பொருட்டு அவர்களின் கூட்டத்திலுள்ள சிறுமிகளாகிய அவர்களது தோழிகள் அவர்களைத் தமது விளையாட்டுக் கூட்டத்திற்குத் தலைமை வாய்ந்தவர் என்றும் நினைத்து வந்தார்கள்.

ஆயிஷா நாயகி யவர்களின் பெற்றோர்களும், தம் யோக்கியமுள்ள பெண்ணின் எல்லாவித அரிய நடவடிக்கைகளையும் மிக்க அன்பான பார்வையின் கீழ் கவனித்து வருவார்கள். குழந்தைப் பருவத்தின் காரியங்களிலேயே பெருந் தன்மைக்குரியதும், அரிய துணிகரத்திற் குரியதுமான அறிகுறிகள் காணப்பட்டு வந்தன.

ஒரு தடவை, ஆயிஷா நாயகி, மூன்று சந்திரன்கள் முறிந்து தம்முடைய மடியில் வந்து விழுந்து கிடப்பதாய் சொப்பனங் கண்

டார்கள். மறுநாள் காலை அவர்கள் தன் சொப்பனத்தை தம் தந்தை யாராகிய ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் தெரிவித்தார்கள். சொப்பனத்தின் பயனைக்கண்டு பிடிப்பதில் மிக்க திறமை வாய்ந்திருந்த அவரது தந்தையாரவர்கள், தம் புதல்வியார் ஓர் உயர்தரப்பதவிக்கு அருகராகப் போகிறார் என் பதை நன்குணர்ந்து கொண்டார்கள். அதுமுதல் ஹஸரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய மனதில் ஆயிஷா நாயகி யிடத்தில் ஏற்கனவே இருந்துவந்த அன்பு அதிகரித்தது மட்டு மன்றி, அவர்களை கண்ணியப் பார்வையின் கீழ் பார்க்கவும் அவர்க ளுக்கு விசேஷ சிரத்தையுடன் கல்விப்பயிற்சிகளைப் புகட்டவும் கவலை யெடுத்துக் கொண்டார்கள்.

## ஹஸரத் கதீஜா நம்பிராட்டியாரின் வபாத்து.

### ஆயிஷா நாயகியை மணம் பேசுதல்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இஸ் லாம் மதப்பிரசாரத்தை வெகு மும்மரமாக செய்து கொண்டிருந்த தன் பயனாக, ஜனாப் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், நபி பெருமானாரவர்க ளுடனேயே அடிக்கடி இருந்து வரும்படியான சந்தர்ப்பம் நேர்ந்தது. ஆயிஷா நாயகிக்கு அப்போது 5 அல்லது 6 பிராயம் நிறைந்திருந்தது.

ஆனால் அப்போதைய நிலைமையோ மிகவும் கொடிது. அதாவது குறைஷிய காபிர்கள் நாளடைவில் விளைவித்துச் செல்லும் கஷ்ட நஷ்டங்களுக்கு ஓரளவில்லை. இஸ்லாத்தைத் தழுவுவோர்கள் பேரில் அநேக கொடுமைகளும் அதிக்கிரமங்களும் செய்யப்படுகின்ற கொடு மைகள் எப்பேர்ப்பட்டவை என்பதை சொல்லி முடியாது. அமைதி சமாதானம் என்ற பொதுஜன கதிமோக்ஷம் போனவிடம் தெரியாம லிருந்தது. மனம் நடுங்குகின்றது; உள்ளம் பதறுகின்றது. அல்லா வுடைய உண்மை தீர்க்கதரிசியாகிய நமது நாயகத்தைச் சிரச்சேதம் செய்யவேண்டுமென்ற சதியாலோசனைகள் பகைவர்களுக்கிடை நட ந்துகொண் டிருந்தன. எளிய முஸ்லிம்களை நிர்வாணமாக்கி சூடான மணலில் அவர்களைக் கிடத்தி அவர்களின் சரீரங்களின் மீது பாரமான கற்களைத் தூக்கிவைத்து, "நீங்கள் முஹம்மத் உடைய கலிமா-

ஓதுவதைத் தவிர்த்து, விக்கிரக ஆராதனையைக் கைக்கொள்ளுகிறீர்களா?'' எனக் கேட்பார்கள். இதுமட்டுமோ? நபிபெருமானாரவர்கள் மீது கற்கள் எறியப்படும்; அவர்களது திருச்சிரசின்மீது குப்பை சத்தைகளை கொண்டுவந்து போடப்படும்; அத்தனைக்கும் இருலோக ரக்ஷகரான நம் நபி பெருமானாரவர்கள், அவர்களுக்கு (பகைவர்களுக்கு) ஒன்றும் சொல்லாமலே வானத்தை அண்ணாந்து பார்த்து மௌனமாயிருந்து விடுவார்கள். இச்சந்தர்ப்பத்தில் பொறுமை அவர்களது பெருந்தன்மையை விளக்கிக் காட்டிக் கொண்டிருந்தது.

ஒருபுறம் இவ்வாறிருக்க, மற்றொருபுறத்தின் நிகழ்ச்சிகளைக் கவனிப்போம். ஹஸரத் கதீஜா நம்பிராட்டியார், இத்தகைய நெருக்கடியான சந்தர்ப்பத்தில் உலகத்தைவிட்டும் பயணம் வைக்கிறார்கள். அடுத்தாற்போல் நபி பெருமானாரவர்களின் சிறிய பிதாவாகிய அபூதாலிப் அவர்களும் கர்லஞ் செல்லுகிறார்கள். அந்தோ! நம் நபிபெருமானாரவர்கள் எதற்கென சஞ்சலமடைவது? யாருக்கென துக்கப்படுவது? கஷ்டகாலத்தில் தமக்குப் பலவித அரிய மொழிகளைக்கொண்டு ஆறுதலேற்படுத்தி வந்த அத்தியந்த தோழருக்கொப்பாக இருந்துவந்தவரன்றோ? கதீஜா நம்பிராட்டியார்.

நபி பெருமானாரவர்கள், கதீஜா நம்பிராட்டியாரின் விஸ்வாசம், அன்னியோன்னியம், ஒத்தாசை முதலியவைகளைப் பற்றி நினைத்து வருந்தி வந்தார்கள். தனியே இருந்துகொண்டு அவர்களது தோற்றத்தைத் தம் மனப் பார்வையில் அமைத்துப் பார்ப்பார்கள்.

இந்நிலைமையில், ஒருநாள் பகைஞர்கள் நபிபெருமானாரவர்களுக்கு எதிர்ப்பாராத கடுந்துன்பங்களை இழைத்தனர். அவற்றை அனுபவித்துள்ள நபிகள் நாயகம் அவர்கள் வீட்டிற்கு வந்தார்களாகில் கதீஜா நாயகியன்றி வீடு காலியாய்க் கிடந்தது. சீமாட்டி என்ற அந்தஸ்தை முன்னிட்டு குரைஷிய காபிர்களை இச்சந்தர்ப்பத்தில் அதட்டிப்பெருமானாரவர்களுக்கும் ஆறுதல் செய்துவைக்கத் தகுந்தவர்களா யிருந்துவந்த அந்த மாதுசிரோன்மணியைக் காணோமே என்ற துக்க உணர்ச்சி நபி பெருமானாரவர்களுடைய மனதில் உதித்து, அவர்கள் இரவு முழுதும் மனக் கலக்கத்தையே அடைந்தார்கள்.

இந்த நிலைமையில் மறுநாள் விடியற்காலமானதும் ''ஹகீம் இப்னுல் அவ்க்ஸ்'' உடைய புதல்வியும் உஸ்மான்பின் மஸ்தோன் என்

னும் பிரபல ஸஹாபியின் மனைவியாருமாகிய "கௌலா" என்ற பெண் மணியானவர் நபி பெருமானாரவர்களுடைய சந்நிதானத்திற்குச் சென்று, அவர்களுடைய பரிதாப நிலைமையை யுணர்ந்து, "ரசூலுல்லாவே! தாங்கள் ஏன் மறு நிக்காஹ் செய்து கொள்ளப்படாது? தனிமையில் மனக்கலக்க மடைந்துக்கொண்டிருத்தல் இயற்கையாகுமா?" என முறையிட்டார்கள்.

அப்போது நம்பெருமானார் அவர்கள் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் "ஓ கௌலாவே! கதீஜாவைப்போன்ற நல்லாச்சாரங்களும், விசுவாசம், அன்னியோன்னியம் முதலிய எல்லா லக்ஷணங்களும் ஒருங்கே படைத்துள்ள சௌபாக்கியவதி இப்போது கிடைத்தல் சாத்யமா?" என விடை பகர்ந்தார்கள். அப்போது, கௌலா:—"பெருமானே! கதீஜா நாயகியின் லக்ஷணங்களுக்கு மேற்பட்ட லக்ஷணங்க ளமைந்துள்ள சில பெண்கள் இப்போதும் மக்கத்தில் இல்லாமற் போகவில்லை. ஹஸ்ரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியாகிய ஆயிஷாவும் ஸௌதாவும் ஆக இருவரும் தங்களுக்கு பொருந்தியவர்களே யாவர். ஹஸ்ரத் அபூபக்கரினிஸ்ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய புதல்வியார் கன்னிப்பெண்ணும், ஸௌதா ஒருவிதவையாகவும் இருந்து வருகின்றனர். இவ்விருவர்களுடைய விருத்தாந்தங்களைத் தாங்கள் நன்கறிவீர்கள். நிற்க, இவர்களை ஆதரிக்க வேண்டுமென்பதற்குரிய கடமையும் தங்கள் பேரில் கொஞ்சமேனும் இருந்து வருவதாகும்" என விரிவாய் எடுத்துரைத்தார்கள். அப்போது நபி பெருமானாரவர்கள் சற்றுநேரம் வரையில் தமக்குள் சிந்தித்துப் பார்த்தபின்னர், "கௌலா! சரி உம்மிஷ்டப்படியே நீர் இந்த இருவர்களுடைய ஜாகைகளுக்கும் சென்று மணம்பேசும். நாம் உம்முடைய அபிப்பிராயத்தை நிராகரிக்க விரும்பவில்லை" என்று திருவுளம் பற்றினார்கள்.

அதைக்கேட்ட கௌலா மிக்க சந்தோஷத்துடன் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய வீட்டிற்குப் போய் ஆயிஷாநாயகியின் தாயாராகிய உம்மெரோமான் றலியல்லாஹு அன்ஹா அவர்களிடம், "சகோதரியே! உங்களுக்கு நன்மை உண்டாகுக!" என ஆசி கூறிவிட்டு, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு

அலைஹிவஸல்லம் அவர்களின் சார்ப்பாகத் தாம் ஆயிஷா நாயகியை மணம்பேச வந்திருக்கின்றேன் எனசெய்தியை அறிவித்தார்கள். அதைக்கேட்ட ஆயிஷா நாயகியின் தாயாரவர்கள், "றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ஹஸரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களது மார்க்க சகோதரர் என்ற உறவைக் கொண்டவர்கள். அதையனுசரிக்குமளவில், அவர்கள் ஆயிஷாவுக்கு சிறிய பிதாவாவார். இம்முறையில் நிக்காஹ்செய்தல் கூடுமா? எல்லாவற்றிற்கும் நீங்கள் சற்று தாமதியுங்கள். வெளியில் போயிருக்கும் ஆயிஷாவின் தந்தையார் வந்தவுடன் இதைப்பற்றி நான் அவர்களிடம் கேட்டுத்தெரிந்து உங்களுக்குப் பதிலளிக்கிறேன்" என்றூர்கள்.

இதற்குள் ஹஸ்ரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களும் வீடுவந்து சேர்ந்தார்கள். அவர்களிடம் இச்செய்தி கூறப்பட்டபொழுது அவர்களும் தம்மனைவியார் அளித்துள்ள பதிலையே அளித்தனர். அதன்பேரில் கௌலா நபிகள் பெருமானுரவர்கள் சமுகத்திற்குவந்து பெண்வீட்டினர் கூறிய மொழிகளை தெரிவித்தபோது நபிபெருமானுரவர்கள் "கௌலா! நீர்போய் ஸித்தீக் அவர்களுக்கு இவ்வித சம்பந்தம் நம் மார்க்கத்தில் கூடும் என்றும், அபூபக்கரே நம்மார்க்க சகோதரரே யன்றி உடன் பிறந்த சகோதர் அல்லவென்றும், பெண் தன் தந்தையுடன் பிறந்த சகோதரர் (சிறிய பிதா) உடனே அல்லது ஒரே தாயிடம் பால்குடித்த சகோதரனுடனே மணம்புரிதல் கூடாது என்றும் கூறும்" எனக் கட்டளையிட்டார்கள்.

கௌலா மீண்டும் பெருமானுரவர்களின் தீர்ப்பை ஹஸ்ரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களிடத்திற்கு எட்டிவைத்தபோது அவர்களும், அவர்களது மனைவியாராகிய உம்மெரூமான் அவர்களும் அதே சமயம் ஆயிஷா நாயகியை நபிபெருமானுரவர்களுக்கு மணம் செய்துகொடுக்க சந்தோஷத்துடன் இசைந்து கொண்டார்கள்.

ஏற்கனவே, ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்களை "ஜுபைரின் முஅத்தம்" என்பவருக்கு நிக்காஹ்செய்து கொடுப்பதாய் நிச்சயிக்கப் பட்டிருந்ததாகவும், ஆனல் கலியாணத்திற்குரிய எத்தகைய ஏற்பாடும் முடியாம லிருந்ததாகவும், நபி பெருமானுரவர்கள்

மணம் பேச செய்தி அனுப்பிய பின்னர், ஹஸ்ரத் அபூபக்கரிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஏற்கனவே கேட்டுள்ளவர்களிடம், பெருமானாரவர்களின் கோரிக்கையை வெளிப்படுத்தி ஆலோசனை கேட்டபோது, அவர்கள் நபி பெருமானாரவர்களுக்கே ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்களைக் கொடுக்கும்படியாகச் சம்மதித்து விட்டதாகவும் வந்திருக்கின்றது.

## திருமணமும், பெருமானாரவர்களின் பிராயமும்.

கௌலா ஹஸ்ரத் ஸித்தீக் அக்பர் றலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு, பெருமானாரவர்களிடம் ஆஜராகிப் பெண்வீட்டுக்காரர்களின் சம்மதத்தை அறிவித்தபோது, பெருமானாரவர்கள், ஸித்தீக் அக்பர் அவர்களுடைய வீட்டிற்குப் புறப்பட்டுப் போனார்கள். இறைவனது அருளைக்கொண்டு நிக்காஹ் முடிந்தது. இந்த நிக்காஹின்போது நபி பெருமானாரவர்களுக்கு 50-பிராயம் நிறைந்திருந்தது. ஹஸ்ரத் ஆயிஷா நாயகி, நபிகள் பெருமானாரவர்களுக்கு நிக்காஹ் செய்து கொடுக்கப்பட்டபோது, தமக்கு 6-பிராயமிருந்து வந்ததாகத் திருவுளம்பற்றி யிருக்கிறார்கள்.

அல்லாமா அப்துல் கர்மி அவர்கள், தாம் கோர்வை செய்துள்ள "கிதாபுல் இஸ்தீஆப்" என்னும் கிரந்தத்தில், அபீ உபைதா உடைய வியாக்யானமொன்றை அறிவிப்பதற்கிடையே நம் நபிபெருமானாரவர்கள், ஆயிஷா நாயகியை ஹிஜ்ரத்திற்கு இரண்டு வருஷகாலத்திற்கு முன் மக்காவில் மணம்புரிந்து கொண்டார்களென குறிப்பிட்டிருக்கிறார்கள்.

## மஹர் (விவாகக்கட்டணம்) விவரம்.

அபூஸல்மா றலியல்லாஹு அன்ஹு அவர்கள் திருவுளம் பற்றியிருக்கிறார்கள். "நான் ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்களிடம், நபிபெருமானாரவர்கள் தங்கள் நம்பிராட்டியார்களுக்காக நிக்காஹின்போது நிர்ணயித்துள்ள மஹர் எவ்வளவு?" எனக் கேட்டேன். அதற்கு ஆயிஷா நாயகியவர்கள், "பன்னிரண்டு அவ் கய்யாவும், பன்னிரண்டு நுஷ்ஷும்" (அவ் கய்யா நாற்பது திர்ஹம் நாணயங்களைக் கொண்டது) என்று மொழிந்ததோடு, "நுஷ் என்பது எவ்வளவென உமக்குத் தெரியுமா?" என என்னைக்கேட்டார்கள். நான் "தெரியாது" என்றேன். அப்போது அவர்கள், "நுஷ் அவ் கய்யாவின் அரைவாசி

மதிப்புள்ளது'' என மொழிந்தார்கள்; இந்த விவரப்படி 500-திர்ஹம் மஹர் என ஏற்படுகிறது.

உத்பா உடைய ரிவாயத்தை யனுசரிக்கு மிடத்து, ஹஸ்ரத் ஆயிஷா நாயகியின் மஹர் 50-திர்ஹம் என்று மட்டுமே தெரியவருகிறது.

சுருக்கக் கூறுமிடத்து, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் மக்கத்தை விட்டும் ஹிஜ்ரத் செய்ததற்கு, 2, அல்லது 3-வருஷங்களுக்கு முந்தியும், ஆயிஷா நாயகிக்கு 6, அல்லது 7-பிராயம் ஏற்பட்டிருந்தபோதும் அவர்களுடைய நிக்காஹ் நிகழ்ந்துள்ளது. இதற்குப்பின் நபி பெருமானா ரவர்கள் ஹிஜ்ரத் செய்யும்படியாக அவர்களுக்கு இறைவனுடைய் கட்டளை இறங்கியபோது, அவர்களும் ஹிஜ்ரத் செய்ய ஆயத்தமாய் விட்டார்களாயினும் ஆயிஷா நாயகியின் இளம்பிராயத்தைப் பாராட்டி அவர்களுடைய பெற்றோர் அவர்களை நபி பெருமானாரவர்களுடன் அனுப்பி வைக்க உடன்படவில்லை யாதலால், ஆயிஷா நாயகி தம் பெற்றோரின் வீட்டிலேயே இருந்துகொள்ள நேர்ந்தது.

## நபிகள் பெருமானாரவர்கள் ஹிஜ்ரத் செய்தல்.

மக்கத்து குறைஷியர்கள் நாளடைவில் நபி பெருமானாரவர்களுக்கு, அவர்கள் சகிக்கமுடியாத அளவில் அத்தியுக்கிரமாக நிஷ்டூரம் செய்யத் தலைப்பட்டார்கள். ஆனதால், இறைவன் நபி பெருமானாரவர்களுக்கு, அவர்கள் மக்கத்தைவிட்டு மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்யும்படியாக உத்தரவுசெய்தான். மேலும், தன்னுடைய ஜோதி மதீனாவாசிகளுக்கிடை துலங்கி நிற்கும்படியான யோக்யதை அவர்கள் (மக்கத்து வாசிகள்) வாய்ந்திருக்கவில்லை யென்றும், ஆதலால் பெருமானாரவர்கள் தம்முடைய சுற்றத்தார்களுடனும், அன்ஸார்களோடும் மக்கத்தை விட்டுப் புறப்பட்டு மதீனாவை யடைந்து அதனைச் செழிப்பாக்கி வைக்கவேண்டுமென்றும் இறைவனால் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

பகைவர்களுடைய துன்பங்களின் காரணமாகவே மக்கமா நகர் நபி பெருமானாரவர்களைப் பாதிக்கக்கூடிய நாடாகி விட்டதாயினும், அது நபி பெருமானா ரவர்களுடைய சொந்த ஊராக இருந்தது. மனிதருக்கு தம் சொந்த ஊர்பால் ஏற்படும் அபிமானம் (தேசாபிமானம்) எத்தகைய தாகுமென்பது பகிரங்க விஷயமாகும். அதன் பொருட்டே மனிதன் பல கொடிய கஷ்ட நஷ்டங்களை அடையும்படியான நிலைமை

யிலுங்கூட உள்ளூரிலேயே இருந்துகொள்ள முயற்சிக்கிறுன். ஆனல் நபி பெருமானர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கோ, இறைவனுடைய கட்டளை பிறப்பிக்கப்பட்டு போயிருந்தமையால், அவர்கள் அக்கட்டளையை மீற முடியாமல் ஹிஜ்ரத் செய்யவே நேரிட்டது.

ஹிஜ்ரத்திற்கு 2, 3 நாட்களுக்கு முன்னர், நம் நபிபெருமானர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், பிற்பகல் ஹஸ்ரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய வீட்டிற்குச் சென்று, வழக்கப்படி வாயிற்படியின் பேரில் தஸ்தக்(கைகொட்டுதல்) கொடுத்தபோது அவர்களை உள்ளே வா அனுமதிக்கப் பட்டது. உள்ளே சென்றதும், நபிபெருமானு ரவர்கள் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களை நோக்கி, "நான் தங்களோடு ஒரு விஷயத்தைப்பற்றி ஆலோசிக்க வேண்டியிருப்பதால் இங்கு அன்னியர் யாராவது இருந்தால் அவர்களைச் சற்று நேரம் அப்புறப்படுத்தி விடுங்கள்" என மொழிந்தபொழுது, அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், "இப்போது இங்கு தங்கள் மனைவி யாரைத் தவிர வேறொருவருமில்லை" என பதிலளித்தார்கள். அப்போது நம் நபி பெருமானரவர்கள், "எனக்கு ஹிஜ்ரத் செய்யும் படியாக இறைவனுடைய கட்டளை கிடைத்திருக்கிறது" என வெளியிட்டார்கள். உடனே ஹஸ்ரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், "நான் என் பெற்றோரைத் தங்களுக்காகத் தியாகம் செய்வேனுக! யா றசூலல்லா! என்னையும் தங்களுடன் அழைத்துச் செல்லும்படியான கண்ணியத்தை எனக்கு அருள்புரியுங்கள்" என நயந்து கேட்டுக்கொண்டதற்கு, நபி பெருமானரவர்கள் அதற்கு இசைந்து ஒத்து கொண்டார்கள்.

அப்பால், ஹஸ்ரத் ஸித்தீக் அக்பர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், சற்றேறக்குறைய 4 மாதகாலமாக நல்ல தீனியைக் கொடுத்துவந்த இரண்டு பெண் ஒட்டகங்களைக் கொண்டுவந்து நிறுத்தி, நபி பெருமானரவர்களிடம், "இதில் தாங்கள் ஒரு ஒட்டையை அடைந்து கொள்வீர்களாக" என்று வேண்டிக் கொண்டபோது, நபி பெருமானர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், அதைத் தாங்கள் இலவசமாய் அடைந்து கொள்ள முடியாதென்றும், அதற்குரிய கிரயத்தை வாங்கிக் கொள்ளும்பட்சத்தில் அதை அடைந்து கொள்வ

தாயும் கண்டித்து மொழிந்ததனுல், ஹஸ்ரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் கடைசியாக அதற்கு உடன்பட்டுப் போனார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகிக்கு அச்சமயம் மிகவும் இளம்பிராயமாக இருந்து வந்தபடியால், அவர்களுடைய சகோதரியாயும், ஹஸ்ரத் அப்துல்லா பின்ஸுபைர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய தாயாருமாகிய அஸ்மா அவர்கள், பிரயாணத்திற்கு வேண்டிய உணவுப் பதார்த்தங்களைத் தயாரித்தனர். சுமார் 2, 3 நாளுக்குரிய ஆகாரம் (கட்டுச்சாதம்) எடுத்துக் கொள்ளப்பட்டது.

அஸ்துல் காபா கல்பி அவர்கள், ஹிஜ்ரத் சம்பந்தமாய் "நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ரபீயு லவ்வல் மாதம், முதல் தேதியன்று "ஸௌர்" என்னும் மலைக்குகையி னின்றும் வெளிப்பட்டு, அதேமாதம் பன்னிரண்டாந்தேதி வெள்ளிக்கிழமையன்று மதீனுவுக்குப் போய்ச் சேர்ந்தார்கள்" எனக் கூறியிருக்கிறார்கள்.

அல்லாமா இப்னு அஸீர் "தாரீக் காமில்" என்னும் சரித்திரத்தில் வளர்ந்துள்ள ஒரு விவரம் யாதெனில்:—அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியாராகிய அஸ்மாவிடம், அபூஜஹிலும் சம்பந்தப்பட்டுள்ள சில குறைஷிய காபிர்கள் (நபிபெருமானு ரவர்களின் ஹிஜ்ரத் புறப்பாடிற்குப்பின்) சென்று, "உன்னுடைய தந்தை எங்கே?" எனக் கேட்டதற்கு, அஸ்மா அவர்கள் "எங்கேயோ எனக்குத் தெரியாது" என்றார். இதைக்கேட்டதும் அபூஜஹிலுக்கு அடங்கா கோபாவேசம், உண்டாகி அவன் சடாரென அஸ்மாவின் கன்னத்தில் பலமாய் ஓர் அறைவிட்டான். அவனது அறையின் அதிர்ச்சியால், அஸ்மா அவர்கள் காதில் அணிந்திருந்த நகையொன்று கழன்று கீழே விழுந்து போயிற்று. அதனின்றும் அஸ்மா அவர்களுக்கு ஏற்பட்ட வேதனைக்கு அளவில்லை.

அஸ்மா முதலியவர்களுக்கு, நபி பெருமானுரவர்களும், ஹஸ்ரத் அபூபக்கரினிஸ் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களும், எந்த திசையாய் எங்கே சென்றார்கள் என்ற இரகசியம் தெரியாமலிருந்த சந்தர்ப்பத்தில், அவர்கள் இருந்தாற்போலிருந்து சில அரபி மொழிகளைக் கேட்டனர். அம்மொழிகளைக் கூறுவோரோ இன்னு ரென்று

புலப்படவில்லை. உண்மையில் மக்கத்தின் புறமாய் வந்து கொண்டிருக்கும் ஜின் ஒன்று அம்மொழிகளைக் கூறிக்கொண்டு வந்தது. அவற்றைக் கேட்டுக்கொண்டு வரும் ஜனக்கூட்டமொன்று அந்த ஜின்னுக்குப் பின் தொடர்ந்து வந்தது.

அவ்வாறு கூறப்பட்டுள்ள அரபி மொழிகளின் பொருள் யாதெனில்:—"உம்மெமு அப்பத்" உடைய கூடாரத்தில் பிரசன்னமாயிருக்கும் அந்த இரண்டு தோழர்களுக்கும், சிருஷ்டிகர்த்தனாகிய இறைவன் நற்பயனைத் தந்தருள்வானாக! அவர்கள் இருவர்களும் ஹூதா என்னுமிடத்தில் இறங்கிக் காலை நேரத்தில் போய்ச்சேர்ந்தார்கள். முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குத் தோழராய்ப்போனவர் நற்பாக்கிய மடைந்தார். ஓ "பனீகஸா" கூட்டத்தார்களே! ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பாக்கியமாகவே, இறைவன் உங்களில் நிகரற்ற நற்செய்கைகளையும், மேம்பாட்டையும் நிலைநாட்டினான். ஓ பனிகஅப் கூட்டத்தார்களே! மூமின்களுடைய பாதையில் நிலைகொண்டுள்ள உங்கள் வாலிப ஸ்திரிகளின் இருப்பிடங்கள் உங்களுக்கு மங்களமாக!" என்பதே. அஸ்மா அவர்கள், "நாங்கள் மேற்கூறிய சப்தத்தைக் கேட்டவுடன் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மதீனாபோய்ச் சேர்ந்து விட்டார்களென அறிந்து கொண்டோம்" என்று கூறுகிறார்கள்.

## ஆயிஷா நாயகி மதீனாவுக்குப் போதல்.

ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவித்ததாக, அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியாராகிய உம்ரு அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—நபி பெருமானாரவர்களுடன் என்னுடைய தந்தையாரும் மதீனாவுக்கு ஹிஜ்ரத் போய்விட்டபோது, நாங்கள் மக்காவில் இருந்து வந்தோம். நபிபெருமானாரவர்கள் அப்பால் எங்களை அழைத்து வருவதற்காக ஸைத்பின் ஹாரிஸாவையும், அவருடைய அடிமையாகிய அபூராபியையும் அனுப்பி வைத்தார்கள். மேலும் அவர்கள் இரண்டு ஒட்டகங்களை யனுப்பிவைத்ததுடன், என் தந்தையார் ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து, 500 திர்ஹம்களையும் வாங்கி அவைகளைக் கொண்டு எங்களுக் கவசியமான சாமான்களையும் வாங்கிக் கொள்ளும்படியாக அனுப்பி வைத்தார்கள். ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், அவ்விருவர்களுடன்

அப்துல்லா பின் அரீகதுத்தீலீ அவர்களையும், இரண்டு மூன்று ஒட்டகங்களுடன் அனுப்பித் தம் புதல்வராகிய அப்துல்லா பேருக்கு ஒரு கடிதம் எழுதி, அவர் என் தாயார் உம்மெ ரோமான், என் சகோதரி அஸ்மா ஸௌஜா ஸுபைர், நான் (ஆயிஷா) முதலிய பேர்களை அழைத்து வரும்படியாகக் கடிதமொன்றும் எழுதியனுப்பினார்கள்.

ஸைத்பின் ஹாரிஸா அந்த 500-திர்ஹங்களுக்கு, மூன்று ஒட்டைகளை விலைக்கு வாங்கினர். பிறகு நாங்களெல்லோரும் மக்கத்தை விட்டும், மதீனாவுக்குப் புறப்படலானோம். தல்ஹா இப்னு அப்துல்லா அவர்களும், அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் சந்ததியார்களுடன், புறப்பட்டுச் செல்லத் தமக்கும் பிரியமிருப்பதாக வெளியிட்டபோது, அவரையும் அழைத்துக் கொள்ளப்பட்டது. ஸைத் பின் ஹாரிஸா, அபூராபா, ஹஸ்ரத் பாத்திமா, உம்மெ குல்ஸூம், ஸௌதா பின்தெ ஸம்அ இவர்களெல்லோரும் ஒட்டைகளின் மீது ஏற்றப்பட்டார்கள். ஸைத் உம்மெ அம்மனையும், உஸாமா தம் புதல்வனையும் வாகனத்தில் அமர்த்தினார்கள். அப்துல்லா இப்னு அபூபக்கர் உம்மெ ரூமான், தம் இரண்டு சகோதரிகள் சகிதமாய் ஒட்டைமேல் சவாரியானார். நாமெல்லோரும் பீழ் என்ற ஸ்தலத்திற்குப் போனபோது, எங்கள் ஒட்டை மிரண்டு அலங்கோலமாக ஓடத் தொடங்கியபோது, நாங்கள் விழுந்துபோகும் தருவாயில் இருந்தோம். எங்களுடனிருந்து வந்த எங்கள் தாயார் ஓகோ என்று பலவிதமாகக் கூக்குரலிட்டனர். கடைசியாக என் சகோதரிமட்டும் விழுந்துபோனார். ஆனால் நல்ல வேளையாக பலத்த அடியோ அல்லது காயமோ ஒன்றும் ஏற்படவில்லை. அப்பால் நாங்கள் ஒட்டையைத் தட்டிக்கொடுத்து, அதன் பயத்தைத் தெளியவைத்து சௌகரியமாகவே மதீனாவை யடைந்தோம். றசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களுடைய வீட்டினர்களும், ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களைச் சேர்ந்தவர்களும் முதல் நாள் * நப்வி பள்ளிவாசலில் தங்கலானார்கள்.

---

* நப்வி பள்ளிவாசலைக் கட்டும் வேலை முடிந்ததும், றசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், பள்ளிவாசலுக் கருகிலேயே தங்களது புனித நம்பிராட்டியார்களுக்காக வேண்டியும், ஜாகைகளை அமைத்து வைத்தார்கள். அதாவது முதன் முதலாக ஸவ்தா றலியல்லாஹு அன்ஹா அவர்களுக்காக வேண்டி ஒரு அறை

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி திருவுளம் பற்றுகிறார்கள். "நிக்காவுக்குப் பின் நாங்கள் மதீனாவுக்குப் போன போது ஹாரிஸ் பின் கஸ்ரஜ் உடைய வீட்டில் இறங்கியிருந்தோம். ஆனால் அங்கு எனக்குக் கடுமையான காய்ச்சல் கண்டு என் தலைரோமங்களும் உதிர்ந்து போயின. இதற்கிடையே ஒரு நாள் என் தாயார் (உம்மெரூமான்) என்னிடத்திற்கு வந்தார். அப்போது நான் என் தோழிகளுடன் சேர்ந்து விளையாடிக்கொண்டிருந்தேன். என் தாயார் என்னை கூப்பிட்டார். ஆனால் அவர் எதற்காக என்னைக் கூப்பிடுகிறார் என்பதையும் நான் சிந்திக்காமலே அவரிடம் போய்விட்டேன். அவர்கள் என் கையைப்பற்றிக் கொண்டே ஓர் வீட்டு வாயிற்படியின்பேரில் என்னைக்கொண்டு போய் நிறுத்தினார். அப்போது நான் இரைக்க இரைக்க மூச்சுவிட்டுக் கொண்டிருந்தேன். என் இரைப்பு சற்று நிற்கவே என் முகத்தின் பேரிலும் சிரசின் மீதும் கொஞ்சம் தண்ணீர் தெளிக்கப்பட்டது. அப்பால் என் தாயாரவர்கள் அந்த வீட்டிற்குள் என்னை நுழைய வைத்தபோது, சில அன்ஸார் ஸ்திரிகள் அங்கு உட்கார்ந்திருப்பதை நான் கண்டேன். அவர்களெல்லோரும் என்னைப் பார்த்ததும் "செழிப்பாகவும் அமோகமாக

---

வீடும், ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களுக்காக வேண்டி மற்றொரு அறை வீடுமாகக் கட்டப்பட்டன. அப்பால் நம்பிராட்டியார்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டுபோனதற் கேற்பவே, அவ்வறை வீடுகளின் எண்ணிக்கையும் அதிகரித்துக்கொண்டே போயிற்று. இந்த அறைவீடுகள் பச்சையான (சுடப்படாத) செங்கற் கல்களையும், கஜூர் ஓலைகளினால் முடைந்த தட்டுகளையும் கொண்டவை.

ஹஸ்ரத் உம்மெ ஸல்மா, ஸைனப், ஜவைரா, மைமூனா, ஸைனப் பிந்தெஹஜஷ இவர்களுடைய அறைவீடுகள் கீழ்ப்புறத்திலும் ஹஸ்ரத் ஆயிஷா, ஹஸ்ரத் மப்ஸா, ஸவ்தா, இவர்களுடைய அறை வீடுகள் அவர்களுடைய அறை வீடுகளுக்கு எதிரிலும் அமைந்திருந்தன. மேலும் இந்த வீடுகள் பள்ளிவாசலை யொட்டி யிருந்தன. இந்த அறை வீடுகள் முறையே 6, அல்லது 7-முழங் கொண்ட இடமும், 10-முழ நீளமு முள்ளவை. மேல் பாப்போவெனில், ஒருவர் அவற்றுள் நின்றுகொண்டு கையால் எட்டித் தொடக்கூடிய உயரத்தில் அமைந்திருந்தது. கதவுகளின்பேரில் கம்பளப் படுதாக்கள் போடப்பட்டிருக்கும். இராக்காலங்களில் விளக்கெரியும்.

வும் வாருங்கள்'' என்றபோது, என்தாயார் என்னை அவர்களிடம் ஒப் பித்தார்கள். அந்த ஸ்திரிகள் என்னை மிகவும் அன்பாய் உட்கார வைத்து என்னைச் சிங்காரிக்கத் தொடங்கினர். அன்று தற்செயலாக பிற்பகலில் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் விஜயஞ் செய்தார்கள். நான் அவர்கள் வசமாக்கப்பட்டேன். எனக்கு அப்போது ஒன்பது பிராயமா யிருந்தது.''

அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல் வியாரகிய அம்ரா றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப் படுகிறது:—ஆயிஷா நாயகி திருவுளம் பற்றினார்கள். ''நாங்கள் மக்கத் திலிருந்து மதீனாவுக்கு வந்தபோது பள்ளிவாசலைச் சுற்றி கட்டப்பட் டிருந்த அறைவீடுகளிலேயே வசிக்க ஆரம்பித்தோம். நான் சில நாட் கள் வரையிலும் என்னுடைய தந்தையாரின் ஜாகையிலேயே இருக்க நேர்ந்தது. ஒருநாள் என் தந்தையார் ரசூலுல்லா அவர்கள் சமூகத்தில் ''ரசூலுல்லாவே! தாங்கள் ஆயிஷாவை அழைத்துக் கொண்டுபோவ தில் தங்களுக்கு எத்தகைய அசந்தர்ப்பங்கள் குறுக்கிடுகின்றன'' வென்று முறையிட்டபோது, பெருமானாரவர்கள், ''மஹர்கடனைத்தீர் க்க என்னிடம் தொகையில்லை. இந்த ஒரு காரணத்தைப் பற்றியே நான் ஆயிஷாவை அழைத்துக் கொண்டு போக முடியாமல் தடைபட் டிருக்கிறேன்'' என விடைபகர்ந்தார்கள். அதைக்கேட்ட ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், ரசூலுல் லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு, ஆயி ஷாவின் விவாகக்கட்டண (12 அவ்கய்யாவும் ஒரு நுஷ்ஷும்) த்தை ரொக்கமாகக் கொடுத்தார்கள். அதை யடைந்த பிறகே ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எங்க ளிடத்திற்கு வந்தார்கள். றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்கள் வபாத்தடைந்த வீட்டிலேயே நான் மணமக ளாக வந்த நாள் முதல் கொண்டு கடைசிவரையில் வசித்துவந்தேன். இந்த வீட்டிலிருந்து பள்ளிவாசலுக்கு வரப்போக றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கத வாயற்படி யொன்றை அமைத்திருந்தார்கள். இந்த கதவாயற்படி ''பாபெ ஆயிஷா'' என வழங்கப்பட்டு வந்தது. (இதர வாயிற்படிகளெல்லாம் அடைத்துவிடப் பட்டமையால், இந்த ஒரே வாயிற்படி தான் பெருமா னாரவர்களுக்கு வரப்போக அநுகூலமா யிருந்து வந்தது. ஆயிஷா

நாயகியைச் சிலாக்கியப்படுத்துவதற்காகவே நபிபெருமானாரவர்களால் அந்த கதவாயதற்படிக்கு அப்பெயரிடப் பட்டதாகும்.)

ஹஸ்ரத் ஸவ்தா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் வசிப்பதற்காகவும் பள்ளிவாசலுக் கடுத்த மற்ருேர் புறத்தில் அறை வீடொன்று அமைக்கப்பட் டிருந்தது.

## எச்சரிப்பு.

நம்பெருமானா ரவர்கள் விவாகக் கட்டணத்தை (மஹறை) ஒரு மிக்க தீர்த்துக்கொடாத வரையில் ஆயிஷா நாயகியை அழைத்துக் கொள்ளவில்லை என்பதைப் பற்றி அவர்கள் கடைபிடித்துள்ள கொள்கை மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். முஸ்லிம் சகோதரர்களுக் கிடை நிக்காஹ் சம்பந்தமான கிரியைகள் யாவும் மார்க்க சட்டப் படியே இதுகாறும் நடைபெற்று வருகின்றன. விவாகக் கட்டணமும் தீர்மானிக்கப்படுகிறது. ஆனல் ஆயிரக் கணக்கான அளவில் விவாகக் கட்டணம் நிர்ணயிக்கப் படுதல் வருந்தத் தக்க விஷயமே. அதை தீர்க்கக்கூடாத அளவுக்கு நிர்ணயித்து விடுவதால், அதனைத் தீர்த்தல் தம் கடமையென கணவர்கள் நினைக்கவும் முடியாமற் போய் விடுகிறது.

மேலும் தற்காலே, "மஹர்" ஏற்படுத்தல், ஏதோ ஒரு வழக்கத்தை பொருந்திய விஷயமென இலேசாய் கருதப்படுகிறதே யொழிய அதை தீர்த்து வைத்தல் கணவரின் விதியாகுமென்பது சில மனிதர்களுக்குள்ளாகவே நினைக்கப் படுவதாகும்.

கணவன் மனைவி இருவர்களும் இறந்து போகிருர்கள். ஆனல் மஹர் என்ற தகவலோ அவர்களைப் பற்றிய வரையில் ஒன்றும் கேட்கப் படுவதில்லை.

சிலர் "நாங்கள் எங்களுடைய மனைவிகளுக்கு ஆயிரக் கணக்கான ரூபாய் பெறுமான முள்ள ஆபரணங்களை செய்து போட்டுவிட்டோம். ஆதலால் அவர்களுடைய மஹர்களைப்பற்றி கவலைப்படுவானேன்" என்பதாகவும் சொல்லுகிருர்கள். இதற்கு அவர்களின் அறியாமையே காரணமாகும். எதுகாறும் மஹருக் கென்றே அதற்குரிய கணக்குப் படி தனித்தொகையொன்று செலுத்தப்படமாட்டாதோ, அதுவரை மஹர் தீர்ந்துவிட்டதாக சொல்லமுடியாது. அதை தீர்த்து வைத்தல் மார்க்கக் கட்டளையாகு மென்பதற்கு மேற் கூறியவாறு றசூலுல்லாஹி

ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் கொள்கையே போதிய அத்தாட்சியாகும். நபிபெருமானாரவர்கள், மஹர் தொகையை கைமாற்று வாங்கியாகிலும் முதலில் அதை தீர்த்துவிட்டு ஆயிஷா நம்பிராட்டியாரவர்களை தம் ஜாகைக்கு அழைத்துச் சென்றார்கள் என, பதிலளித் திருந்தும் முஸ்லிம் சகோதரர்கள் அதுவிஷயத்தில் அவர்களைப் பின்பற்றி நடக்கவேண்டு மென்பதற்கு கவலைப் படவேண்டும்.

ஆயிஷா நாயகியின் நிக்காஹ் எந்த மாதத்தில் நடந்தது என்பதைப் பற்றி சரித்திராசிரியர்களுக் கிடை சில அபிப்பிராய பேதங்களிருந்து வரினும், ஹிஜ்ரத்திற்கு இரண்டு வருடத்திற்கு முன்னே ஷவ்வால்மீ நிக்காஹ் முடிந்த தென்றும், நிக்காஹ்வின்போது ஆயிஷா நாயகிக்கு 7-பிராயமும், பெருமானாரவர்கள் ஆயிஷா நாயகியை தங்கள் விட்டிற்கு அழைத்துச் சென்றபோது அவர்களுக்கு 9-பிராயமும் இருந்து வந்தது என்பதைப் பற்றியே விவாதமில்லை, பெருமானாரவர்கள் வபாத் தடைந்தபோது ஆயிஷா நம்பிராட்டியாருக்கு வயது பதினெட்டு மக்காவில் அவர்களுக்கு நிக்காஹ் நடந்து மதீனாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள் என்ற விஷயத்திலும் விவாதமில்லை.

## சீதனச்சாமான்களும் வலீமா விருந்தும்.

இருலோக ரக்ஷகரான நம்பெருமானார் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் நம்பிராட்டியாராகிய ஹஸ்ரத் ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் மணமகளாகி தம் கணவரிடத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டபோதும் அவர்களுக்கு எத்தகைய சிரீதனச்சாமான்களும் கொடுக்கப்படவில்லை. வேறு எவ்வித ஆடம்பரமான ஏற்பாடுகளும் கிடையா. மணமகளின் தாயாரானவர் எழுந்திருந்து தம் புதல்வியின் கையைப் பிடித்து அவரது கணவரிடம் ஒப்பிவித்து விட்டார்கள். நபிகள் பெருமானாரவர்கள் மக்கத்தை விட்டும் மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்துள்ள காலம் அதுவரையில் அதிகமாய் நீடித்திருக்க வில்லையாயினும், முஸ்லிம்களின் எண்ணிக்கை மதீனாவில் போதிய வளவுக்கு அதிகரித்திருந்தது. ஆனதுபற்றி பெருமானாரவர்கள் தாவத்தை (விருந்தை) விமரிசையாக நடத்திவைக்க வேண்டுமென விருப்ப முள்ளவர்களாக இருக்கவில்லை. அப்படி விருப்ப முள்ளவர்களாக இருந்திருப்பார்களாகில் எவ்விதத்திலும் குறைந்த பட்சம் அவர்கள் 4, 5, ஒட்டகங்களை ஸப்ஹு செய்யவும், 10, 15 மணங்கு

கஜூர்களை பகரவும், 10, 15, சேர் நெய்யும், மாவும் சேகரித்து விடவும், 4, 5 ஜோடி உடைகளையும் இதர ஆகுமான பண்டங்களைத் தயாரித்து விடவும் சாத்தியமாகவே இருந்தது. பெண்ணின் தந்தையாரைப்பற்றி சொல்லத்தேவையில்லை. அவர்கள் (அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு) ஆதிமுதல் அரபிய சமூகத்தார்களுக்கிடை ஒரு தலைவராக இருந்து வந்தவர்கள்; தம் வாழ்க்கை கண்ணியமாயும் சுகமாயும் கழித்து வந்தவர்கள்; அவர்களுடைய வீட்டில் எந்த வஸ்துவுக்கும் குறை ஏற்பட்டிருந்ததில்லை. அப்படியெல்லாமிருந்துங்கூட அவர்களும் தம்புதல்வியாருக்காக எவ்வித சீதனச்சாமான்களையும் கொடாமல் தனியே இஸ்லாத்தில் சாதாரணக் கொள்கையை ஆபரணமாக்கிக் கொண்டார்கள்.

ஓ அந் நபிபெருமானாரவர்களின் கூட்டத்தார்களே! ஓ இஸ்லாம் மார்க்க பக்தர்களென பறைசாற்றிக் கொள்பவர்களே! வெட்க மடையுங்கள்; ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியா ரவர்களுக்கு எவ்விதத்தில் நிக்காஹ் நடந்தது என்பதிலிருந்து போதனை யடையுங்கள். நீங்கள் உங்களுடைய எந்த புதல்வனதோ அல்லது புதல்வியினதோ விவாகத்தை செய்து வைக்க முன்வருகிறீர்களாகில் உங்களுடைய சொத்து சுதந்தரங்களையே ஒருமிக்க பாழாக்கிக் கொள்ளு மளவில் தலைப்பட்டு விடுகிறீர்கள். உங்கள் வீடு வாசல் ஏலத்துக்கு வந்து விடுகின்றது. நீங்களும் கெட்டு உங்கள் சொத்தும் உங்கள் கையை விட்டும் போய்விடுகிறது. அப்பால், அதனுல் உங்களுடைய பிள்ளைகளுக்கு யாதொரு பிரயோசனமும் இல்லாமற் போய்விடுகிறது.

வீணில் நீங்கள் ஊரார்களை அழைத்து பெரிய விருந்து நடத்துகிறீர்கள்; மேளம், தாளம் முதலிய பாட்டுக் கச்சேரிகளை நடத்துகிறீர்கள்; அன்னியர்கள் சிறிது நேரத்திற்குள் உங்களை கொள்ளை யிட்டுப் போய்விடும்படியான வழிகளை யெல்லாம் தேடிக் கொள்ளுகிறீர்கள்; நீங்கள் பெருமைக்காக செய்துள்ள இக்காரியங்கள் யாவும் கடைசியாக உங்களுக்கு சிறுமை யுண்டு பண்ணுவ தாகும்; உங்கள் விருந்தினர்களாக சாப்பிட வரும் அன்னியர்கள், சாப்பிட்டுச் செல்லும்போது தங்களுக்கிடை உங்கள் வீட்டு விருந்தைப் பற்றிய குறைகளையே பேசிக்கொண்டு போவதை நீங்கள் அவர்களைப் பின் தொடர்ந்து கேட்டுக்கொள்ளலாம். உங்கள் வீட்டு சாப்பாட்டை வயிறு நிறைய புசித்து, ஏப்பங்களை விட்டுக்கொண்டும் செல்லுபவர்களில் பெரும்பான்

மையோர், "என்ன விருந்து நடத்தினான்? சாப்பாட்டில் உப்பே கிடையாது, அல்லது உப்பு அதிகமாய் விட்டது, நெய் மிகவும் பஞ்சமாய் விட்டது, இறைச்சி போதாது" என பல விதமாக சொல்லிக்கொண்டு போதல் சகஜம் இரண்டு நாளின் ஆடம்பரத்திற்காகவும் குதூகலத்திற்காகவும், பிற்காலத்திய சங்கடங்களை அனுபவிப்பானேன்? ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியார் அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள்:"விவாகக் கட்டணத்திலும் துணிமணிகளிலும் குறைந்த அளவை நிதானித்து நடத்தப்படும் நிக்காஹ்வே பாக்கத்தை (செழிப்பை) ப்பொருந்தியதாகும்" இதே இரகசியத்தைப் பாராட்டியே நபி பெருமானாரவர்கள் தங்கள் விவாகத்தை மிக்க இலேசான ஏற்பாட்டின் கீழ் நடத்திக் கொண்டார்கள் என்பது நன்கு வெளியாகிறது.

முஸ்லிம் அவர்களால் அறிவிக்கப் படுகிறது:—ஹஸ்ரத் ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா திருவுளம் பற்றினார்கள் "என் நிக்காஹ்வில் வலீமாவுடைய தாவத்திற்காக ஒட்டகமோ அல்லது, ஆடோ, அறுக்கப்படவில்லை. எல்லோருக்காகவும் ஒரே குவளைப் பாலைக் கொண்டு விருந்து வைக்கப்பட்டது. அப்பாலானது ஜஅத்பின் அய்யாரா அவர்களுடைய வீட்டிலிருந்து கொண்டு வரப்பட்டதாகும். அல்லாமா இப்னு கவீர் அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—அஸ்மா அவர்கள் மொழிந்தார்கள். "நாங்கள் ஆயிஷா நாயகி மக்கத்தைவிட்டு மதீனாவுக்குப் புறப்பட்ட சமயம் அவர்களுடனேயே இருந்து வந்தோம், அப்போது றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அங்கு விஜயஞ்செய்தார்கள். அவர்களிடம் பால் நிறைந்த குவளை யொன்றும் சில கஜூர் (பேரீச்சம்பழம்) களும் இருந்து வந்தன. நபி பெருமானாரவர்கள் அவற்றை எங்களுக்கு முன்பாகவைத்து "புசியுங்கள்" என்று மொழிந்தபோது, நாங்கள் "அல்லாவுடைய றசூலே! நாங்கள் நோன்பு வைத்திருக்கிறோம்" என்று சொன்னோம். அதற்கு பெருமானாரவர்கள் "நீங்கள் பொய்யையும், பசியையும், ஒரே வயிற்றில் அடக்காதீர்கள்" என திருவுளம் பற்றியதால் நாங்கள் அவற்றை உட்கொண்டோம்"

ஆனால் மேற் கூறிவந்த விஷயங்களை யனுசரிக்கு மளவில் காலணாவுங்கூட விவாகக் காரியங்களில் செலவழிக்க வேண்டாமெனச் சொல்லப்பட் டிருப்பதாய் தப்பருத்தம் கொள்ளலாகாது. தாத்பரிய

மோவெனில், நிக்காஹ் என்ற சுன்னத்தான காரியத்தில் அது சம்பந்தமான கிரியைகள் யாவும் மார்க்கக் கட்டளை கோட்பாடுகளை யனுசரித் துள்ளவைகளாக இருக்கின்றனவா? என்ற விஷயத்தில் என் கவனஞ் செலுத்தக்கூடாது? மேலும் கலியாணக்காரர்கள் தங்கள் செல்வ அந்தஸ்தை பாராட்டி அதற்குட்பட்டே கலியாண சம்பந்தமான செலவுகளை கவனிக்கவேண்டும்; வலீமா விருந்து செய்தல் தடையின்றி சுன்னத்தான காரியமே. ஆனால் அதையும் உங்கள் சக்திக் குள்ளாகவே செய்ய வேண்டும். பெண், மாப்பிள்ளைக்கு ஒத்தாசை செய்வதும் நற்காரியமே; உங்களாலியன்ற மட்டில் அவர்களுக்குப் பொருளுதவி செய்யுங்கள். அவர்கள் உங்கள் உதவியைக் கொண்டு தங்கள் குடித்தனக் காரியங்களை ஒரு நல்ல நிலைமையில் ஸ்திரப்படுத்தட்டும். ஆனால் இந்த உதவிக்காக நீங்கள் பெண்ணுக்காக வேண்டி கைக்குத் தங்கக் காப்பும் காலுக்கு விலங்கைப் போன்ற வெள்ளி கொலுசும்செய்து பரிசளிப்பீர்களாகில் மாப்பிள்ளைக்கு அது பிரயோசனப்படாது. அவையாவும் உங்கள் பெயரை விளக்கக் கூடிய மேல் பகட்டுகளேயாம்.

இதற் கேற்பவே, உயர்ந்த துணிமணிகளும் சாதாரணமாய் எச்சமயத்திலும் உடுத்திக்கொள்ள முடியாமல் பெட்டியில் பூட்டி வாழ்நாள் முடிய பத்திரப்படுத்தி வைக்க வேண்டியது தான். மாப்பிள்ளையை பட்டுடைகளைக் கொண்டு சிங்காரிக்கும்படியான ரீதியில் கொண்டு போகாதீர்கள். புழங்கக்கூடிய பாத்திரங்களையும் சாதாரணமாய் உடுத்திக் கொள்ளக் கூடிய துணிமணிகளையும் கொடுங்கள்; இப்படிச் செய்வதைப்பற்றி நம் நபி பெருமானாவர்கள் ஆக்ஷேபித்திருக்கவில்லை.

ஜாபிர் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் "ஜாபிரே! நீர் அன்மாத் (ஒருவித உடை) (கலியாணத்தில் கொடுப்பதற்காக) தயாரித்துக் கொண்டீரா?" என்று என்னைக் கேட்டதற்கு, நான் "அல்லாவுடைய ரசூலே! நாங்கள் அன்மாத்துக்கு எங்கே போவது?" என முறையிட்டேன். அதற்கு நபி பெருமானாவர்கள் "கூடிய சீக்கிரம் அது உமக்கு கிடைக்கப்பெறும்" என்று மொழிந்தார்கள்.

பந்து மித்திரர்கள் கலியாணத் தம்பதிகளுக்காக காணிக்கைகளின் மூலமாய் உதவிபுரிதல் கூடும்; மற்றபடி ஏற்படும் நிகழ்ச்சிகள்

யாவும் தவிர்க்கத்தக்கவைகளே; அந்தோ! முஸ்லிம்கள் வீட்டுக் கலியாணத்தில் அனுவசிய சடங்குகளைக் கொண்டாடுவது எவ்வளவு பரிதபிக்கத்தக்க விஷயம்? நாம் முஸ்லிம் அல்லாதாருடன் பழகினதனுல் நம்முடைய ரக்ஷகரும், வழிகாட்டியும், தலைவருமாகிய திரு நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்களின் திருவடிகளைப் பின்பற்றி நடப்பதை மறந்து போகலாமோ? உலகத்தார் உங்களை நிந்திக்கட்டும். உங்கள் வமிஷத்தார் உங்கள்பால் குறை கூறட்டும். நீங்கள் அல்லா ரசூலுடைய பாதையில் வழிபட்டு நடப்பதில் உலகத்தார்களின் நிந்தனைகளைப் பொருட்படுத்த வேண்டாம். சர்வவல்ல இறைவனுடைய அனுக்கிரக மொன்றே அடியானுக்குப் போதுமானது.

## ஆயிஷா நாயகியின் குடித்தன ஆரம்பம்.

ஹஸ்ரத் ஸித்தீக் அக்பர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய அருமைப் புதல்வியாரும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் நம்பிராட்டியாரும் மூமீன்களுடைய தாயாருமாகிய அம்மாது சிரோன்மணி (ஆயிஷா நாயகி) யின் இளம் பிராயத்தை நோக்கு மிடத்து அவர்கள் அறியாச் சிறுமி யென்றே சொல்லப்படுவதற்கு அவர் உரிமைவாய்ந் திருக்கிறார்கள். ஆனுல் அவர்களுடைய பிராயம் இப்போது ஒருவித மாறுதலையடைகின்றதை கவனியுங்கள். ஏற்கனவே அவர்களுடைய வீட்டில் அவர்களுக்கு ஏற்பட்டிருந்த சுயேச்சை இப்போது அற்றுப் போய் விட்டது. மார்க்கக் கோட்பாடுகளுக்கு உட்பட்டு தம்கணவருக்கு செய்யவேண்டிய சேவைகள் யாவும் அவர்கள் பேரில் விதியாக்கப் பட்டுள்ளன. பெற்றோர் வீடும் நீங்கியது. மக்கத்தை விட்டு மதீனுவுக்கு வர நேரிட்டது.

ஆயிஷா நாயகி திருவுளம் பற்றுகிறார்கள்:-"ஒருநாள் நான்வீட்டிலிருந்து வருகையில் ஒருவர் என் அண்டையில் உட்கார்ந்திருந்தார். றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அச்சமயம்வெளியிலிருந்து வீட்டிற்குள் வந்ததும் என் அண்டையில் உட்கார்ந்திருந்தவரைக் கண்டவுடன் அவர்களுடைய முகம் மாறியது. நான் அதை உடனே அறிந்துகொண்டேன். எனவே, நான் அவர்கள் சமுகத்தில், "அல்லாவுடைய றசூலே! இவர் என் குழந்தைப் பருவத்தில் என்னுடன் பால்குடித்த சகோதரர்" என முறையிட்டேன். அதற்கு

அவர்கள், "ஆயிஷாவே! பால்குடித்த சம்பந்தத்தைப் பற்றி செவ்வனே ருஜுப்படுத்திக் கொள்ளவேண்டும். அதாவது பால் குடிக்கும் காலத்தில் மட்டுமே அந்த சம்பந்தத்தைப் பாராட்டிக் கொள்ளலாமே யொழிய மற்றபடி அதனுல் என்றைக்குமே போதிய சம்பந்த மேற்பட்டு விடாது" என மொழிந்தார்கள்.

ஆயிஷா நாயகி எக்காரியத்திலும் கவலையற்று போயிருந்தாலும் அவர்களது பெற்ருேர் அவர்களை கவனித்துக் கொள்வார்கள் என்ற காலம் மாறிப் போய்விட்டது. றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியை விசேஷ அன்புடன் பாதுகாத்து வருகிருர்களாயினும் அதற்குப் பிரதிபலனுக அவர்களும் (ஆயிஷா நாயகி) நபிபெருமானுரவர்களுடன் மரியாதையாய் நடந்து கொள்ள வேண்டிய தாயிற்று.

மேலும் ஆயிஷாநாயகி இப்போது றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய குடிசைக்கொப்பான ஒரு சிறு வீட்டில் வசித்து வருகிருர்கள். மாமியார், நாத்தினுர் என்பவர்களுக்கிடை ஒருவராவது அவர்களுக்குத் துணையாக இருக்கலாமோ வென்ருல், அப்படியும் காணேம், நபிபெருமானு ரவர்களாகிலும் சதா அவர்களண்டையி லிருந்துகொண்டு அவர்களுக்கு திருப்தியாயும் சந்தோஷமாயும் பராமரித்து வருவார்கள் என்ருலோ, அதுவும் சாத்தியமான விஷயமா யிருக்கவில்லை. நபி பெருமானு ரவர்கள் செய்யவேண்டிய அலுவல்களுக்கு கணக்கில்லை. அவர்கள், அகங்காரம் படைத்துள்ள பெரிய பெரிய அரசாங்கங்களை சீர்திருத்தத்திற்குக் கொண்டுவந்து அவர்களுக் கிடை இஸ்லாத்தை பரவச் செய்யவேண்டிய வேலை முன்னிட்டிருக்கின்றது. அதற்கிணங்க, இந்நிலைமை இஸ்லாத்தின் ஆரம்ப நிலைமையுமா யிருந்து வருவதாகும்; ஆனதுபற்றி, ஆயிஷா நாயகிக்கு அநேகமாய் வீட்டில் தனியே இருந்து வரும்படியான சந்தர்ப்பமே நேரிடுகிறது. இளம் பிராயத்தில் தனியே இருந்து பொழுது போக்குவதும் எளிதன்று என்பதைக் க்வனிக்க வேண்டும்.

## ஆயிஷா நாயகியின் பொம்மை விளையாட்டு.

இளம்பிராயமுள்ள ஆயிஷாநாயகி, பெருமானுரவர்கள்வீட்டிற்கு அழைக்கப்பட்டுப் போனபோது தம் விளையாட்டுப் பொம்மைகளையும் கூடவே கொண்டு போயிருந்தார்கள். அச்சிறு பிராயத்தில் அவர்கள்

அந்த பொம்மைகளைவைத்து விளையாடுவதற்கிணங்கவே (தனிமையாக இருந்து வந்த காலங்களில்) அப்பொம்மையை வைத்து விளையாடிக் கொண்டே தம் மனதிற்கு உல்லாசத்தை யுண்டுபண்ணி வந்தார்கள்.

ஆயிஷா நாயகி கூறுகிறார்கள் "நான் என்னுடைய தோழிகள் சகிதமாய் பொம்மைகளை விளையாடி வந்தேன்" இது சம்பந்தமான இரண்டாவது ரிவாயத்தில் "நான் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களுடைய வீட்டில் பொம்மைகளுடன் விளையாடி வந்தேன்" என்று ஆயிஷா நாயகி யவர்களால் கூறப்பட்டதாக வந்திருக்கிறது. மூன்றாவது ரிவாயத்தில் "ஒரு நாள் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னிடத்திற்கு வந்தபோது நான் பொம்மைகளை வைத்து விளையாடிக்கொண்டிருந்ததைக் கண்ட ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னை நோக்கி "ஆயிஷாவே! அது என்ன?" என்று கேட்டதற்கு, நான் "அது சுலைமான் அலைஹிஸ்ஸலா மவர்களின் குதிரை" என்று பதிலளித்தேன். அதை கேட்டவுடன் பெருமானாரவர்கள் சிரித்தார்கள்.

ஆயிஷா நாயகி மொழிகிறார்கள் "நான் றசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் அதாவது அவர்களுடைய வீட்டிலிருந்துகொண்டு பொம்மை விளையாட்டை விளையாடி வந்தேன். என் தோழிகளும் என்னோடு விளையாட வந்து விடுவார்கள். றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வெளியிலிருந்து வந்து விடுவார்களாகில், என் தோழிகள் அவரவர்கள் வீட்டிற்குப் போய்விடுவார்கள். றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வீட்டை விட்டு வெளியில் செல்லும்போது அத்தோழிகளை என்னிடத்திற்கு அனுப்பி விட்டும் போவதுமுண்டு.

அபூ தாவூதால் அறிவிக்கப்படுகிறது:—ஹஸ்ரத் ஆயிஷா நாயகி திருவுளம்பற்றினார்கள்:-றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களால் "தபூக்சண்டை"யிலிருந்து திரும்பி வீட்டிற்கு வந்தபோது வீட்டிற்குள் ஒரு மூலையில் திறை விடப்பட்டிருந்தது. அதனுள் பொம்மைகள் இருந்துவந்தன. காற்று வீசவே அத்திறை பறந்து போயிற்று. றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் "அவைகள் என்ன" என்று வினவியபோது நான் "என்னுடைய பொம்மைகள்" என்றேன். அப்போது ஸல்லல்லாஹு

அலைஹிவஸல்லம் அவர்கள் இரண்டு சிறகுகளைக்கொண்டு தைக்கப் பட்டிருந்த துணிக் குதிரை யொன்றை குறிப்பிட்டு, "அதென்ன" வெனக் கேட்டபோது நான், "அது குதிரை" என்று விடை கூறினேன். பின்னும் அவர்கள் "குதிரைக்கும் சிறகுகள் உண்டா?" என்று வினவியபோது, "நான் ஹஸ்ரத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் குதிரைகளுக்கு இறக்கை இருந்து வந்ததாகத் தாங்கள் கேள்விப்பட வில்லையா?" என்று சொன்னேன். அதைக்கேட்ட றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிகவும் சிரித்தனர்.

மேற்கூறிய ரிவாயத்துக்களைக் கவனிக்கு மளவில் ஆயிஷா நாயகி நபிபெருமானு ரவர்களுக்கு முன் பொம்மைகளை வைத்து விளையாடுவார்களாயினும், நபிபெருமானு ரவர்களும் அவர்களை விளையாட வேண்டாமென்று தடுக்கமாட்டார்க ளென்பதும் நன்கு வெளியாகின்றது. ஆனால் இதற்கு இரண்டு காரணங்களே யுண்டு. முதலாவது ஆயிஷா நாயகிக்கு மிகவும் சிறு பிராயமிருந்து வந்தது; இரண்டாவது, நபி பெருமானாவர்களும் அச்சிறு வயதுடையவருக்கு எத்தகைய மனக் கலக்கமும் ஏற்படா வண்ணம் அவரைத் திருப்திகரத்துடன் பராமரிக்க வேண்டி யிருந்தது.

### ஆயிஷா நாயகிபால் நபி பெருமானு ரவர்களின் அன்பு.

ஆயிஷா நாயகி யவர்கள் திருவுளமாகிறார்கள்:—"றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்கள், கதீஜா றலியல்லாஹு அன்ஹா அவர்களைப் பற்றி அதிகமாய் புகழ்ந்து பேசுவார்கள். அப்போது எனக்கு உரோச மேற்படுவதுண்டு. நிற்க, றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கதீஜா றலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய சுற்றத்தாரையும் மிகவும் நேசித்து வருவார்கள்.

கதீஜா நம்பிராட்டியாருக்குப் பின், ஸ்திரீகளுக் கிடை நபி பெருமானாவர்களுக்கு யார் யார் மீது, அதிகப் பிரிய மிருந்து வந்தது என்பதற்கு, மர்யம் ஆஸியா, பாத்திமா நாயகி, இவர்கள் சம்பந்தப்பட்ட வகையில் முதல் பிரிவென்றும், இரண்டாவது பிரிவில் கூடியவர்களுள் ஆயிஷா நாயகியே எல்லோருக்கும் தலைமை வகித்தவர்களாவர் என்றும் சொல்லவேண்டும். உண்மையில் கதீஜா நம்பிராட்டியாருக்குப்

பின் ஆயிஷா நம்பிராட்டியாரைக் காட்டிலும் பிரியமுள்ள நம்பிராட்டியார் நபி பெருமானு ரவர்களுக்கு இருந்திருக்க வில்லை என்பது திண்ணம். நம் நபி பெருமானு ரவர்கள் ஜனங்கள் தங்கள் தங்கள் ஸ்திரிகளிடத்தில் பட்சமாய் நடந்து கொள்ள வேண்டு மென்பதற்கு போதனை செய்து வருவார்கள். ஏனெனில் மூடக் கொள்கை நிறைந்த அக்காலத்தில் அராபியர் ஸ்திரிகளை மதிக்கமாட்டார்கள். அநேகர் பெண் குழந்தைகள் பிறந்தவுடன் அவற்றைக் கொன்று விடுவதும் உண்டு.

கொடிய பாதகச் செயல்கள் நிகழ்ந்து வந்த அத்தகைய விடங்களில் அன்பாய் நடந்து கொள்ள வேண்டிய முறை போதிக்கப்படாமலிருந் திருக்குமாயின், அந்த ஜனங்களுக்குள் உணர்ச்சி ஏற்படாமற் போதல் சாத்தியமா யிருந்தது. நபி பெருமானுரவர்கள், தங்கள் நம்பிராட்டியார்களுக்கிடை எல்லோரையும் சமத்துவமாக ஆதரித்து வருவார்கள். ஆனது பற்றியே திருக் குர்ஆனில் நீங்கள் உங்கள் மனைவிமார்களுடன் சமத்துவத்தையும், நீதியையும் கடைபிடித்து நடந்து கொள்ளமுடியும் பட்சத்தில் ஒன்றுக்கு மேற்பட்டு நிக்காஹ் செய்து கொள்ளலாம்'' என உத்தரவு வந்திருக்கிறது. நபி பெருமானுரவர்கள் தங்கள் நம்பிராட்டியார்களுடன் சமத்துவத்தைப் பாராட்டியே நடந்துகொண்டார்களென்பதற்கு அவர்கள், வயோதிகப் பருவத்தை யடைந்த தங்களது நம்பிராட்டியாராகிய ''ஸவ்தா'' றலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கும் அவர்கள் ஆயிஷா நம்பிராட்டியாரைப் போலவே பொம்மைகளை வைத்து விளையாடலாம் என அனுமதியளிக்கலானார்கள்.

## ஆயிஷா நாயகியின் செல்வாக்குகள்.

ஹஸ்ரத் ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ''எல்லா ஜனங்களிலும் ஈமானுக்குரிய நம்பிக்கையுள்ளவன், நன்னடத்தை யுள்ளவனும், தம் வீட்டின் ஜனங்கள் பால் எல்லோரைக் காட்டிலும் அதிகமாய் அன்புகாட்டி வருபவனுமே ஆவான்'' என்று திருவுளம் பற்றினார்கள்.

இரண்டாவது ஹதீதில் ''நான் உங்களைக் காட்டிலும் என் வீட்டினர்களுடன் நல்ல விதமாய் நடந்து கொள்ளுகிறேன்,'' இதே ஹதீது இப்னு மாஜாவால் வரையப் படுகையில், ''நான் என்னுடைய

வீட்டினர்களுக் காகவேண்டி நல்லவனுயிருக்கிறேன்'' என நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றியதாக வந்திருக்கிறது.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப் படுகிறது:— "ஆண்டவன் பேரில் சத்தியம் செய்து சொல்லுகிறேன்; நபிகள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என் வீட்டின் அறையினுடைய வாயிற்படியின்மீது நின்றுகொண்டு பள்ளிவாசலில் விளையாடிக்கொண் டிருந்த ஹப்ஷியர்களின் வேடிக்கையை நான் நபி பெருமானாவர்களின் காது தோள்பட்டையின் இடுக்கிலிருந்து பார்த்துக் கொள்ளும்படியாக திறைபிடித்து நின்றூர்கள். நான் அந்த வேடிக்கை பார்ப்பதினின்றும் சலித்துப்போய் உட்காரப் போகும் வரைக்கும் அவர்கள் நின்று கொண்டே இருந்தார்கள். விளையாட்டுத் தனமுள்ள ஒரு சிறு வயதுப் பெண் தன் விளையாட்டில் கொள்ளக் கூடிய அவாவின் அளவை உத்தேசமிடுங்கள்''.

மேற்கூறிய கடைசி ரிவாயத்தி னின்றும், ஆயிஷா நாயகி வேடிக்கைப் பார்ப்பதினின்றும் களைத்துப்போய் உட்கார்ந்து கொள்ளும் வரையில் நபி பெருமானு ரவர்கள் திறை பிடித்துக்கொண்டே நின்றூர்கள் என்பதும், விளையாட்டுத் தனமுள்ள சிறுபெண் வேடிக்கை பார்த்தலி னின்றும் களைத்துப் போதல் இலேசான விஷயமில்லை என்பதும் ஆயிஷா நாயகியின் மொழிகளைக் கொண்டே நன்கு வெளியாகிறது.

நபி பெருமானூவர்களுக்கு எல்லா விதத்திலும் ஆயிஷா நாயகியின் மன உல்லாசமே அத்தியாவசியமான தென கருதப் பட்டு வந்தமையால், அவர்கள் ஆயிஷா நாயகியின் மனப்போக்கிற்கிணங்க நடந்து கொண்டார்கள். எனவே, முஸ்லிம்களாகிய நாமும் நம்முடைய வீடுகளிலுள்ள பெண்மணிகளுடன் குறிப்பாக முஸ்லிம்கள் தங்கள் தங்கள் மனைவி அல்லது மனைவிமார்களுடன் அன்பாய் நடந்து கொள்ளும் பட்சத்தில் 'ஸ்திரீ புருஷர்' இருவர்களுக் கிடை ஏற்படவேண்டிய நல்ல சம்பந்தங்களுக்கு அவர்கள் போதிய யோக்யதை வாய்ந்து விட்டார்கள் என்று சொல்லத் தடையில்லை.

மேலும், நம் பக்கங்களில் பெண்ஜாதி யானவள் அடுப்பு வேலைக்கும், குழந்தைகளின் சம்ரக்ஷணைக்காகவுமே சொந்தமாக்கப் படுகிறுள் இவ்வேலைகளில் சிறிதளவேனும் கூடக் குறைவு நேர்ந்துபோமாகில்,

அவள் பாடு திண்டாட்டமே. சில மூடப் புருஷர்கள் தங்கள் பெண் ஜாதிகளைக் கண்டபடி திட்டவும், அடிக்கவுங்கூட தலைப்பட்டு விடுகின்றனர். ஐயோ! புருஷன் பெண்ஜாதி அன்னியோன்னியமா யிருந்து வாழ்க்கைப் படுவதற்குரிய லக்ஷணங்களும், ஒற்றுமையும் இதுதானோ? பெண்ஜாதியானவள் ஓர் அன்னிய ஸ்திரியாகிறாள், அவள் அன்னிய வீட்டிலிருந்து வந்தவள். அவளுடைய தன்மை, குணம், நடவடிக்கைகள் யாவும் மாறுபட்டிருத்தல் இயற்கையே. அவள் புருஷனுடைய கையில் கூண்டு லடைப்பட்ட ஒரு பறவையைப்போ லாகிறாள். இந்நிலைமையில் புருஷன் அவளுக்கு நல்ல சாப்பாட்டைக் கொடுத்தும், அவளை நல்லபடியாக உடுத்தாட்டியும், சௌகரியமாய் வைக்கவேண்டிய ஸ்திதியே, அவள் தன்னுடைய பெற்றோர்களின் வீட்டின் ஞாபகத்தை விட்டு புருஷன் வீட்டில் மனப் பிடித்தத்தோடுங் கூடி இருந்து வாழ வேண்டிய ரீதிக்குக் கொண்டுபோய் விடுவதாகும். இதற்கு மாறாக அவள் கஷ்டப்படுவாளாகில், அவளுடைய மனந்தளர்ந்து எவ்விதத்திலும் தன் புருஷனுக் குட்பட்ட சிறைவாசத்திலிருந்து விடுதலை யடைந்து போகவே நினைப்பாள்.

மனிதன் மிருகங்களையும் அன்பாய் பாராமரித்து தனக்கு வசப்படுத்திக்கொள்ளுகிறான். அற்ப மிருகங்கள் மனிதனுடைய அன்பை பாராட்டி அவன் தட்டிக்கொடுத்தவுடன், அவனுக்குக் கீழ்பட்டு நடந்துகொள்ளும்போது, அன்பு விசுவாசத்தால் நிறைந்துள்ள ஸ்திரிவர்க்கத்தினரில் ஒருவள் தன் புருஷனால் அன்பாய் உபசரிக்கப்படும் பட்சத்தில், அவன் அழைப்புக்கு "வந்தேன்" என்று சொல்லியும், அவனுக்குக் கீழ்ப்படியாமலும் போக மாட்டாள்.

சுருங்கக் கூறுமிடத்து, புருஷன் ஸ்திரியை யடக்கி ஆளுவதற்காகவும், இருவர்களும் ஒரே மனப்பட்டு வாழ்வதற்காகவும், அவளை யடிப்பதற்கும், கடிந்து பேசுவதற்கும் பதிலாக பக்ஷமாய் நடந்துகொள்வதே மேலான பரிகாரமாகும். புருஷன் பெண்ஜாதியோடு நடந்துகொள்வதற்குரிய முறையானது இதே விதமாகத்தான் நம் நபி பெருமானாரவர்களால் போதிக்கப்பட்டிருக்கிறது. நபி பெருமானாரவர்களும் தங்களது நம்பிராட்டியார்களுடன் அதே விதமாகத்தான் அன்பாய் நடந்துகொண்டார்களென்பதற்கு மேலே வந்துள்ள விஷயங்களே போதுமான அத்தாட்சிகளாகும். ஹஸ்ரத் ஆயிஷா நாயகி அவர்களால் அறிவிக்கப்படுகிறது:- "ஒரு தடவை ரசூலுல்லாஹி ஸல்

லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னிடம், "ஆயிஷாவே! நீ என்னோடு அதிருப்தி கொள்ளும்போது நான் உன்னுடைய அதிருப்தியை அறிந்துகொள்ளுகிறேன்" என்று மொழிந்தபோது, "அது தங்களுக்கு எப்படித் தெரிகிறது" என நான் கேட்டேன். அதற்கு ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நீ என்னிடத்தில் அதிருப்தி கொள்ளும் சமயங்களில் "இப்ராஹீமுடைய ஆண்டவன் மீது சத்தியம்" என்கிறாய்; உன் அதிருப்தி நீங்கியபோது, "முஹம்மதுடைய ஆண்டவன்மீது சத்தியம்" என்று நீ சொல்வதில்லையா?" எனக் கேட்டபோது, நான் அதற்கு உத்தரமாக, "ரஸூலுல்லாவே! தாங்கள் சொல்வது உண்மையே. நான் அப்படித்தான் செய்வது வழக்கம். நான் தங்கள் திருநாமத்தை நாவால் உரைத்தவுடன் தங்கள் பிரீதி என் மனதில் நிலைகொண்டு விடுகின்றது" என்றேன்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி அவர்களால் அறிவிக்கப்படுகிறது. "நான் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களுடன், யாத்திரையிலிருந்து வந்தேன். அப்போது ஒருதடவை, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், என்னை தங்களுடன் ஒரு குறித்த தூரம்வரையில் ஓடிவரும்படி சொன்னபோது, நான் அவர்களுக்கு முந்தியே ஓடிவிட்டேன். (அதாவது அவர்கள் தோல்வியடைந்து விட்டதுபோலாயிருந்தது.) அப்பால் என் திரேகத்தில் சதை ஏற்பட்டு நான் சற்று புஷ்டியடைந்தபோது, மீண்டுமொருதடவை அப்படியே ஓடினோம். அப்போது ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எனக்கு முந்தி ஓடிபோய், "ஆயிஷாவே! பார்த்தாயா? அன்றைய பகரத்தை வாங்கிக்கொண்டேன்" என மொழிந்தார்கள்.

இந்த ரிவாயத்திலிருந்து நாம் அடையவேண்டிய போதனையோவெனில், மனைவியைக்கொண்டு நாம் நம்முடைய வாழ்நாளின் சேவைகளைப் பரிபூரணமாக வாங்கவேண்டுமாயின், நாமும் அவளுடைய மன உல்லாசத்தைப் பாதிக்கக்கூடாது. மேலும் பெருமானாவர்கள் ஒவ்வொரு வருடமும் அவருடைய புத்திக்கும், தன்மைக்கும் ஏற்ற மன உல்லாசத்துடனேயே அவரை திருப்தியாக்கி வைப்பார்கள் என்பதும் இதனால் வெளியாகின்றது. பித்த நோய்களுக்குப் புளிப்பான ஔஷதங்களைக் கொண்டும், கபரோகங்களுக்கு தித்திப்பான மருந்துகளைக்கொண்டும் சிகிச்சை செய்யப்பட்டு வருகின்றது. இதற்கு

மாருக ஒன்றுக் கொன்ருய்ச் சிகிச்சை செய்யப்படுமாகில், அது தீங்கை விளைவிக்கு மென்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆயிஷா நாயகி சிறு பிராயமும், மெலிந்த சரீரமும், குறைந்த பலமும் வாய்ந்தவர்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தங்களுடைய திருவாழ்நாட்களின் பெரும்பாகத்தை எப்பேர்ப்பட்ட பராக்கிரம சாலிகளையும் எதிர்த்து சண்டை செய்வதில் கழித்தவர்கள். அத்தகைய வீரதீரர் ஆயிஷா நாயகியை முதல் ஓட்டத்தில், மிகைக்காமற் போய்விட்டதானது தாம் வேண்டுமென்றே ஆயிஷா நாயகிக்குப் பின்னடைந்து கொள்ளும்படியான அளவுக்கு மெதுவாக ஓடினார்களென்பதையும், சிறு பிராயமுள்ள குழந்தைகளுக்கு அவைகள் ஒரு காரியத்தில் முன்னடைவ தினின்றுமே அதிக சந்தோஷ மேற்படுதல் இயற்கை என்பதை முன்னிட்டுமே அப்படிச் செய்தார்கள் என்பதையும் வெளிப்படுத்துவதாகும். ஆனுல், மறுதடவை ஆயிஷா நாயகிக்குப் பகுத்தறிவு எற்படும்படியான பிராயம் நிறைந்தபோது, "ஆண்மக்கள் பெண்மக்களை, அடக்கியாளத்தக்க சக்தி வாய்ந்திருப்பவர்கள்" என்னும் இரகசியத்தை ஆயிஷா நாயகிக்கு நன்கு உணர்த்தி விட்டார்கள்.

இதுகாறும் கணவர், மனைவிகளைத் திருப்திகரமாய் நடத்தவேண்டிய விஷயங்களின் சம்பந்தமான ரிவாயத்துகள் வரையப்பட்டு வந்தன. ஆனுல் மனைவிமார்கள் பேரில் கணவர்களுக்கு எத்தகைய பதவி வாய்ந்திருக்கிற தென்பதைப் பற்றியும், மனைவிமார்கள் தங்கள் கணவர்களுக்கு, எம்மட்டில் படிந்து நடந்துகொள்ள வேண்டும் என்பதைப்பற்றியும், இதனடியில் முக்கியமான இரண்டொரு ரிவாயத்துக்களை விளக்கிக் காட்டுவோம்.

ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியா ரவர்களால் அறிவிக்கப்படுகிறது:— "ஒருதடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் முஹாஜிர்களும், அன்ஸார்களும், கூடிய கூட்டத்தினிடையே பிரசன்னமா யிருந்துவரும் சமயத்தில், ஒட்டகமொன்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களுக்கு முன் வந்து, ஸஜ்தா (நெற்றிப் பணிவிடை) செய்தது. அதைக்கண்ணுற்ற ஸஹாபாக்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை நோக்கி, "அல்லாவுடைய ரசூலே! தங்களுக்கு நாற்கால் பிராணிகளும், மரஞ் செடிகளும், ஸஜ்தாசெய்து வருகின்றனவே!

பகுத்தறிவுள்ள மானிடர்களாகிய நாங்கள் தங்களுக்கு ஸஜ்தா செய்வதற்கு உரிமை வாய்ந்திருக்கவில்லையா?'' என முறையிட்டபோது, பெருமானாரவர்கள், "கூடாது, நீங்கள் உங்களைப்படைத்த இறைவனொருவனையே வணங்குங்கள்; உங்களுடைய சகோதரனாகிய என்னை கௌரவப்படுத்துங்கள். நான் ஸஜ்தாவுக் குரியவனாக இருந்திருக்கும் பட்சத்தில் ஸ்திரிகள் தங்கள் தங்கள் புருஷர்களுக்கு ஸஜ்தா செய்யலாமென உத்தரவளித்திருப்பேன்'' என திருவுளம் பற்றினார்கள்.

இமாம் அஹமத் அவர்களால் அறிவிக்கப்படுகிறது:-நபி பெருமானாரவர்கள் திருவுளம் பற்றினார்கள். ''ஓ ஸ்திரியே! உன் புருஷன் உன்னைப் பார்த்து ''நீ மஞ்சள் மலையின்பேரிலுள்ள சல்லிகளை யெடுத்து கருமலையின் பேரில் போடு. கருமலையின் சல்லிகளை வெண்மலை மீது போடு'' என உத்தரவு கொடுத்தபோதிலுங் கூட, நீ அவனுடைய உத்தரவுக்குக் கீழ்படிந்தே தீரவேண்டும்.''

பெண்ஜாதி புருஷனுக்குக் கீழ்பட்டு நடக்கவேண்டு மென்பதைப்பற்றி எம்மட்டில் கண்டிப்பாய் சொல்லப்பட்டிருப்பதை உணரவேண்டும். புருஷனுடைய கட்டளையை நிறைவேற்றி வைக்குமளவில், மனைவியால் அக்காரியம் செய்து முடிக்கக்கூடாதவாறு அது கடினமாக இருந்தபோதிலும் அக்காரியத்தில் ஈடுபட வேண்டும். அவனுடைய சொந்த அடியார்கள் அவனுடைய கட்டளைகளை அனுசரிக்குமிடத்து அவ்வாறே நடந்துகொண்டு அரும் பெரும் பதவிகளை அடைந்து போகின்றனர்.

## நீதியும் சமத்துவமும்.

நம் நபி பெருமானாரவர்களுக்குத் தங்கள் நம்பிராட்டியார்களுக்குள் ஆயிஷா நாயகி பால் அதிக பிரீதி யேற்பட்டிருந்த தாகிலும், அவர்கள் தங்களுடைய எல்லா நம்பிராட்டியார்களோடும் சமத்துவமாகவே பழகிக்கொள்வார்கள். திருஷ்டாந்தமாக ஹஸ்ரத் ஆயிஷா நாயகிக்கு எவ்வாறு தனியே ஒரு அறைவீடு இருந்து வந்ததோ, அவ்வாறே, இதர நம்பிராட்டியார்களுக்கும் தனித்தனியே இருந்து வந்தது. எல்லோருடைய சம்ரக்ஷணையும் ஒரே விதமானது. நபி பெருமானாரவர்கள் கிரமப்படியே எல்லோரிடமும் செல்லுவார்கள்.

ஆனாலோ, இறைவனுடைய அற்புதச் செயலையும் கவனிப்போம். இறைவன் உலக வாசிகளுக்கு அவர்கள் தங்களுக்குள் கைக்கொள்

ளும் கிரமத்திலும் தன் புறத்தால் ஒருவித விகற்பத்தை யுண்டாக்கித் தன்னை நினைக்கச்செய்கிருன் என்பதற்கிணங்க, நபி பெருமானாரவர் கள் எல்லா நம்பிராட்டியார்களிடமும் முறைப்படி ஒவ்வொரு தடவை யாக சென்று வருவதற்கிடையே ஆயிஷா நாயகியிடம் இரண்டு தட வைகளில் செல்லும்படியாகவும் நேரிட்டுள்ளது. அதாவது,

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி அவர்களால் அறிவிக்கப்படுகின்றது. "ஹஸ்ரத் 'ஸவ்தா' றலியல்லாஹு அன்ஹா அவர்கள் அதிக வயோ திகப் பருவத்தை யடைந்து விட்டபோது அவர்கள், நபி பெருமானா வர்களிடம் "றசூலுல்லாவே! நான் என்னுடைய முறையை ஆயிஷாவு க்கு விட்டுவிடுகின்றேன்" என முறையிட்டதிலிருந்து நபி பெருமானா ரவர்கள் ஆயிஷா நாயகியிடம் இருமுறை போய்க் கொண்டிருக்க நேரிட்டது.

ஆயிஷா நாயகியிடத்து நபி பெருமானாவர்களுக்கு அதிக பிரீதி யேற்பட்டிருந்த தாயினும், அவர்கள் சமத்துவத்தையும், நீதி நெறியை யும் கடைபிடிக்கும் வழியில், "இறைவனே! என்னில் எத்தகைய அநீதத்தையும், ஏற்படுத்தி நான் எவருடனும் கிரமந் தவறி நடந்து கொள்ளும்படி செய்யாதே" என அல்லும்பகலும் ஆண்டவனுடைய சந்நிதானத்தில் பிரார்த்தித்து வருவார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியால் அறிவிக்கப் படுகிறது:—"றசூலுல் லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களுடைய நம் பிராட்டியார்களுக்கிடை முறை யேற்படுத்தி யிருந்தது மட்டு மன்றி, அவர்கள் அல்லாஹுத் தஆலாவிடத்தில், "நாயனே! என்னுடைய சக்திக்குட்பட்ட விஷயங்களில் நான் முறை ஏற்படுத்தி யிருக்கிறேன். ஆனல் உன்னுடைய சக்திக்குட்பட்ட விஷயங்களில் நான் தலையிடா மற் போவதற்கு நீ என்னைப்பற்றிக் கடிந்து கொள்ளாதே" என்று பிரார்த்தித்துக் கொள்வார்கள்.

இதனின்றும் நபி பெருமானாவர்களுக்கு நீதியைக் கடைபிடிக்க வேண்டும் என்ற விஷயத்தில் எவ்வளவு கவலை இருந்து வந்தது என் பது செவ்வனே விளங்கக் கிடக்கின்றது. ஆயிஷா நாயகிபால் நபி பெருமானாவர்களுக்கு ஏற்பட்டிருந்த அளவுகடந்த பிரீதியும், இறை வனுடைய சார்பைக் கொண்டுள்ளதே. ஏனெனில், றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வபாத்திற்குப் பின் ஆயிஷா நம் பெருமாட்டியாரைக்கொண்டு இறைவனது அரும்பெரும் சேவைகளும் வெளியாக வேண்டியிருந்தன.

அதற்காக நபி பெருமானாவர்களுக்கு ஆயிஷா நாயகி யிடத்தில் அவ்வளவுக்கு பிரீதி ஏற்பட்டிராத பட்சத்தில், அநேக விஷயங்கள் ஆயிஷா நாயகி வரையில் எட்டியிருக்க மாட்டா. அதனின்றும், மார்க்கக் கடமைகளை நிறைவேற்றி வைப்பதிலும் பெருங் கஷ்ட நஷ்டங்கள் சம்பவித்திருக்கக் கூடும். இறைவனுடைய ஒவ்வொரு காரியமும் கிரமத்தைப் பொருந்தியதே.

ஆயிஷா நம்பிராட்டியா ரவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள்:— "றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், பிரயாணம் போக நேரிடுமாகில், தம்முடன் எந்த பிராட்டியாரை அழைத்துக்கொண்டு போக வேண்டும் என்பதற்குச் சீட்டுப் போடுவார்கள். அந்த சீட்டுகளில் முதலாவதாக எடுக்கப்படும் சீட்டில் எந்த பிராட்டியாருடைய பெயர் வெளியாகிறதோ, அவரையே அழைத்துச் செல்லுவார்கள்." ஆயிஷா நாயகியே தங்களோடு இருக்க வேண்டுமென அவர்கள் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) விரும்பி யிருப்பார்களானால், அவர்கள் இவ்வாறு சீட்டுப் போடுவதற்கு அவசிய மேற்பட்டிராது.

மனிதர்களுக்கிடை சிலருக்கு சிலர்மீது மேம்பாடு கொடுக்கப்பட்டிருப்பதாக திருக் குர்ஆனில் வந்திருப்பதற் கேற்ப, நபி பெருமானாவர்களுக்கு ஆயிஷா நம்பிராட்டியாரிடத்து விசேஷ பிரீதி ஏற்பட்டிருந்தது. ஆனாலோ, நீதி சமத்துவமான விஷயத்தில், ஆயிஷா நாயகிக்கு இதர நம்பிராட்டியாரைக் காட்டிலும் எத்தகைய மேன்மையும் உண்டென்பது கிடையாது.

ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியார் அவர்களால் அறிவிக்கப்படுகிறது:-ஒரு நாள் நபி பெருமானா ரவர்கள் என்னிடத்தில் உட்கார்ந்துக் கொண்டிருந்த சமயம் எங்களுக்குச் சிறுவர்களுடைய இரைச்சல் கேட்டது. உடனே நபி பெருமானா ரவர்கள் எழுந்திருந்து போய் பார்த்தகாலத்தில், வெளியில் ஹபஷ் ஸ்திரி யொருத்தி கூத்தாடிக் கொண்டிருப்பதையும், அவளைச் சுற்றிச் சிறுவர்கள் சூழ்ந்து நின்று வேடிக்கைப் பார்ப்பதையுங் கண்டார்கள். உடனே ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், நீயும் வந்து இந்த வேடிக்கையைப்பார்க்கிறாயா என மொழிந்தபோது, நான் போய் அவர்களுடைய தோளின்மீது மோவாய்க் கட்டையை வைத்துக்கொண்டு மறைந்திருந்து வேடிக்கைப் பார்க்கத் தொடங்கினேன். நபி பெருமானா ரவர்கள்

பார்த்தது போதுமாவென்று பொறுத்துப் பொறுத்து என்னைக் கேட்டபோதெல்லாம், நான் இன்னும் கொஞ்சம் பார்க்கிறேன் என்று சொல்லிக்கொண்டே வருவதற் கிடையில், திடீரென ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் அங்கு வந்து விட்டார்கள். அதே சமயம் எல்லோரும் (கூத்தாடிக்கொண் டிருந்தவனைச் சூழ்ந்து நின்று வேடிக்கைப் பார்த்துக்கொண் டிருந்தவர்கள்) கலைந்து விட்டார்கள். அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நான் பைத்தியம் பிடித்த மனிதப் பேய்களைப் பார்த்துக்கொண் டிருந்தேன்; அப்பேய்கள் உமரைக் கண்டவுடன் ஓடிப்போயின" என்று மொழிந்தார்கள்."

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மறுமைக் குரிய இல்மு அதாவது, அறிவில் நபிமார்களுக் கெல்லாம் கடைசி நபி என விளங்கிக்கொண்டது போலவே, உலக வாழ்க்கைக் குரிய நற்போக்கிலும், அவர்களைக் காட்டிலும் மேலானவர்கள் இருந் திருக்கவில்லை. இத்தகைய அரிய கொள்கையின் ஆதாரவாகவே அவர்கள், ஆயிஷா நாயகியைத் திருப்தி செய்து வைப்பதில் ஈடுபட் டிருந் தார்கள். அன்றாடம் வீட்டில் நிகழ்ந்து வரக்கூடிய அற்ப சொற்ப காரியங்களிலும் சதா சண்டைச் சச்சரவுகளை ஏற்படுத்திக் கொள்வது பாதகமானதாகும் என்பது அவர்களுக்குத் தோன்றியது. மனிதன் வீட்டை விட்டும் வெளிப்பட்டானாகில், அவன் தனது ஜீவனத்திற் காக வேண்டி பகலெல்லாம் பாடுபடுகிறான்; மன்னன் தனது செங் கோன் முறைகளின் சீர்திருத்தத்தில் தீர்க்காலோசனை செய்கிறான். பிச்சைக்காரன் தன் வயிறு வளர்ப்பதற்காக வீடு வீடாய்ச் சென்று பிச்சைக் கேட்கிறான். கூலிவேலைக்காரன் கூலிவேலையிலும், வியாபாரி வியாபாரத்திலுமாக, ஒவ்வொரு தொழிலாளியும் தத்தம் தொழிலில் அமர்ந்துவிடுகிறான்.

பட்சிகளுங்கூட தம் கூடுகளை விட்டும் இறை தேட அங்கு மிங் கும் பறந்து திரிகின்றன. முடிவாக எல்லா ஜீவ வர்க்கங்களும், வெளிப் புறங்களிலுள்ள வேலையை முடித்துக்கொண்டு தம் இருப் பிடங்களுக்கு வந்து விடுகின்றன. ஆனால், மனிதனுடைய கடமையோ வெனில், வீட்டிற்குள் வந்தவுடன் முதலில் வீட்டிற்கு என்ன வேண்டும் என்பதை விசாரித்து அதற் குரிய அவசியத்தைப் பூர்த்திசெய்யவேண்டும். அடுத்தாற்போல்

பிள்ளைக் குட்டிகளைக் கவனிக்க வேண்டும். அதாவது, அவர்களுக்கு ஏதேனும் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறதோ என்பதையறிந்து, அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்துவைப்பதுடன் அவற்றிற்குரிய அவசியங்களையும் பூர்த்திசெய்து வைக்கவேண்டும். அதற்கடுத்தாற்போல் மனைவியை விசாரிக்க வேண்டும். ஏனெனில் ஆடவனுடைய சௌகரியங்களைப் பிரத்தியேகமாக சேர்ப்பித்து வைப்பவள் அவனுடைய மனைவியே ஆகிறாள். அவளுடன் நேசமாக நடந்துக்கொள்வதே அவள் தன் புருஷனோடு அன்னியோன்னியமாய் நடந்துகொள்ளத்தக்க சாதனமாய் விடுவதாகும்.

மேற்கூறிய முறையில் நடந்து கொள்ளாத கணவன் தன் வீட்டிற்கு வருதல் வீணாகும். அதாவது, அவன் வீட்டில் தாமதிப்பதிலும் புண்ய மில்லை. மேலும் இப்பேர்ப்பட்டவன் தன் அதிருப்திகரமான பழக்க வழக்கங்களின் காரணமாய் தன்னைத் தானே கஷ்டத்திற் காளாக்கிக் கொள்வதைத் தவிர மற்றவர்களுக்கும் கஷ்டத்தைக் கொடுப்பவனைப் போலாகின்றான்.

இதே கொள்கைக் கோட்பாடுகளின் கீழ், நம்நபி பெருமானாரவர்கள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தங்கள் வாழ் நாள் வரையில் தங்கள் கூட்டத்தார்களுக்கு இது விஷயமாய் போதித்து வருவார்கள். தப்பித் தவறி ஆயிஷா நாயகி எவ்விஷயத்திலாவது நபி பெருமானாரவர்கள் பால் ஏதேனும் சொல்ப மனஸ்தாபங்கொண்டு விடுவார்களானால் நபி பெருமானாரவர்கள் ஆயிஷா நாயகிக்கு மலர்ந்த முகத்துடனேயே சமாதானத்தைச் செய்து வைப்பார்களேயன்றி, சிறிதைப் பெரிதாக்கிக் கடிந்து கொள்ளமாட்டார்கள். புருஷர்களுக்கு ஸ்திரீகளால் நிறைவேற்றப் படவேண்டிய கடமைகள் பல உண்டென்பதை நபி பெருமானாரவர்கள் சிந்தித்து, அதனால் ஆயிஷா நாயகியை அதிகமாய் நேசித்து வருவார்கள்.

ஹஸ்ரத் நொஅமான் பின் பஷீர் அவர்களால் அறிவிக்கப் படுகிறது:-ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், நபி பெருமானா ரவர்களுடைய வீட்டிற்குள் பிரவேசிப்பதற்காக நபி பெருமானா ரவர்களிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு உள்ளே சென்றபோது, ஆயிஷா நாயகி உரக்கப் பேசுவதைக் கேட்டார்கள். உடனே ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவா

கள் ஆயிஷா நாயகியின் கைகளைப் பற்றிக்கொண்டு, "ஜாக்கிரதை! இனி நீ றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன்னிலையில் இவ்வளவு உரத்த சத்தத்துடன் பேசுவதைக்காண நான் சகியேன்" எனக் கூறி ஆயிஷாவை அறையப்போகும் சமயம், நபி பெருமானாரவர்கள் ஹஸ்ரத் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களை ஒன்றும் செய்யா வண்ணம் தடுத்து விட்டனர். ஆயினும் ஹஸ்ரத் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆயிஷா நாயகியின் மீது கோபத்துடனேயே போய்விட்டார்கள். அவர்கள் போனவுடன் நபி பெருமானாரவர்கள் ஆயிஷா நாயகியை நோக்கி, "நான் அந்த மனிதருடைய கையை விட்டும் உம்மை எவ்வாறு விடுதலையாக்கினேன் என்பதை நீர் கவனித்தீரா?" எனத் திருவுளம் பற்றினார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியாரால் அறிவிக்கப்படுகிறது:-என் தந்தையாராகிய ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் மேற் கூறிய சம்பவத்திற்குப் பின் வெகு நாள் வரையில் எங்கள் வீட்டிற்கு வாராம லிருந்தார்கள். அப்பால் ஒரு நாள் அவர்கள் அனுமதியின்பேரில் எங்கள் வீட்டிற்குள் வந்தபோது, நானும் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும், சமாதானத்துடனேயே உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பதைக் கண்டு, "ஏற்கனவே நீங்கள் இருவர்களும் உங்களுடைய சண்டையில் என்னைச் சேர்த்துக்கொண்டது போலவே உங்கள் சமாதானத்திலும் சம்மந்தப் படுத்திக் கொள்ளுங்கள்" என்று கூறியபோது, றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "மிகவும் சரி; நாம் அவ்வாறே உங்களைச் சேர்த்துக்கொண்டோம்" என்று மொழிந்தார்கள்.

றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹஸ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய மக்கள்களிலாகவோ இருந்துவந்தார்கள். ஆயினும் ஏற்கனவேயுள்ள நபிமார்களுக்கு எந்தெந்த வர்ணிப்புகள் இறைவனால் அருளப்பட்டுப் போயிருந்தனவே, அவை யாவும் நபி பெருமானாரவர்களில் ஒருங்கே பொருந்தியிருந்தன. ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஹவ்வா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் பால் எம்மட்டில் அன்பு ஏற்பட்டிருந்ததென்பதற்குத் திருக் குர்ஆனில் அதற்குரிய விஷயம் கண்டிருக்கிறது. ஆனது பற்றி நபி பெருமானாரவர்கள் ஆயிஷா நாயகியிடத்தில் பரிபூரண அன்புள்ளவர்களாக இருந்திராவிட்டால், ஆதம், ஹவ்வா அவர்களுக்கிடை

ஒற்றுமை அபிமானத்தால் ஏற்பட்டிருந்த மேம்பார்ட்டில் தேர்ச்சி யடைந்திருக்க மாட்டார்கள். அப்பால் அவர்களுக்குரிய வர்ணிப்பு களில் ஒரு முக்கியாம்சம் குறைந்தே போயிருக்கும்.

நம் நபி பெருமானாரவர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஷரீஅத் என்னும் மார்க்கத்தைப் பற்றிய வியாக்கியானம் திருக் குர்ஆனில் மொழியப்பட்டிருக்கிறது. ஹஸ்ரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய இரண்டு மனைவிமார்களுக்குள் 'ஸாரா' பெயருள்ள மனைவியாரிடத்தே ஹஸ்ரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அதிகப் பிரியமிருந்து வந்தது.

நபி பெருமானாரவர்கள் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய வமிசத்தில் பிறந்து இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய மார்க்கத்தை அனுசரித்து அவர்களுடைய முன்னோர்களைப் பின் பற்றி நடவாமலு மிருந்திருப்பீர்களாகில், அவர்களுடைய வமிச வழியின் கிரமத்திற்கே ஒழுங்கீனமாக இருந்திருக்கும்.

நபி பெருமானாரவர்கள் ஆயிஷா நாயகியுடன் அன்பாய் பழகிக் கொண்டதற் கிணங்கவே, ஆயிஷா நாயகியும் நபி பெருமானா ரவர்கள் பால் அதிக பிரீதியுடையவர்களாக வாழ்ந்து வந்தார்கள். இருவர்களுடைய பிரியமும் ஒரே தரத்திலுள்ளதாக இருந்து வந்தது.

ஒரு தடவை உம்முல் மூமினீன் (மூமினனவர்களின் தாயார்) ஆயிஷா நம்பிராட்டியாரவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் பற்றி புகழ்ந்து பேசுவதற்கிடையே, ஹஸ்ஸான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி பெருமானாரவர்களைப் பற்றி புகழ்ந்து பேசியுள்ள மொழிகளுக்கு நபி பெருமானாரவர்கள் முற்றிலும் தகுதி வாய்ந்தவர்கள் என்பதைக் குறிப்பிட்டார்கள்.

ஆயிஷா நாயகி யவர்களால் அறிவிக்கப்படுகிறது:-"ஒரு தடவை நான் நூல் இழைத்துக்கொண் டிருக்கையில், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களது செருப்பைப் பழுது பார்த்துக்கொண் டிருந்தார்கள். அப்போது அவர்களது திரு நெற்றியின்பேரில் வியர்வை கண்டது. அந்த வியர்வையில் துலங்கிய ஜோதியைக் கண்டு நான் மயங்கிப் போனேன். அப்பால் நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், "தங்கள் நெற்றியில் தற்சமயம் வெளி வந்துக்கொண் டிருக்கும் வியர்வையையும், அதனுல் ஏற்பட்டுக் கெண்டிருக்கும் ஜோதியையும் 'கபீருல்

ஹஸ்லி' தம் கண்ணுர பார்வையிடும் பட்சத்தில், அவர் தங்கள் ஒளியைப்பற்றி கோர்வைசெய்துள்ள கவிகளுக்குப் போதுமான அத்தாட்சி ஏற்பட்டுப் போயிருக்கும்'' என்று சொல்லிவிட்டு நான் அவரால் கோர்வை செய்யப்பட்டுள்ள கவிகளையும் படித்தேன். என் கவிகளைக் களைக் கேட்ட ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தாங்கள் செய்துகொண் டிருந்த வேலையை நிறுத்திவிட்டு என்னிடத்திற்கு வந்து எனது இரு கண்களுக்கு மத்தியில் முத்தங் கொடுத்து, ''ஓ ஆயிஷாவே! அல்லாஹுத் தஆலா உனக்கு நற்பயனைக் கொடுப்பானுக! உன்னுடைய மொழிகளைக்கொண்டு எனக்கு ஏற்பட்டுள்ள சந்தோஷத்தைப் போன்ற சந்தோஷம் இதற்கு முன் எனக்கு ஒருநாளாவது ஏற்பட்டிருந்ததாக சொல்லமுடியாது'' என்று கூறினர்கள்.''

ஹஸ்ரத் அபூநயீம் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் ஆயிஷா நாயகியின் ரிவாயத்தொன்றைப் பற்றி அறிவிக்கப்படுகிறது:—றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சௌந்தரியத்தில் எல்லா மனிதர்களுக் கிடையும் மிகவும் பிரகாசமுள்ள மேனியை வாய்ந்திருந்தார்கள். நபி பெருமானவர்களின் மேனியின் பிரகாசத்திற்கு அவர்களைப் பற்றி புகழ்ந்துள்ளவர்கள் யாவரும் அவர்களின் திருமேனியைப் பூரண சந்திரனுக்கு ஒப்பிட்டுச் சொல்லி யிருக்கிருர்கள். அவர்களுடைய வியர்வை முத்தைப்போல் பிரகாச முள்ளதாயும், கஸ்தூரிக் கொப்பான வாசனை யுடையதாயுமிருந்தது.

இப்னு அஸாகர் அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ஹஸ்ரத் ஆயிஷா நாயகி திருவுளம் பற்றினர்கள்; ''நான் விடியற்காலத்தில் புடவை யொன்றைத் தைத்துக்கொண் டிருந்தேன். அப்போது, என் தையல் ஊசி கீழே நழுவி விழுந்துவிட்டது; நான் அதை தேடிப் பார்த்தேனுயினும், இருளாக இருந்து வந்தமையால், அது என்கண்ணில் புலப்பட வில்லை. இதற்குள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வெளியிலிருந்து வீட்டிற்குள் விஜயஞ் செய்தவுடன் அவர்களினது மேனியின் ஒளியைக்கொண்டு நான் என்னுடைய தையல் ஊசியை எடுத்துக் கொண்டேன்.''

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் மொழிகிருர்கள்:-''நல்லவாசனை எனக்குக் கிடைக்குமாகில் நான்அதை ரசூலுலலாஹி ஸல்லல்லாஹு

அலைஹிவஸல்லம் அவர்களுக்குப் பூசுவது வழக்கம். நபி பெருமானு ரவர்களுடைய புனித தாடி ரோமங்களி னின்றும் வாசனையுடைய வாடை வெளியாவதை நான் முகர்ந்திருக்கிறேன்'' இதிலிருந்து ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களுக்கு நபி பெருமானுரவர்க ளிடத்தில் எவ்வளவு பிரியமிருந்து வந்தது என்பதும் நன்கு வெளியாகின்றது. அதாவது, ஆயிஷா நாயகிக்கு எந்த வஸ்து பிரியப்பட்டு வந்ததோ, அதை அவர்கள் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்காக் வேண்டி கொடுத்து விடுவார்கள். றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு ஆயிஷா நாயகி யவர்களால் தலைக்குச் சீப்பிடப்பட்டும் வந்தது. நபி பெருமானு ரவர்களின் தலை ரோமங்களைச் சீவி விட்டு வந்த ஆயிஷா நாயகி யவர்கள் நபி பெருமானு ரவர்களின் உச்சித் தலையிலிருந்து உரோமங்களை இரு பாகமாக சீவிப் பிரித்து நெற்றியின் பேரிலுள்ள உரோமங்களை இரு கண்களின் பேரிலும் கிடக்க விடுவார்க ளெனவும் மொழிந்திருக்கிறுர்கள்.

ஆயிஷா நாயகியிடத்து றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு உண்மையான பிரியமிருந்து வந்தது என்பதற்கேற்ப, ஆயிஷா நாயகி தங்களைவிட்டுப் பிரியாதபடி நபி பெருமானு ரவர்கள் கவலைப்படுவார்கள். எம்மட்டிலென்றுலோ, நபி பெருமானு ரவர்கள் வபாத்து நேரம் நெருங்கி விட்டபோது, ஆயிஷா நம்பிராட்டியாரிடமே தாங்கள் இருக்கவேண்டு மென்பதாக விருப்பங் கொண்டிருந்தார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்கள் கூறுகிறுர்கள்:—''றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத்துடைய நிலைமைக்கு எட்டியபோதுங்கூட அவர்கள் என்னிடம், ''நான் நாளை எங்கே இருப்பேன். நான் நாளை எங்கே யிருப்பேன்'' என்றே கேட்டு வந்தார்கள்.'' (இதனின்றும் நபி பெருமானுரவர்கள் தாம் ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யிடத்திலேயே இருக்கவேண்டுமென, அபிப்பிராயங் கொண்டிருக்கலாம்.) சீக்காயிருந்த சமயம், நபி பெருமானு ரவர்கள் அவர்களது இஷ்டத்திற் கிணங்க, எங்கே வேண்டுமானுலும் இருக்கலாம் என்று, அவர்களுடைய நம்பிராட்டியார்கள் யாவும் நபி பெருமானுரவர்களுக்கு அநுமதிகொடுத்து விட்டதன் பேரில், அவர்கள் வபாத்தடையும் பரியந்தம், ஆயிஷா நாயகியுடைய வீட்டில் அவர்களுடனேயே இருந்து வந்தார்கள்,

"ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு என்னைக் காட்டிலும் பிரீதியுள்ள நம்பிராட்டியார் இருக்கவில்லை" என்று ஆயிஷா நாயகி மொழிந்தார்கள் என, மிஷ்காத் ஷரீபில் வந்திருக்கின்றது. அபூஉஸ்கான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அம்ருபின் ஆஸ் அவர்களை 'ஸாதுஸ்ஸலாஸில் சேனையுடன் அனுப்பிவைத்தார்கள். அப்போது நான் நபி பெருமானாரவர்களிடம், "தங்களுக்கு எல்லோரிலும் அன்பார்ந்தவர்கள் யார்" எனக்கேட்டதற்கு நபிபெருமானாரவர்கள், "ஆயிஷாவே யாவார்" என்று மொழிந்தார்கள். பின்னர் நான், "ஆடவர்களில் யார்" என்று கேட்டபோது, ஆயிஷாவின் தந்தை யென்றும், அவர்களுக்கு அடுத்த படி உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் என்றும் கூறினார்கள்.

ஆயிஷா நாயகியின் பதவியைப்பற்றி அநேகர் பல்வேறு அபிப்பிராயங்களைக் கொண்டு வீண் விவாதங்களைச் செய்து வருகின்றனர். அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை அல்லாவுடைய தீர்க்க தரிசியென்றும், ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்களை நபி பெருமானாரவர்களின் கூட்டத்திலுள்ள சாதாரண ஒருவரென்றும், நினைப்பதே காரணமாகும். நபிகள் நாயகமவர்களின் உம்மத்திலுள்ள, சாதாரணமான ஒரு உம்மத்தியின் மேன்மையை ஆயிஷா நாயகிக்கும் உண்டென்று சொல்லவும் முடியுமோ? ஆயிஷா நாயகி நபிகளுக்கெல்லாம் தலைவராகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் நம்பிராட்டியார் ஆனதுபற்றி, அவர்களுடைய பதவியும் உயர்வானதே. பேகம் என்பது சாதாரணமாக எல்லா ஸ்திரீகளுக்காகவும் பேதமின்றி வழங்கப்பட்டு வருஞ் சொல்லாகும். ஆனாலோ அச்சொல் ஒரு பாதுஷாவுடைய மனைவிக்காகவும் உபயோகப்படும்போது, ஏழைக்கும் பாதுஷாவுக்குமுள்ள வித்தியாசம் கவனிக்கப் படவேண்டும்.

இமாம் கஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், "அஹ்யால் உலூம்" என்னும் கிதாபில் கணவன் தன் பெண்ஜாதியோடு நடந்துகொள்வதற்கு, 14-வித அம்சங்களைக் கடைபிடிக்க வேண்டுமென குறிப்பிடுகிறார்கள். அவற்றுள் (1) நல்லொழுக்கம், (2) தமாஷ், (3) உணவு, உடைகொடுத்தல், (4) கல்விப்பயிற்சி, (5) நீதி(நீதியான

அம்சங்களை இங்கு குறிப்பிடத்தேவையில்லை.) கணவன் மனைவியுடன் சதா சந்தோஷமாகப் பழகிக்கொள்ள வேண்டுமென்றும், மனைவி ஏதேனும் தவறுதலின்பேரில் கணவனுக்குக் கஷ்டத்தைக் கொடுத்து விடுவாளாகிலும், அதை சகித்துக்கொள்ள வேண்டுமென்றும், ஏனெனில், ஸ்திரி வியர்த்தமான புத்தியுடையவ ளானதால் அவள்மீது இரக்கம் பாராட்டவேண்டும் என்றும் வரைந்திருக்கிறார்.

சர்வ வல்ல இறைவன், "ஸ்திரிகளுடன் நல்லவிதமாகப் பழகிக் கொள்ளுங்கள்" என்றும், அவர்களுடையஉரிமைகளைப்பற்றி, "அவர்கள் (ஸ்திரிகள்) உங்களிடமிருந்து பலமான உறுதிப்பாட்டை வாங்கிக்கொண்டனர்" என்றும், "சரியான தோழருக்கு நன்மை செய்யுங்கள்" என்றும் தன்னுடைய வேதத்தில் கூறி யிருக்கிறான். மனைவியைக் காட்டிலும் வேறொருவர் சரியான தோழராக மாட்டார். இதற்கு அத்தாட்சி ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியாரும் அவர்களுக்கு நிகரற்றதோழராகவே இருந்திருக்கிறார்கள். ஆனதுபற்றிநாம் அவர்களுடைய விஷயங்களில் விவாதிக்க உரிமை வாய்ந்திருக்கவில்லை. மேலும், அவர்கள் இறைவனுடைய கட்டளைப்படிக்கும், நல்லொழுக் காச்சாரங்களின் இயற்கைக்கும் முற்றிலும் பொருத்தமாகவே நடந்து கொண்டவர்களாவர்.

ரசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள்வபாத்தையும் தறுவாயில் அவர்களது திருநாவி னின்றும் உபதேசிக்கப்பட்ட மொழிகள் யாதெனில், "தொழுகையை ஒருபோதும் கைவிடாதீர்கள். வேலைக்காரிகளுக்கு அவர்கள் சகிக்கக்கூடாத கஷ்டங்களைக் கொடுக்காதீர்கள். ஸ்திரீகள் விஷயத்தில் ஆண்டவனுக்குப் பயப்படுங்கள். ஏனெனில், அவர்கள் உங்கள் கைவசத்தில் சிறைபட்டிருக்கிறார்கள். நீங்கள் அவர்களை அல்லாஹுத் தஆலாவால் காட்டப்பட்ட உடன்பாட்டின் கீழ் (அதாவது நிக்காஹ்) வசப்படுத்தி யிருக்கிறீர்கள். ஸ்திரிகளுடன் நீங்கள் நிக்காஹைக் கொண்டு ஹலாலாக்கப்பட்டிருக்கிறீர்கள் என்பது அல்லாவுடைய திருவசனத்தி னின்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இறக்குந் தறுவாயில், ஒரு மனிதனுடைய நாவினின்றும் வெளியாகும் விஷயமானது அம்மனிதனுடைய எண்ணத்தில் மிகவும் முக்கியமானதென்றும், அத்தியாவசியமான தென்றும்பட்டுள்ளதேயாகும். இதற்கேற்ப ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மொழிந்துள்ள அக்கடைசி உபதேசமொ

ழிகளும், அவர்களுடைய எண்ணத்தில் முதன்மையாக அமைந்திருந்தவைகளே என்பதற்குச் சந்தேகமில்லை.

அரபிய வாசிகள் மேற்கூறிய மூன்று விஷயங்களிலும் போதிய கவனஞ்செலுத்தி வரவில்லையென்றும், முஸ்லிம்கள் அவற்றை அனுசரித்து நடந்துக்கொள்ள வேண்டுமென்றும் நம் நபி பெருமானாரவர்கள் சிந்திக்கலானார்கள். ஆனதுபற்றியே, ஜனாப் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், வபாத்தடையுந் தறுவாயிலுங்கூட புருஷர் மனைவிமார்களுடன் நல்லபடியாக நடந்துகொள்ள வேண்டுமென்பதற்குப் போதனை செய்திருக்கிறார்கள். இனி இதைப்பற்றி எவரும் ஆக்ஷேபிக்க முடியாது.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள்:—"எவனொருவன் தன்னுடைய மனைவியின் ஒழுங்கீனங்களைப் பற்றி பொறுமை அடைந்து கொள்வானோ, அவனுக்கு அல்லாஹுத் தஆலா வாகிறவன், ஹஸ்ரத் அய்யூப் அலைஹிஸ்ஸலா மவர்களுக்கு அவர்களுடைய துன்பங்களைப் பாராட்டி அருள் புரிந்துள்ள பலன்களுக் கொப்பான நற்பயன்களை அருள்புரிவான்.

இதே விதமாக, இன்னும் எவளொருத்தி தன்னுடைய கணவனின் ஒழுங்கீனங்களின்பேரில் பொறுமையுடன் நடந்து கொள்வாளோ, அவளுக்கு அல்லாஹுத் தஆலா வாகிறவன் பிர்ஔனுடைய மனைவியாகிய ஆஸியாவுக்கு அருளிய பலன்களின் அளவுக்குப் பலன்களை அருள் புரிவான். ஆனால் மனைவியோடு நல்லபடியாய் நடந்து கொள்ளவேண்டும் என்பதில் அவள் (மனைவி) யாதொரு தகாத காரியத்தை செய்துவிட்ட போதிலுங்கூட, அவளைக்கண்டிக்கவும் தண்டிக்கவும் கூடாதென்பது தாத்பரியமல்ல. அவளுக்கு விதிக்கப்படும் தண்டனையானது, அவளால் சகித்துக்கொள்ளக்கூடிய அளவுக்கு இருக்க வேண்டும்.

ஒரு முஸ்லிம் ஸ்திரியானவள் தன் புருஷன்பேரில் கடிந்துகொள்வாளாகில், அப்போது அவன் றசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சுன்னத்துக் கொள்கைக்குப் பின்பற்றி நடத்தல் அவசியமாகும். ஆடவர்க்கு பொறுமை சாந்தத்திற்குரிய தன்மைகள் ஸ்திரிகளைக்காட்டிலும் அதிகம் வாய்ந்திருப்பதால் இச் சந்தர்ப்பத்தில் அவர்கள் அவற்றைக் கடைபிடிக்க வேண்டும்.

கணவனும் மனைவியும் தம் வாழ்நாட்காலம் முடியவும் ஒருவருக்கொருவர் விட்டுப்பிரியாத சம்பந்தத்தைக் கொண்டிருக்கையில், சிறு

பிள்ளைகளைப்போல் அற்ப சொற்ப காரியங்களி லெல்லாம், அவர்கள் சண்டை செய்யவும், கூடிக்கொள்வதுமா யிருந்தால், அது பெருந்தன் மைக்கு அழகன்று.

ஸ்திரிகளுக்கும் வெட்கம், ரோஷம் முதலியன ஆடவர்களைப் போலவே அமைந்திருக்கின்றன. நல்ல விஷயங்களைக் கேட்க அவர்க ளுடைய மனமும் சந்தோஷ மடைந்து போகின்றது. ஆயினும் மேற்கூறியபடி அவர்களுக்கு ஆண்களைப்போ லொத்த பகுத்தறிவு கிடையாததால், அவர்கள் அற்ப விஷயங்களிலெல்லாம் முரண்பட்டுப் போகக் கூடியவர்களா யிருக்கின்றனர். ஆனதால், கணவர் புத்திசா லித்தனமாகவும், பொறுமையாகவும் நடந்துகொண்டால், அவர்களைத் தங்களுக்கு வசப்படுத்திவைத்தல் பிரமாத மன்று.

நம் நபி பெருமானு ரவர்களின் நம்பிராட்டியார்களுக்குள், சிலர் சிற்சில சமயங்களில் நபி பெருமானு ரவர்களின் கேள்விகளுக்குக் கடு மையாயும் பதிலளிப்பதுண்டு. மேலும் அவர்கள் சிலசமயங்களில் நபி பெருமானு ரவர்களோடு ஓரிரவும் பகலும் பேசாமலும் இருந்து விடுவர். ஆனாலோ நபி பெருமானுரவர்கள் அதற்காக வேண்டி அவர் களை அணுவளவும் கடிந்து கொள்ளமாட்டார்கள்.

ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய மனைவி யார் ஒரு தடவை, ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்க ளுடைய கேள்விகளுக்கு முரட்டுத் தனமாய் பதிலளித்தார்கள். அதைக் கேட்ட ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், "ஏ மரியாதையற்றவளே! நீ எனக்கு இவ்வாறு பதிலளிக்கிறாயா" என்றபோது, அவர்கள், "றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்கள், சிற்சில சமயங்களில் றசூல் ஸல் லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கே கடினமான பதிலளிக் கையில் தங்களுடன் அப்படி நடந்துக் கொண்டாலென்ன? தாங்கள் றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைக்காட்டிலும் இவ் விஷயத்தில் மேன்மையடைய விரும்புகிறீர்களா? றசூல் ஸல்லல்லா ஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களை விட மிகவும் நல்லவர்கள்" என்று பதிலளித்தார்கள். அதற்கு ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், தன்புதல்வி 'ஹப்ஸா'வும் அப்படி கடிந்துபேசியி ருக்கும் பட்சத்தில் அவர் தனக்குப் பெருந்தீங்கை விளைவித்துக்கொ ண்டதாகும் என்று சொல்லி, அப்பால் புதல்வியின் புறமாய் நோக்கி,

"ஓ ஹப்ஸா! ஸித்தீக் புதல்வியாகிய ஆயிஷாவைப்பற்றி பொறாமைப் படாதே, ஆயிஷா றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு மிகவும் பிரீதி வாய்ந்தவர். நீ ஒருபோதும் நபி பெருமானாரவர்களுடன் கடிந்துபேசாதே" என்று அறிவித்தார்கள்.

ஒரு தடவை, நபி பெருமானாரவர்களின் நம்பிராட்டியார்களுக்கிடை ஒருவர், நபி பெருமானாரவர்களின் மார்பின்பேரில் கையை வைத்து அவர்களை இடறிவிட்டதைக்கண்ட அப்பிராட்டியாரின்தாயார் தம் புதல்வியாரை அதைப்பற்றி அதட்டியதற்கு நபி பெருமானாரவர்கள் "போகட்டும் ஒன்றும் சொல்லாதீர்கள். இவர்கள், இதைக் காட்டிலும் அதிக சேட்டைகளையும் செய்து விடுகிறார்கள்" என்று கூறினார்கள்.

ஒரு முறை ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கும் ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியாருக்கு மிடையாதொரு விஷயத்தில் விவாதமேற்பட்டது. அப்போது இருவர்களும் ஹஸ்ரத் அபூபக்கர்ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களைத்தங்கள் வழக்கை விசாரிப்பதற்கு விசாரணைக் கர்த்தராகத் தெரிந்தெடுத்தார்கள். ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் வீட்டிற்குள் வந்தவுடன் நபி பெருமானாரவர்கள், "ஆயிஷாவே! நீர் முதலில் உம்முடைய முறைப்பாட்டை வெளியிடும் அல்லது நான் சொல்லிக்கொள்ளுகிறேன்" என்று மொழிந்தபோது ஹஸ்ரத் ஆயிஷா பெருமானவர்களை நோக்கி "தாங்களே சொல்லிக்கொள்ளுங்கள். ஆனால்நடந்ததை உண்மையாகவேஉரைக்கவேண்டும்"என்றார்கள். "உண்மையாகவே உரைக்கவேண்டும்" என்னும் மொழிகளைக் கேட்டவுடன், ஹஸ்ரத் அபூபக்கர்ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஏற்பட்ட ஆத்திரத்திற்கு அளவே கிடையாது. அவர்கள் ஆயிஷா நாயகியின் கன்னத்தில் ஓங்கி ஓரறை விட்டார்கள். உடனே அவர்களுடைய வாயினின்றும் இரத்தம் வெளியாயிற்று. பின்னர் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆயிஷாவை கோபப் பார்வையுடன் நோக்கி, "ஓ பிராணசத்துருவே! ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உண்மையைத் தவிரவும் பேசுவதுண்டா?" என்று கூறியபோது, ஹஸ்ரத் ஆயிஷா பயந்துபோய் ரக்ஷகரான கணவர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின்னால் போய் அடைக்கலம் புகுந்துக் கொண்டார்

கள். அப்போது நபி பெருமானாரவர்கள் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் அவர்களிடம், "அபூபக்கரே! நான் உங்களை இப்படிச்செய்வதற்கு இங்கு அழைக்கவில்லை, நீங்கள் இப்படிச் செய்வீர்கள் என்றும் எனக்குத் தெரியாது" என்று மொழிந்தார்கள்.

(சுப்ஹானல்லா எப்பேர்ப்பட்ட அன்பு ஏற்பட்டிருந்தது. எவ்வளவுசாந்தத்துடன் நடந்துகொண்டார்கள்.) இமாம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் எழுதுகிறார்கள்:—ஒரு தடவை ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யாதொரு விஷயத்தில் நபி பெருமானாரவர்களுடன் கோபித்துக்கொண்டு, "நான் அல்லாவுடைய றசூல் என்று தாங்கள் சொல்லுகிறீர்களே" என்றபோது, நபி பெருமானாரவர்கள் (புன்சிரிப்புடன்) வெகு சந்தோஷப் பட்டார்களே யன்றி சற்றும் வருத்தப் படவில்லை.

இமாம் சாஹிப் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் மொழிகிறார்கள்:—இஸ்லாத்தில் சிநேகமென்பது முதன்முதலாக ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கும், ஹஸ்ரத் ஆயிஷா நம் பெருமாட்டியார்களுக்கு மிடையிலிருந்தே தோன்றியதாகும்; நபி பெருமானாரவர்கள் ஆயிஷா நாயகியைப் பார்த்து பெரும்பாலும் திருவுளம் பற்றுவார்கள்:-"அபூஸர்அ, தன்மனைவியுடன் இருந்து வந்தது போலவே நான் உன்னுடனிருந்து வருகின்றேன். ஆனால் வித்தியாசமோவெனில், நான் உன்னை தலாக்குச் செய்யமாட்டேன்.

ஹஸ்ரத் அனஸ் றலியல்லாஹு அன்ஹு அவர்கள்:—"றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ஸ்திரிகள் பாலும் சிறுவர்களிடத்தும் மிகவும் அன்பு பாராட்டி வருவார்கள்." (ஏனெனில் இந்த இரண்டு சாரார்களும் மிகவும் பலனற்றவர்களாகின்றனர்.)

இமாம் சாஹிப் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், சுபாவத்தைப் பற்றி கூறுகையில், புருஷர் ஸ்திரிகளுடைய கஷ்டங்களைச்சகித்துக் கொள்ள வேண்டியதுடன் அவர்களோடு தமாஷாகவும் பழகிக் கொள்ளவேண்டும் எனக் கூறுகிறார்கள். இதானது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சுபாவத்தைப் பொருந்தியதாகும். அதாவது, நம் நபி பெருமானாரவர்கள், தங்களது நம்பிராட்டியார்களோடு தமாஷாகவும் அவரவர்களது குணங்களுக்குத் தகுந்தாற்போலும் நடந்து கொண்டார்கள் என்பதே, (ஹஸ்ரத்

ஆயிஷா நாயகியோடு தாங்கள் பந்தயம் போட்டுக்கொண்டு ஓடினார்கள் என்பதும் இதற்கிணங்கிய ரிவாயத்தேயாகும்.)

ஹதீது ஷரீபில் வந்திருக்கிறது:—"ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இதர ஜனங்களிடத்தில் தமாஷாய் பழகிக்கொள்வதைக் காட்டிலும் தங்களது நம்பிராட்டியார்களிடத்திலேயே அதிகத் தமாஷாய் பழகிக்கொள்வார்கள்."

இமாம் சாஹிப் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் வரைந்திருக்கிறார்கள்:-ஹஸ்ரத் உமர் பாரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள். "ஆண்மக்கள் தன்னுடைய வீட்டில் ஒரு குழந்தையைப்போல் நடந்துக்கொள்ள வேண்டும். அதாவது இரக்கமாயும், சாந்தமாயும் இருக்கவேண்டியது. அவனிடத்திலுள்ள வஸ்து கேட்கப்படுமோகில், அப்போது ஆண்மகனாய் விடவேண்டும். ஹஸ்ரத் லுக்மான் அவர்களும் இதை ஆதரித்தே கூறியிருக்கிறார்கள்.

ஆயிஷா நாயகி யாதொருசமயங்களில், யாதொரு கோபத்துடன் மௌனமா யிருந்து விடுவார்களாகில், நபி பெருமானு ரவர்கள் ஆயிஷா நாயகியை நோக்கி, "ஹிமைராவே! பேசும், சொல்லும்" என மொழிவார்கள். (சுப்ஹானல்லா! கணவர் மனைவியுடைய திருப்திகரத்திற்காகவும் அவருடைய சந்தோஷ கரத்திற்காகவும் எவ்வாறு நடந்துக்கொள்ள வேண்டும் என்பதற்கு, இது ஏற்ற போதனையாகும்.) றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய திருக்கொள்கையைக் கைப்பற்றி நடப்பவர்கள் தம்மனைவியுடன் சுகமாயும், அனுமதியாயும் வாழ்வதற்கான வழியில் ஏற்படும் எத்தகைய சிக்கல்களையும் வெகு சுளுவாக நிவர்த்தித்துக் கொள்ளக் கடவர் என்பதற்குச் சந்தேகமில்லை.

## ஹஸ்ரத் ஆயிஷா நாயகியின் மேம்பாடு.

ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியாரின் அரிய ஒழுக்கங்களையும் அவர்களின் வரிசைகளையும் நமூனாவாகக் கொண்டு, நம்முஸ்லிம் சகோதரிகள் சீர்திருத்த மடைதல் பிரதானக் கடமையாகும்.

ஆயிஷா பெருமாட்டியார் சம்பாஷிப்பார்க ளாகில் அவர்களுடைய திவ்விய சம்பாஷணையினின்றும் புஷ்ப அரும்புகள் கொட்டு

வதுபோலாயிருக்கும். அதாவது அவர்களுடைய சம்பாஷணை அவ்வளவு மனோரம்மிய மானது.

அவர்களது வார்த்தைகளின் உருக்கமும், அழகும் உலகத்தின்கண் சம்பாஷணையில் பெரிய சாதுர்யர் என வழங்கப்பெற்ற நம் நபி பெருமானா ரவர்களுடைய மனதையும் கவர்ந்துகொள்ளும். அதாவது றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வீட்டிற்குள் வந்தவுடன் ஆயிஷா நம்பிராட்டியாரோடு சம்பாஷிக்க நேரிடுமாகில், ஆயிஷா நம்பிராட்டியாரின் அரிய மொழிகளை மிக்க உற்சாகத்துடன் கடைசிவரையில் ஊன்றிக் கேட்பார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியின் வசனமாகப் பட்டது, அராபியர்களுடைய வசனங்களின் நாகரீகத்திற்கும், லக்ஷணத்திற்கும் அடிப்படையாகஇருந்துவந்தது. அவர்கள் உருக்கமாயும் ஆழ்ந்தபொருளைத் தரக்கூடிய மொழிகளைக்கொண்டும்பேசுவார்கள். ஒருமுறை அவர்கள் அரிய மொழிகளைக் கேட்கும் ஒருவர் மீண்டும் ஒருமுறை கேட்கவே அபேக்ஷிப்பார். அரேபியாவிலுள்ள பிரக்யாதிபெற்ற புலவர்களின் அநேகபாடல்கள் அவர்களுக்கு மனப்பாடமாயிருந்துவந்தன. சிலர் ஆயிஷா நாயகி, தாமாகவும் கவிகளைக் கோர்வை செய்வார்கள் என எழுதியிருக்கிறார்கள். ஆயினும் அத்தகைய ரிவாயத்துகளுக்கு ஆதாரமிருக்கவில்லை. ‘அஹ்லெபைத்’ (ரசூலுல்லாஹி அவர்களின் பந்து மித்திரர்) தில் ஒருவராவது கவிக்கோர்வை செய்யக் கூடியவர் இருந்ததாகச் சொல்லமுடியாது.

ஆயிஷா நாயகி உருக்கமாகவும், திறமையாகவும் சம்பாஷித்து வந்ததுந் தவிர, சாதுர்யமாயும் பேசுவார். ஒருதடவை ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்கள் யாவரும் பெருமானவர்களின் அத்தையின் புதல்வியாராகிய ஹஸ்ரத் ஸைனப் றலியல்லாஹு அன்ஹு அவர்களைத்தங்கள் சார்பாய் வக்கீலாக நியமித்து யாதொரு விஷயத்தைப் பற்றிப் பேசுவதற்கு பெருமானவர்களின் சமுகத்திற்கு அனுப்பிவைத்தார்கள். ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களோ, பெருமானவர்களிடத்திற்குச் சென்று மிக்க துண்டிப்பாய் பேச ஆரம்பித்தனர். அப்பால் அவர், “ரசூலுல்லாவே! தங்களுடைய நம்பிராட்டியார்கள் நீதி நியாயத்தை விரும்புகிறார்கள்” என்றுசொன்னபோது, பெருமானவர்கள் அதற்கு யாதொரு பதிலும் கூறாது மௌனமாயிருந்து வந்தார்கள். ஹஸ்ரத்

ஆயிஷா நாயகியும், பெருமானவர்கள் மறுமொழி கூறுவார்கள் என்ற நம்பிக்கையின் பேரில் இருந்து வந்தார்களாயினும், பெருமானவர்கள் அவருக்கு (ஸைனபுக்கு) யாதொரு பதிலும் கூறவில்லையென்பதை யுணர்ந்து கடைசியாக தாமே ஹஸ்ரத் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களை நோக்கி முக்கியமான சில விஷயங்களைப் பற்றி பேசியபோது, ஸைனப் அவர்களின் மனதில் ஆயிஷா நாயகியுடைய மொழிகள் சரியான உணர்ச்சியை ஏற்படுத்திவிட்டன. பின்னர் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்கள் மேற்கொண்டு பேச முடியாமலாகிவிட்ட தானதால், அவர் மௌனஞ் சாதித்துக் கொண்டார்.

அப்பால் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களால் அவருடைய பேச்சுகளும் வாப்பீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டன. அதைக் கண்ட றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸைனப் றலியல்லாஹு அன்ஹாவை நோக்கி "ஏன்? கடைசியாக ஏற்பட்ட முடிவு என்ன? ஆயிஷா, அபூபக்கருடைய புதல்வி, அவருடைய தந்தை யூகத்திலும், சாதுர்யத்திலும் திறமை வாய்ந்திருப்பது போலவே ஆயிஷாவும் திறமை வாய்ந்திருக்கிறார்" என மொழிந்தார்கள்.

ஆயிஷா நாயகியின் அரிய சம்பாஷணையைத் தவிரவும், வைத்தியக்கல்வி, மார்க்கக்கல்வி, ஹதீதுக் கல்வியிலும் அவர்கள் விசேஷத் தேர்ச்சியடையப் பெற்றிருந்தார்கள். பெரும்பதவியுள்ள ஸஹாபாக்களும், ஆயிஷாநாயகியிடம் மார்க்க சம்பந்தமான காரியங்களில் அவர்களுடைய ஆலோசனையும், தீர்ப்பும் கேட்பதைத் தங்களுக்குப்பெருங் கௌரவமென்பதாகப்பாராட்டி வருவார்கள்.

ஹஸ்ரத் அபூமூஸா திருவுளம் பற்றுகிறார்கள்:-"றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய ஸ்ஹபாக்களாகிய எங்களுக்கு யாதொரு ஹதீது விளங்காமற் போமாகில் அதைப்பற்றி ஆயிஷா நாயகியிடத்தில் வினவுவோமாகில் அவர்கள் கட்டாயம் அதனை விளக்கிக்கூறுவார்கள்."

ஹஸ்ரத் மூஸா இப்னு தல்ஹா றலியல்லாஹு அன்ஹா அவர்களால் அறிவிக்கப் படுகிறது:-"நான் ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியாரைக் காட்டிலும், உருக்கமாய் பேசக் கூடியவர்களைக் கண்டதில்லை."

ஆயிஷா நாயகியின் கல்விமேம்பாட்டினால் ஹஸ்ரத் உமர் றலியல்லாஹுஅன்ஹு அவர்களும் ஆயிஷா நாயகியிடத்தில் மிகவும் மரியாதையாயும், அடக்கமாயும் நடந்து கொள்வார்கள். அவர்கள் ஆயிஷாநாயகியிடம் போக நேரிடுமாகில் தலையைக் குனிந்துகொண்டு அவர்களைக் கண்ணெடுத்துப் பாராமலும், அவர்களுக்கு முன்னிலையில் அதிக நேரம்வரையில் உட்காராமலும் போனவிஷயம் எதுவோ அதை மிகவும் சுருக்கமாக முறையிட்ட பின்னர் விடைபெற்றுக் கொண்டு திரும்பிவிடுவார்கள். ஏனெனில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுங் கூட மதித்துவந்த புண்ணிய சிரோமணியே ஆயிஷா நாயகி என்பவர்கள் என்ற உணர்ச்சி சதா ஹஸ்ரத் பாரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய மனத்தில் குடிகொண்டிருந்தது.

முஸ்லிம் அவர்களால் அறிவிக்கப்படுகின்றது.-ஹஸ்ரத் ஆயிஷா நம்பிராட்டியாரவர்கள் மார்க்க விஷயங்களை அவற்றிற்குரிய ஆதாரங்களுடன் தீர்ப்புச் சொல்வதில் பிரத்தியேகமான அனுபவம் வாய்ந்திருந்தார்கள். பிரபல ஸஹாபாக்களும் அது சம்பந்தமான பிரச்னையில் ஆயிஷா நாயகியிடமே ஆலோசனை கேட்டு வந்தனர்.

சாஹிப் அஸதுல் காபாவால் அறிவிக்கப்படுகிறது:—ஹஸ்ரத் மஸ்ரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆயிஷா நாயகி சம்பந்தமான ரிவாயத்துக்களை எடுத்துரைக்கு முன், "ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியாரும் கெடுதிகளை விட்டும் துப்புரவும் உன்னதப் பொறுப்பும் வாய்த்த ஆயிஷா நாயகியவர்களால் மொழியப்படுகிறது" என்று ஆரம்பம் செய்வார்கள். ஆயிஷா நாயகியின் அரிய யூகமும் உயர்தர விசால அறிவின்காரணமாக குடித்தன சம்பந்தமான அநேக காரியங்களில் பெருமானாரவர்கள் தாமே ஆயிஷா நம்பிராட்டியாரிடம் ஆலோசனைக் கேட்பதுண்டு. ஆயிஷா நம்பிராட்டியாரால் கூறப்படும் ஆலோசனை பெருமானாரவர்களுக்கு மிகவும் பொருந்தியதாகும். ஆயிஷா நாயகியின் வரிசைகளைப்பற்றி ஹதீதுகளை அனுசரிக்கு மிடத்து இதனடியிற் சில ரிவாயத்துகள் நம்பர் வாரியாக வரையப்படுகின்றன.

(1)ஹஸ்ரத் அபூஸல்மா றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஆயிஷா நாயகியை நோக்கி, "ஆயிஷாவே! உமக்கு

ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலா மவர்கள், சலாம் சொல்லுகிறார்கள்'' என கூறியபோது, ஆயிஷா நம்பிராட்டியார் அவர்கள், "(ஜிப்ரீல்) பேரிலும் சலாமும் அல்லாவுடைய கிருபையும் உண்டாகுக!" என்று விடை பகர்ந்தார்கள். மேலும் ஆயிஷா நாயகி கூறினார்கள். "ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் நான் பார்க்காத வஸ்துவைப் பார்த்துவந்தார்கள் என்று அருளினார்கள். ஹஸ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம்என்னும் தலைமை மலக்கானவர் ஆயிஷா நாயகிக்குசலாம்சொல்வதினின்றும் அவர்களதுமேம்பாடுவெளியாகிறது''.

(2) ஆயிஷா நாயகியால் அறிவிக்கப்படுகிறது:—ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள். "ஆயிஷாவே! நீர் எனக்கு மூன்று நாள்வரையில் சொப்பனத்தில் தென்பட்டு வந்தீர். அதாவது ஒரு மலக்கு ஒரு பட்டுப் புடவையில் உம்முடைய படத்தை மூடி என்னிடம் கொண்டு வந்து காண்பித்து "இவர்கள் தங்களுடைய நம்பிராட்டியாராவர்'' என்று கூறினார்கள். நான் அந்த புடவையை நீக்கி பார்த்தபோது உம்முடைய முகமே அதில் காணப்பட்டது. அப்போது நான் இது இறைவன் புறத்தால் கொண்டு வரப்பட்டிருக்குமாயின் இவ்விஷயம் கட்டாயம் முடிவடையும்'' என்றேன்.

(3) ஹஸ்ரத் அபூமூஸல் அஷ்அரி அவர்களால் அறிவிக்கப்படுகிறது:-ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள். "ஸரீத் என்னும் உயர்ந்த ஆகாரம் எல்லாசாப்பாடுகளிலும் சிறந்து விளங்குவதைப்போலவே, ஆயிஷாவும் எல்லா ஸ்திரிகளுக்கிடையும் சிறந்து விளங்குகிறார். ஆடவர்களில் அநேகர் பரிபூரண மேம்பாட்டை அடைந்திருக் கிறார்களாயினும் ஸ்திரிகளில் எற்கனவே, மர்யம் பிந்தெ இம்ரானும் பிர்ஔனுடைய மனைவியாகிய ஆஸியாவுமே மேம்பாட்டை அடைந்திருந்தனர். (ஆனால் அவர்களுக்குப்பின் ஸ்திரிகளில் கல்வியிலும் அறிவிலும் பூரண மேம்பாட்டை அடைந்திருப்பவர் ஹஸ்ரத் ஆயிஷா நாயகியே யாவார்.)

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது. "பேதா என்றஸ்தலத்தில் என்னுடைய மாலை யொன்று தவறி விட்டது. நாங்கள் மதீனாவுக்குப் போக வேண்டியவர்களா யிருந்தோமாகிலும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஒட்டையை அவ்விடத்திலேயே நிறுத்தி விட்டார்கள். அப்பால்

ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் (கூடாரத்தில்) என்னுடைய துடையின் பேரில் தலையை வைத்து தூங்கிவிட்டார்கள். இதற்குள் என்னுடைய தந்தையாராகிய ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் என்னிடத்திற்கு வந்து என்னைப் பலமாய் அறைந்தார்கள். அறைந்ததுடன் அவர்கள் என்னை நோக்கி, "எல்லா ஜனங்களும், சேனைகளும் உன்னாலன்றோ தடைபட்டுப் போயின" என்று சொல்லிக் கோபித்துக் கொண்டார்கள். அவர்களுடைய பலத்த அறையின் வேதனையானது எனக்கு மாணவேதனைக்கு ஒப்பாயிருந்தது. என் துடையின்பேரில்(படுத்திருந்த)ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய தலையுமிருந்துவந்தமையால் நான் அசையவும் முடியாமலிருந்தேன். என் தந்தையார் கடிந்து பேசியதிலிருந்து ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் விழித்துக் கொண்டார்கள். காலை தொழுகை நேரமாயிருந்த படியால் அவர்கள் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) வுளுச்செய்வதற்காக தண்ணீர் கேட்டனர். ஆனால் தண்ணீர் முடிந்து போயிருந்தமையால் கிடைக்கவில்லை. அப்போது 'தயம்மும்' செய்து கொள்ளும்படியான ஆயத்து இறங்கியது.

அஸீதுப்னு கலீற் கூறுகிறார். "ஓ அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய சந்ததியே! தாங்கள் எல்லா ஜனங்களுக்காக வேண்டியும் அரிய பரோபகாரியாவீர்கள். ஏனெனில் தங்களது பாக்கியமாகவே இந்த பரக்கத் (தயம்முடைய ஆயத்து) ஜனங்களின் பேரில் இறங்கியதாகும் என்றுகூறினர்" புகாரி ஷரீபுடைய இரண்டாவது ரிவாயத்தில், "நபிபெருமானாரவர்களின் ஒட்டகையை மறுநாள்பயணத்திற்காக வேண்டி எழுப்பியபோது மாலை கிடைத்துப் போயிற்றென்றும் கலீற் ஓ அபூபக்கருடைய சந்ததியாரே! இதுவே உம்முடைய முதல் பரக்கத்தாயிருக்கவில்லை. (இதற்கு முன்னமேயும் தாங்கள் இஸ்லாத்தை பராமரித்து வந்தீர்கள்) என்று சொல்லியதாகவும் வந்திருக்கின்றது."

புகாரியுடைய மூன்றாவது ரிவாயத்தில், காணமற் போன மாலையானது அதைத் தேடிப் பார்க்கும்படியாய் அனுப்பப் பட்டவர்களாலேயே கண்டு பிடிக்கப் பட்டதென்றும் வந்திருக்கின்றது. தற்போதைய தத்துவ சாஸ்திர ஞானம் படைத்தவர்களும், நவீன நாகரீகத்

தைப் பின்பற்றி நடப்பவர்களும் தமக்குத் தோன்றியபடி யெல்லாம் பலவிதமான கட்டுரைகளை யெடுத்துரைக்கிறார்கள். மொஅஜிஸாத் (நபிமார்களால் வெளியாகும் அற்புதங்கள்) துகள் பொய்யென்று நஜூஸப்படுத்த முயற்சிக்கிறார்கள். முக்கியமான நிகழ்ச்சிகளையுங்கூட இயற்கையைக் கொண்டு நிகழ்ந்தவைகளென்றே மறுக்கிறார்கள். இந்நிலைமையில் குர்ஆன் ஹதீதுகளுடைய விஷயங்களையும் தாங்கள் அறிந்து கொண்டதாகவே பறை சாற்றுகிறார்கள். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய ஸஹாபாக்களுக்குப்போதிய அறிவு இருந்திருக்கவில்லையா. (நவூது பில்லாஹி மின்ஸாலிக்) எந்த ஜனங்கள் (ஸஹாபாக்கள்) இஸ்லாத்துடைய பிரசாரத்தைச் செய்து வந்தனரோ, அவர்களே இது சம்பந்தமான உண்மை இரகசியங்களைச் செவ்வனே அறிந்திருந்தார்களென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். வல்ல இறைவன் யாதொருநன்றியை செய்து வைக்கிறானென்றால், அந்நன்றியை அவன் தன்னுடைய யாதொரு ஒப்புக்கொள்ளப்பட்ட மேலான அடியார்களின் மூலமாகவே வெளிப்படுத்தி வைக்கிறான். அவ்வாறு செய்து வைத்தல் அவனுடைய கிருபைக்குரிய பெருமையாகும். ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களினதும் ஹஸ்ரத் உமர் பாரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்களினதும், வாழ்க்கைச் சம்பவங்களிலிருந்து இதற்குரிய அநேக திருஷ்டாந்தங்களைப் பெறலாம். ஹஸ்ரத் அஸீத் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் இது விஷயத்தில் அவர்களைச் சுட்டிக் கூறுகிறார்கள்.

மேலான ஆண்டவன், முஸ்லிம்களுக்கு அவர்கள் தண்ணீர் அடையாத சந்தர்ப்பங்களில் 'தயம்மும்' மூலமாக துப்புரவடையலாமென்பதற்கு வேறு வகையில் திருக் குர்ஆன் ஆயத்தை இறக்கி வைத்திருப்பானாகில், அத்தகைய நிஃமத்தும், (அருள்) ஆனதும் ஆயிஷா நாயகியின் அனுக்கிரகத்தினின்றுமே அருளப்பட்டதாக இருந்திருக்கும் என்பதே எங்கள் உறுதிப்பாடு.

மேற்கூறிய ரிவாயத்தில் சொல்லப்பட்ட மாலையானது ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களால், அவர்களது சகோதரியாகிய அஸ்மா, அவர்களிடமிருந்து கை மாற்று வாங்கப்பட்டுள்ளது. ஆதலால் அது தவறிப்போயிற்றென்பதைக் கேள்விப்பட்ட றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ஆயிஷா நாயகியின் சஞ்சலத்

தையுணர்ந்து, அம்மாலையைத் தேடிப்பார்ப்பதற்காகவே, கூட்டத்தார்களை யெல்லாம் அதே விடத்தில் தங்கிப் போய்விடும்படி உத்தரவு செய்தார்கள். ஆயிஷா நாயகியின் மன ஆறுதலுக்காகவும் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு, ஆயிஷா நாயகிவிடத்து ஏற்பட்டிருந்த மதிப்பு எம்மட்டி லுள்ளது என்பதை விளக்கப்படுவதற் காகவுமே இச்சம்பவம் நிகழ்ந்துள்ளது.

மற்ெறாரு ரிவாயத்தில், இந்த நிகழ்ச்சியைப்பற்றி வந்திருக்கும் விவரம் யாதெனில், ஹஸ்ரத் ஆயிஷா நாயகி தம்முடைய சகோதரியாகிய அஸ்மா றலியல்லாஹு அன்ஹா விடமிருந்து வாங்கி யிருந்த அந்த மாலையானது காணமற் போகவே, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், அதைத்தேடுவதற்காக வேண்டி சில ஸஹாபாக்களை அனுப்பி வைத்தார்கள். அவர்கள் (ஸஹாபாக்கள்) புறப்பட்டுப் போகும்போது, தொழுகை நேரமாய் விட்டபடியால், பாதையில் வுளுச்செய்வதற்கு தண்ணீர்கிடைக்காமற் போகவே அவர்கள் வுளுச்செய்யாமலே தொழுதுகொண்டார்கள். பின்பு, அவர்கள் திரும்பிவந்து நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் அதைப்பற்றி முறையிட்டபோது, தயம்மு முடைய ஆயத்து இறங்கியது என்பதாகும்.

(5) ஹஷ்ஷாம் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—ஜனங்கள், நாயகத்திற்கு ஆயிஷா நாயகியுடைய முறையன்று தங்கள் புறத்திலுள்ள காணிக்கைகளை ஆயிஷா நாயகி யிடத்திற்கு அனுப்பி வைப்பார்கள். ஆயிஷா நாயகி கூறுகிறார்கள்:- "என்னுடைய தோழிகள் எல்லோரும் உம்மெஸல்மா றலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் ஒன்று கூடி, "ஓ உம்மெ ஸல்மாவே! ஆண்டவன்மீது சத்தியமாகச் சொல்லுகிறோம்; ஜனங்கள் தங்களது காணிக்கைகளை ஒன்று சேர்த்து றசூலுல்லாவுக்கு, ஆயிஷாவுடைய முறையன்று மட்டும் அனுப்பி வைக்கிறார்களே, ஆயிஷாவைப் போல் நாங்களும் அச்சொத்தைப் பெறவேண்டு மென்பதாக எங்களுக்கு ஆசையில்லையா? (காணிக்கையில் பொன், வெள்ளி, இரத்தினம் முதலியவை இருத்தல் கிடையாது.) ஆதலால் தாங்கள் போய் றசூலுல்லாஹி ஸல்லல்லஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், "தாங்கள் இருக்குமிடத்திற்கே ஜனங்கள் அக்காணிக்கைகளை நேரே தங்களுக்கு அனுப்பி வைக்கும்படியான ஏற்பாடு செய்யுங்கள்" என்பதை அவர்களுக்குச்

சொல்லி சமாதானம் செய்யுங்கள் என்று அனுப்பிவைத்தார்கள். ஹஸ்ரத் ஆயிஷா நாயகி திருவுளம் பற்றுகிறார்கள்:-"உம்மெ ஸல்மா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் போய் இதைப்பற்றி முறையிட்ட போது, றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதைஏற்றுக்கொள்ளவில்லை. அப்பால் நபிகள்நாயகம்ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸல்மா றலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய வீட்டிற்குப் போனபோதும் ஸல்மா அவர்கள் அதைப்பற்றி முறையிட்டார்கள். ஆகிலும், நபிகள்நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீண்டும் அப்பேச்சைத் துண்டித்துவிட்டார்கள். மூன்றாவது முறை அதே கோரிக்கை ஸல்மா அவர்களால் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடத்திற்குகொண்டுவரப்பட்டபோது, நபி பெருமானாரவர்கள் "ஸல்மாவே! நீர் ஆயிஷா சம்பந்தமாக அடிக்கடி என்னை இம்சிக்கவேண்டாம். ஆண்டவன் பேரில் சத்தியமாகும். நான் உங்களுக்கிடை ஆயிஷாவைத் தவிர எந்த பிராட்டியாரிட மிருப்பினும் எனக்கு வஹீ (தெய்வ அறிவிப்பு) இறங்குவதில்லை."

மேற்கண்ட ரிவாயத்திலிருந்து மூன்று முக்கியாம்சங்கள் வெளியாகின்றன. அவையாவன, முதலாது, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு ஆயிஷா நம்பிராட்டியா ரிடத்திலேயே இதர நம்பிராட்டியார்களைக் காட்டிலும், அதிக அன்பும், பிரீதியும் இருந்து வந்தது. றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அப்படி அன்பாய் நடந்து கொண்டதானது அல்லாஹுத் தாலாவின் புறத்தாலுள்ள காரணமேயின்றி நபி பெருமானாரவர்கள் வேண்டுமென்றே, அவ்வாறு நடந்து கொள்ளவில்லை. மூன்றாவது, அல்லாஹுத் தாலாவால் ஆயிஷா நாயகிக்கு அருளப்பட்ட மேன்மையும், பெருமையும், நபி பெருமானாரவர்களுக்கு நன்கு வெளியாயிருந்தது.

இரண்டாவது:—ஹஸ்ரத் ஆயிஷா நாயகி இறைவனுடைய சந்நிதானத்தில், எம்மட்டில் ஒப்புக்கொள்ளப் பட்டவர்களா யிருந்தார்கள் என்பது, மேலே வந்துள்ள இரண்டு ரிவாயத்துக்களி னின்றும், வெளியாகி விட்டது. அதாவது ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலா மவர்கள் ஆயிஷா நாயகிக்கு, றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்

அவர்கள் மூலமாக சலாம் சொல்வதும், அல்லாஹுத் தாலாவால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு, ஆயிஷா நாயகியின் படம் காண்பிக்கப்பட்டது. ரசூலுல்லாஹிஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடன் ஆயிஷா நாயகி இருந்து வரும் சமயங்களிலும், வஹீ இறங்குவதும் கவனிக்கத்தக்கது. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நம்பிராட்டியாரைத் தவிர இதர நம்பிராட்டியார்களோடு இருந்து வருகையில், வஹீ இறங்காமற் போவதும், ஆயிஷாநாயகியின் பதவியை வேறு படுத்துவதாகும். வஹீயுடைய விஷயத்தைக்குறிப்பாக கவனிக்குமிடத்து நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எவ்விதம் உலகமாசுகளை விட்டும், தூய்மை படுத்தப்பட்டிருந்தார்களோ, அதே விதமாகத்தான் ஆயிஷா நாயகியவர்களும் துப்புரவானவர்களாக இருந்து வந்தார்கள் என்பதற்கு, மலாயக்குகள் துப்புரவானவிடத்தில் துப்புரவான மனிதர்களிடத்தே இறங்குவார்களென்பதே போதுமான ஆதாரமாகும்.

மேலாயும், துப்புரவாயும், சிருஷ்டிக்கப் பட்டுள்ள மலக்குகள் துர்நாற்றத்தைக் கிஞ்சித்தும் சகிப்பதில்லை. இதனாலேயே நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், நாற்றமுள்ள பதார்த்தங்களைப் புசிக்கமாட்டார்கள்.

சுருங்கக் கூறுமிடத்து சர்வ சக்தியுள்ள இறைவன் தன்னுடைய அன்பும் பிரியமுமுள்ள நபியாகிய முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தோழமைக்கும், மனோரம்மியத்திற்காகவும் வேண்டி ஒளியுள்ள ஒரு மானிட அங்கத்தை ஸ்திரியுடைய சொரூபத்திலாக்கி அதனை, உம்மெ ரூமானுடைய கெர்ப்பத்தில் புகுத்தினன் என்று சொல்வதே பொருந்தும்.

மூன்றாவது:-நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய போதனைகளினாலும் அவர்களது அரிய தோழமையின் அனுக்கிரகத்தாலும், நபி பெருமானா ரவர்களின் நம்பிராட்டியார்கள் எத்தகைய நற்பயன்களை யடைந்திருந்தனர் என்பதும் இந்த ஹதீதை கொண்டு வெளியாகிறது. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்கள் தங்களுக்கிடை பிளவு

பட்டிருந்ததாகவும், சிலர் எண்ணுகிறார்கள். அது அவர்களுடைய அறி யாமைக்கு காரணமாகும்.

அல்லாஹுத் தஆலாவால் ஒப்புக்கொள்ளப் பட்டவர்களின் ஒற்றுமையும், வேற்றுமையுங்கூட ஒரு பிரத்தியேகமான ரீதியையும், வரம்பையுங் கொள்ளாதே, அத்தகையோர், தங்களுடைய கிரமமான உரிமைகளையே வேண்டுவர். அவர்களால் யாதொரு பிழை, குற்றம் ஏற்பட்டு விடுமாகில் அவர்கள் அதைப்பற்றி ஆறுதலற்றுப் போவர். தங்களால் ஏற்பட்ட குற்றம் இன்ன தென்பது அவர்களுக்குப் பட்டு விடுமாகில், அவர்கள் உடனே அதற்காக ஆண்டவனிடம் 'தவ்பா' (பிழை பொறுத்தம்) செய்துகொள்வர். ஆண்டவனிடத்தில் அவர்கள் தாங்கள் செய்துள்ள குற்றத்திற்காக அதிகம் பயப்படுவர்.

உம்மெ ஸல்மா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஆயிஷா நாயகிக்கு மாறான கூட்டத்தைச் சேர்ந்தவர்களாக இருந்து வந்தார்க ளாயினும், ஆயிஷா நாயகியின் வரிசைகளைப் பற்றிய ஹதீதுகளை எடுத்துக் கூறுவதில் அவர்கள் சற்றும் பின்னடைந் திருக்க வில்லை. ஆயிஷா நாயகியுடைய ஒரு ஆப்த தோழியருங்கூட ஆயிஷா நாயகி யின் வரிசைகளைப்பற்றி எடுத்துரைக்க முன்வரும்பட்சத்தில், ஸல்மா றலியல்லாஹு அன்ஹா அவர்களைக் காட்டிலும் அதிகமாய் ஒன்றும் கூறி யிருந்திருக்கப் போவதில்லை. ஸல்மா றலி யல்லாஹு அன்ஹா அவர்கள் தம்மைப் பற்றியும் இதர நம்பிரா ட்டியார்களைப் பற்றியும் இந்த ஹதீதை அறிவித்து ஹஸ்ரத் ஆயிஷா நாயகியின் மேம்பாட்டை முஸ்லிம்களுடைய மனதில் பதியவைத்திரு க்கிறார்கள். றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர் களுடைய வீட்டில் ஏற்படும் விவகாரங்களும் இதேவிதமானநற்பயனை யளிக்கவேண்டுவது தகுதியே யாகும்.

ரிவாயத்துகள் பல்வேறு ராவிகளைக்கொண்டும் கூறப்படுகின் றன. எனவே, சில சமயங்களில் அவற்றைப் படிப்போர் செவ்வனே விளக்கிக்கொள்ளாமல் தம்முடைய அறிவிற் கேற்றவாறு தப்பருத் தங்கொண்டு விடுகின்றனர். இது மானிட புத்திக்குரிய தவறுதலே யாகும். இதற்கிணங்க, ஹதீதுகளை ரிவாயத்துக் செய்பவர்களும், குர்ஆன் ஷரீபுடைய தப்ஸீரை வியாக்யானம் செய்பவர்களும் யாதொரு மொழியும் தம்முடைய பிரியத்திற்கிணங்க குறைக்கவும், கூட்டவும் கூடாது என்ற விஷயத்தில் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுகிறார்கள். ஆனது பற்றி, எந்த ரிவாயத்து எத்தகைய பதங் களில் வியாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றதோ, அத்தகைய பதங்

களிலேயே அவர்களும், அதை விவரித்து விடுகின்றனர். இந்நிலைமையில் ஹதீதுடைய உண்மையான பொருள் இன்னதென்று தெளிவாய் விளக்கிக்கொள்ளுதல் படிப்போரின் அறிவைச் சார்ந்த விஷயம். தப்ஸீர், சரித்திரங்கள் சம்பந்தமான விவரங்களுக்காக மேற்கூறிய முறையே யாவற்றிலும் மேலானது. இதனின்றும் விஷயங்களின் உண்மை காக்கப்பட்டுப் போகின்றது. மனிதர்களுக்கிடை எல்லோரும் ஒரே விதமான கல்வித் தேர்ச்சியும், பகுத்தறிவும் வாய்ந்திராததால், அவரவர்கள் தங்கள் அறிவுக்கேற்ப வெவ்வேறு பேதைமையான பொருள்களைக் கொள்ளல் இயற்கையாய் விடுகிறது. ஹதீது தப்ஸீர்களுடைய பொருளையும் அவரவர்கள் தங்கள் அறிவுக்கேற்றபடி வியாக்யானம் செய்தல் கூடுமென்று விட்டுவிடும் பட்சத்தில் சிறிது காலத்திற்குள் இஞ்சீல், தவ்ரேத் வேதங்களுக்கிணங்கவே, குர்ஆன் தப்ஸீர் ஹதீதுகளினுடையவு், உண்மையானதும், அசலானதுமான வியாக்யானம் மறைந்து போய்விடக்கூடும்.

சில ராவிகளுடைய போக்கோவெனில், ஹதீதுகளுடைய உண்மையான அருத்தத்தை மாற்றி விடக்கூடிய நிலைமையிலாயிருந்து வந்தமையால், இஸ்லாம், அத்தகையவர்களுக்கு இடங்கொடுக்காத வழியில் ஒவ்வொரு ரிவாயத்தினுடைய மொழிகளையும் உள்ளபடி அந்த ரிவாயத்தின் மொழிகளைக் கொண்டே விவரிக்கும்படி கண்டித்துவிட்டது. அதாவது ஒரு ரிவாயத்தினுடைய மொழிகள் நல்லதோ, அல்லது கெட்டதோ, உள்ளபடியே உரைக்கப்பட வேண்டியதாகிவிட்டது. இவ்வித கொள்கையின் அரிய பாக்கியத்தினாலேயே இன்று 13-நூற்றாண்டுகள் கழிந்து போயிருப்பினுங்கூட இஸ்லாத்தினுடைய ஒளி சிறிதேனும் மங்கிப்போகவில்லை.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுக்குள் என்றைக்கேனும் ஒருவருக்கொருவர் விரோதங்கொண்டிருக்கவில்லை. எனினும், வேளா வேளைகளில் மனிதர்களுக்குரிய இயற்கைக்கேற்ப அவர்களுக்கிடை சொல்பமன வருத்தம் ஏற்பட்டுப் போவதுண்டு. இதற்கு மாறாக ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களில் பகை ஏற்பட்டிருந்ததாக ரிவாயத்துக்கள் வந்திருப்பதாக தெரியவருமாகில், அவை லயீபான ரிவாயத்துக்கள் என்பதாய் அறி

யவேண்டும். அல்லது அவற்றின் உண்மையான கருத்தை விளக்கிக் கொள்வதில் ஆழ்ந்த சிந்தையைப் பிரயோகிக்கவேண்டும்.

(6) றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியாராகிய ஹஸ்ரத் ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் திருவுளம் பற்றி யிருக்கிறார்கள்:—"நான் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு முன் பாக படுத்திருப்பேன். என்னுடைய கால்கள் றசூலுல்லா ஸஜ்தா செய்யும்படியான ஸ்தானத்தில் எட்டியிருக்கும். றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸஜ்தா செய்வார்களாகில், அவர்கள் தம் கைகளினால் என் கால்களை விலக்குவார்கள். நான் என் கால்களை முடக்கிக்கொள்வேன். அவர்கள் எழுந்திருந்து நின்றதும் நான் கால்களை நீட்டிக்கொள்வேன். அதுகாறும் வீடுகளில் விளக்குகள் இல்லாமலிருந்தன."

றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தாம் தொழுதுகொள்ளும் சமயங்களிலும் தமக்கு முன்னால் ஆயிஷா நாயகி, இருப்பதைப்பற்றி அருவருப்பு கொள்ளமாட்டார்கள் என்பதற்கு இந்த ரிவாயத்தானது அவர்களது மேன்மையை வெளிப் படுத்துவதாகும். இனி இந்த ரிவாயத்தைப் பற்றிய விவரத்தை நாம் இதனடியிற் கவனிப்போம்.

(7) ஹஸ்ரத் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக் கப்படுகிறது:-ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றினார்கள். "நீங்கள் எங்களை நாய்க்கும்,கழுதைக்கும் சமமாக ஆக்கிவிட்டீர்களா? தடையின்றி நான் கட்டிலின்பேரில் படுத்திருப்பதுண்டு. றசூலுல்லா அவர்கள் விஜயஞ் செய்வார்களாகில் கட்டிலுக்கு மத்தியில் (நின்றுக் கொண்டு) தொழுது கொள்வார்கள். அவர்கள் தொழுதுகொள்ளும் போது அவர்களுக்கு முன்னிலையில் இருப்பதை நான் கெட்ட காரியமென்றெண்ணி கட்டிலினுடைய கீழ்ப்புறத்திலிருந்து வெளிப்பட்டுப் போவேன். அப்போது என்னுடைய போர்வையையும் எடுக்காமலே கிளம்பி விடுவேன்"

(8) ஹஸ்ரத் மஸ்ரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப் படுகின்றது:—ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள்திருவுளம் பற்றினார்கள்.:(தொழுகையை முறிக்கும் வஸ்துக்கள் என்னென்ன

வென்று ஆயிஷா நாயகிக்கு முன் பேசப் பட்டபோது ஜனங்கள், நாய், கழுதை, ஸ்திரி இவைகளால் தொழுகை முறிந்துபோகும் என்றனர்) தடையின்றி நீங்கள் எங்களை நாயாக்கிவிட்டீர்கள். சந்தேகமின்றி நான் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தொழுகையின்போது எத்தகைய நிலைமையில் கண்டிருக்கிறேனெனில், நான் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தொழுதுகொண் டிருக்கையில் அவர்களுக்கும் கிப்லாவுக்கும் மத்தியில் கட்டிலின்மீது இருந்து வருவேன். ஆனால் கட்டிலைவிட்டும் கீழே இறங்கும்படியான அவசியம் நேரிடுமாகில் நான் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு முன்னிலிருந்து போவதை மிகவும் கெட்ட கர்மமென் றெண்ணி கட்டிலின் ஒரு புறத்தினின்றும் வெளிப்பட்டுப் போவேன்.

(9) ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள். "நீங்கள் கெட்டதைச்செய்தீர்கள். எங்களை நாய் கழுதைக்குச் சமமாக்கிவிட்டீர்கள். நான் அறியக் கண்டது யாதெனில், றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுதுகொள்வார்களாகில், நான் கிப்லாவின்புறமாய் படுத்திருப்பேன். றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸஜ்தா செய்ய நேரிடும்போது என் கால்கள்மீது கைப்படும்; நான் கால்களை நகர்த்திக் கொள்வேன்."

(10) ஹஸ்ரத் அம்மார் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆயிஷா நாயகி சம்பந்தமாக, "நாம் அவர்களை அறிவோம். அவர்கள் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடன் உலகத்தில் தோழமைப்பட் டிருந்ததைப்போலவே சுவர்க்கத்திலும் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடனேயே இருக்கத்தக்க நம்பிராட்டியாராவார்" என்று கூறினார்கள்.

(11) அபீ முஹம்மத் மௌலா அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:-ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்கள் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம், "தங்களுடைய நம்பிராட்டியார்களுக்குள் தங்களுடன் சுவர்க்கத்தில் இருப்பவர்கள் யார்?" எனக் கேட்டதற்கு நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "நீரும் என்னுடன் சுவர்க்கத்தில் இருக்கும்படியானவர்களுள் ஒருவர் ஆவீர்" எனத் திருவாய் மலர்ந்தருளினார்கள்.

(12) 'முஸ்அப்' அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:--'ஸஅத்' அவர்கள் கூறினார்கள். "ஹஸ்ரத் உமர் பாரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய இராஜாங்கத்தில் அவர்களால் உம்மஹாதுல் மூஃமினீன்(றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் நம்பிராட்டியார்கள்) அவர்களுக் கிடை ஒவ்வொருவருக்கும் பத்தாயிரம் திர்ஹம் நப்கா என்னும் உபகாரச் சம்பளம் நியமிக்கப்பட்டிருந்ததற்கிடையே, ஆயிஷா நாயகி யவர்களுக்கு ஹஸ்ரத் உமர் இன்னும் 2-ஆயிரம் திர்ஹங்களை அதிகமாய் கொடுத்து வந்தார்கள். இதற்குக் காரணம் ஆயிஷா நாயகியவர்கள் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குப் பிரியமுள்ளவர்கள் என்பதாகுமென, ஹஸ்ரத் உமர் பாரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறிவருவார்கள்."

(13) இப்னு அபி மலிகா அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:- "ஹஸ்ரத் 'ஸுபைர்' றலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஆயிஷா நாயகி யிடமிருந்து யாதொரு ஹதீதை பெறுவார்களாகில், "ஆண்டவன்மீது சத்தியமாக! ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்கள், றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சம்பந்தமாக யாதொரு பொய்யான விஷயத்தையும் கூறி யிருக்கவில்லை" என்றும் மொழிவார்கள்."

(14) ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியாராகிய ஹஸ்ரத் அஸ்மா றலியல்லாஹு அன்ஹா அவர்களால் அறிவிக்கப்படுகிறது:-றசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அணிந்துவந்த 'தைலிஸான்' என்னும் ஜுப்ஹா ஒன்று என் சகோதரியாகிய ஆயிஷா நாயகி வபாத்தடைந்ததற்குப் பின்னர், எனக்குக் கிடைக்கப்பெற்றது. நாங்கள் அந்த ஜுப்ஹாவை (வியாதியஸ்தர்களுக்காக வேண்டி தண்ணீர் விட்டுக் கழுவி அத்தண்ணீரை அவர்களுக்குக் குடிப்பாட்டுவோம்.)

றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய ஜுப்ஹாவும் ஒருவரிடம் இருக்குமாயின் அது அவருடைய மேன்மையை வெளிப்படுத்துவதாகும். ஹஸ்ரத் ஆயிஷா நாயகியிடத்தில் ஹஸ்ரத் றசூலுல்லாஹி அலைஹிவஸல்லம் அவர்களுடைய 'ஜுப்ஹா' இருந்துவந்ததாக மேற்கூறிய றிவாயத்தினின்றும் வெளி

ப்படுவதால், ஆயிஷா நாயகியுடைய மேம்பாட்டிற்கு இந்த ரிவாயத்தும் சான்ருகும்.

'தல்ஹாபின் அப்துல்லா' பெயருடைய ஸஹாபி யொருவர் இருந்து வந்தார்கள். இதே பெயர்கொண்ட மற்றொரு ஸஹாபி, 'அஷ்ரத்துல் முபஷ்ஷராவைச் சேர்ந்தவர்களிலும் இருந்தார்கள். 'தல்ஹா' என்னும் இப்பெரியார் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வபாத்தடைந்து போவார்களாகில், தமக்கு ஆயிஷா நாயகியை நிக்காஹ் செய்துகொள்ள பிரியமிருப்பதாகக் கூறிஞர்கள். இச்சந்தர்ப்பத்தில் ஆயிஷா நாயகியுடைய மேன்மையைக் கவனியுங்கள். 'தல்ஹா றலியல்லாஹு அன்ஹு அவர்கள்' மேற்கண்டவாறுகூறியவுடன் ஆண்டவனால் கீழ்க்கண்ட பொருளுடைய ஆயத்து இறங்கியது.-அதாவது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குத் துயரத்தைக் கொடுப்பது உங்களுக்குத் தகாது. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குப்பின் அவர்களுடைய நம்பிராட்டியார்களோடு நிக்காஹ் செய்வதும் உங்களுக்குக் கிரமமாகாது என்பதேயாம்.

(15) ஹஸ்ரத் ஆயிஷா நாயகி திருவுளம் பற்றுகிருர்கள்:—அல்லாஹுத் தஆலாவாகிறவன், எனக்கு அருள் புரிந்த நிஃமத்து (அருள்) க்களுக் கிடையே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், என் வீட்டில், என் முறையன்றே என் மார்புக்கும், தொண்டைக்கும் மத்தியிலேயே தலைவைத்தவர்களாய் வபாத்தடைந்ததும், அவர்களுடைய வபாத்நின்போது இறைவன் எங்களிருவர்களுடைய உமிழ் நீரை ஒன்றுபடுத்தி வைத்ததும் அவனுடைய அருள்களில் ஒன்ருயிருந்தது. அதாவது என்னுடைய சகோதராகிய அப்துர் றஹ்மான் என்பவர் என்னிடத்திற்கு வந்தார். அவருடைய கையில் மிஸ்வாக்கிருந்தது. அப்போது நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை அணைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். என் சகோதரர் வந்தவுடன் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், என் சகோதரரை உற்றுப் பார்த்தார்கள். அவர் வைத்திருந்த மிஸ்வாக்கை றசூலுல்லா விரும்புகிருர்களென்பதை நான் உணர்ந்து, "தங்களுக்கு மிஸ்வாக்கு வேண்டுமா" எனக்கேட்க, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்

லம் அவர்கள் வேண்டுமென்பதாகத் தலையை அசைத்தார்கள். நான் அந்த மிஸ்வாக்கை என்சகோதரரிடமிருந்து வாங்கி, ஹஸ்ரத் ஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குக் கொடுத்தேன். ஆனால் அது மிக்க கெட்டியாயிருந்தது. அதன்பேரில் நான் அதை, "சற்று மிருதுவாக்கிக் கொடுக்கட்டுமா" என, ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்களைக் கேட்டதற்கு அவர்கள் மீண்டும் சரி என்பதற்குத் தலையசைத்தார்கள். நான் அந்த மிஸ்வாக்கை என் பற்களினால் கடித்து மிருதுவாக்கிக்கொடுத்தபோது ஹஸ்ரத்ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அதனை உபயோகித்தார்கள்.

(16) காஸீம் பின் முஹம்மத் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப் படுகின்றது:—ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள், "நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் நம்பிராட்டியார்களுக்கிடை பத்துவித முக்கியாம்சங்களைக் கொண்டு மேம்பாடடைந்திருக்கிறேன்" என்று திருவுளம் பற்றினார்கள். அப்போது நான், "உம்முல் மூமினீன் அவர்களே! அந்த 10-அம்சங்கள் யாவை?" எனக் கேட்க, ஆயிஷா நாயகியவர்கள் கூறினார்கள். (1) ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிஸல்லம் அவர்கள் விவாகம் செய்துகொண்ட நம்பிராட்டியார்கள் யாபேர்களும் விதவைகளாகவும்,வயதானவர்களாகவுமிருக்க, நான்மட்டும் கன்னிகையிலேயே ரசூலுல்லாஹி ஸல்லல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடையநிக்காஹ்வில் வந்துள்ளேன். (2)ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுள் என் பெற்றோர்களைத் தவிர வேறெவருடைய பெற்றோர் இருவர்களும் முஹாஜிரீன்களாக இருக்கவில்லை. (3) பகைவர்கள் என்னை அவமானப்படுத்த வேண்டுமென வீண் பழிகளை என்பேரில் சுமத்தியபோது அல்லாஹுத் தஆலாவானவன் வானலோகத்தி னின்றும் என் பத்தினித் தனத்திற்கு ஆயத்தை இறக்கி வைத்தான். (5) என்னுடைய நிக்காஹ் முடிவதற்கு முன்னமேயே ஹஸ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாமவர்கள் என் படத்தை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் கொண்டுவந்து காட்டியபோது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அதை ஏற்றுக்கொண்டனர். (5) நானும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் ஒரே

பாத்திரத்தினுடைய ஜலத்தைக்கொண்டு குளித்து வருவோம். என்னைத்தவிர வேறெந்த நம்பிராட்டியாரோடும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இவ்வாறு குளித்திருக்கவில்லை. (6) ரசூலுல்லாஹி ஸல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தொழுது கொண்டிருக்கும் சமயத்திலும், நான் அவர்களுக்கு முன் செல்வதுண்டு. என்னைத்தவிர இதர நம்பிராட்டியார்கள் இப்படிச் செய்ய அனுமதிக்கப்பட்டிருக்கவில்லை. (7) நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடன் இருந்து வந்த சமயங்களில்தான் அவர்களுக்கு வஹீ இறங்குவதுண்டு, இதர நம்பிராட்டியார்களுடன் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இருக்கும் சமயங்கள் வஹீ இறங்குவது கிடையாது. (8) ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய புனித ஆத்துமாவானது (அவர்கள் வபாத்தானபோது) என்னுடைய மார்புக்கும், தொண்டைக்கும் மத்தியிலேயே பிரிந்துள்ளது. (9) என்னுடைய சேவையின் முறையன்றே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வபாத்தானார்கள். (10) மேலும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என் வீட்டிலேயே நல்லடக்கமானார்கள் என்ற பெருமையும் எனக்குரியதே.

(17) அப்துல் மலிக் பின் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—ஆயிஷா நாயகி அவர்கள் திருவுளம் பற்றினார்கள். "என்னைத் தவிர ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுக்கிடை வேறொருவரும் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாமவர்களைத் தரிசிக்கவில்லை. என்னைக் காட்டிலும் அதிகம் பிரியமான நம்பிராட்டியார் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு இருந்திராதது போலவே, ஸஹாபாக்களிலும் என்னுடைய தந்தையாரைத் தவிர ஏனைய ஸஹாபாக்கள் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு அவ்வளவு பிரியமுள்ளவர்களாக இருந்திருக்கவில்லை."

ஹஸ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சம்பந்தமாக 'தப்காத் இப்னு ஸஅத்' என்னும் கிரந்தத்தில் வந்துள்ள மற்றொரு ரிவாயத்து யாதெனில்:—

(18) மஸ்ரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப் படுகின்றது:—ஹஸ்ரத் ஆயிஷா நாயகி திருவுளம் பற்றினார்கள். "நான் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாமவர்களை என் அறையில் நிற்கக்கண்டேன். அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தேடுபவர்களாக குதிரையின்மீது சவாராகியிருந் தார்கள். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர் கள் விஜயஞ் செய்தவுடனே, "தங்களைத் தேடிக்கொண்டிருந்தவர் யார்?" எனக் கேட்டேன். அப்போது றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், 'நீர் அவரைப் பார்த்தீரா' எனக்கேட்க, நான் 'பார்த்தேன்" என பதிலளித்தேன். திரும்பவும் ஹஸ்ரத் ஸல் லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "அவர்களுடைய முகம் எப் படி இருந்தது?" என் வினவியபோது, நான் "அவர் வஹியாகல்பி அவர்களுடைய முகச்சாயலாயிருந்தார்" என்று சொன்னேன். உடனே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் "நீர் மிக வும் புனிதத்தையும், செழிப்பையும் கண்ணுற்றீர். ஏனெனில், அவரே ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம்" என்று திருவுளம் பற்றினார்கள்.

(19) ஒருதடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸ ல்லம் அவர்கள், ஆயிஷா நம்பிராட்டியாரிடத்தில் பண்டை காலத்திய மூடக்கொள்கைகளைப்பற்றி கூறிக்கொண்டிருக்கையில், ஆயிஷா நாய கியவர்கள், அக்காலத்திய ஸ்திரிகளுக்கிடையே வாழ்ந்துவந்த பதி னொரு பேர்களின் மனோரம்மியமான வரலாறுகளைப் பற்றி ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம்விவரிக்க அவைகளைக் கேட்ட ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கடை சியாய் மொழிந்துள்ள பதிலினின்றும் ஆயிஷா நாயகியின் மேன்மை நன்கு வெளியாகின்றது. ஹஸ்ரத் ஆயிஷா நாயகி கூறிய விஷயங்க ளாவன:—

பூர்வ காலத்தில் ஸ்திரிகள் தண்ணீர் கொண்டு வருவதற்காக வேண்டி தங்கள் தங்கள் வீடுகளை விட்டுப் புறப்பட்டுபோய் ஒரு தண் ணீர் துறையின்பேரில் ஒன்று கூடலாயினர். அப்போது அவர்கள் எல் லோரும் ஒருமனப்பட்டு தங்கள் தங்கள் கணவர்களின் சங்கதிகளைப் பற்றி உள்ளபடியே ஒருவருக்கொருவர் தெரிவித்துக்கொள்ள வேண் டுமென்பதாக தங்களுக்குள் ஓர் உடன்பாடுசெய்துகொண்டு பின் வரு மாறு கூறினர்:—

(அ) "நான் என்னுடைய கணவனைப் பற்றி என்னவென்று சொல்லுவேன்! அவனுடைய விஷயங்கள் யாவும் அவனுடைய குறைகளைக் கொண்டே நிறைந்திருக்கின்றன என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்" என்றாள் ஒருத்தி.

(ஆ) "என்னுடைய புருஷனைப்பற்றிய திருஷ்டாந்தமாவது ஒரு மெலிந்த ஒட்டையின் மாமிசம் ஒரு மலையின் உச்சியில் வைக்கப்பட்டிருப்பதாகவும், அந்த மாமிசத்தை எடுக்கவேண்டுமானால், அந்த மலையின் உச்சிக்குப் போகவேண்டிய பாதை ஒழுங்கீனமாயிருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். ஒழுங்கீனமான பாதையைத் தானே கடந்துகொண்டு போகலாமென்றாலோ, அந்த கஷ்டத்தை அனுபவித்துக் கொள்ளுமளவில் அந்த மாமிசமாவது நல்ல மாமிசமாக இருக்கவேண்டாமோ?"

(இ) "என்னுடைய புருஷன் சாப்பிட உட்கார்ந்தானாகில் சட்டியைச் சுத்தமாக்கிவிடுகிறான். தண்ணீர் குடிக்க உட்கார்ந்தானாகில் சொட்டு ஜலங்கூட மீதியாக விடமாட்டான், தூங்குவானாகில் முழுப்போர்வையும் தானே போர்த்துக்கொள்வான்"

(ஈ) "என் புருஷன் பெரிய சண்டாளனும், கொடியனுமாவான். நானே எதாகிலும் தெரிவித்துக்கொள்ளாதவரையில் அவன் என்னைப்பற்றி விசாரிப்பது கிடையாது. நான் எதேனும் சொல்லிவிட்டாலோ உடனே எனக்குத்தலாக்கொடுக்க ஆயத்தமாய்விடுகின்றான்."

(உ) "என்னுடைய கணவன் மூடன்; துர்நடத்தை யுடையவன், பெரிய வயிரன்; அவனில் இல்லாத பின்னமில்லை. வீட்டிற்குள் வந்தவுடன் என்னை அதட்டுவதும், "உன் முகத்தை உடைப்பேன், உன் பல்லைபிடுங்குவேன்; உன் தலையை பிளப்பேன் என்பதே அவனுடைய அட்டூழியமாகும்; (ஆயிஷா நாயகி இதுவரையில் கூறிவருவதற்கிடையே ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "இந்த ஸ்திரீகள் யாவரும் தங்கள் புருஷர்களை கெட்டவர்கள் என்று சொல்லியிருக்கின்றனர். எனெனில் அவர்கள் (புருஷர்கள்) தங்கள் ஸ்திரீகளை ஆதரிக்கவில்லையாததால், அவர்கள் புருஷர்களின் குறைகளைக் கூற நேரிட்டது" என்றார்கள்.)

(ஊ) "என்னுடைய புருஷனை எம்மொழிகளைக் கொண்டு வாழ்த்துவது? அவனுடைய சற்குணங்களின் மணமானது கஸ்தூரிக்கொப்பானது. அவன் முயலைப்போல் அவ்வளவு மிருதுவும் நாஜூக்குமானவன். (அதாவது அவன் நற்குணங்கள் வாய்ந்தவன், இரக்கமுள்ளவன்".)

(எ) "என் புருஷனை 'திஹமா' இரவுக்கு ஒப்பிடுகின்றேன். (அதாவது சூடுமற்றது, குளிருமற்றது, பயங்கரமுமில்லாதது.")

(ஏ) "என்புருஷன், வீட்டிலிருந்து வெளிப்படுவானாகில் சிங்கத்தைப்போலும், வீட்டிலிருக்கும் வரையில், ஒரு சிறுத்தையைப் போன்ற சுபாவமுமுடையவன். (அதாவது சிறுத்தையைப்போல் மௌனமாக ஒருமூலையில் படுத்திருப்பான். செலவுக்குவேண்டிய வரையில் அவன் எங்களுக்கு கொடுத்துவிடுகிறான். நாங்கள் அவனிடம் கேட்கவும் தேவையில்லை; நாம் கேட்காமலே கொடுத்துவிடுபவன்.)"

(ஐ) "என்னுடைய கணவன் மிகவும் மேன்மையடைந்தவன்; பெரும்பதவியிலுள்ளவன்; அவனுடைய வாளின் உறை மிகவும் நீளமானது. ஸ்திரிகளுக்கென்றே அமைக்கப்பட்டுள்ள வீட்டிற்கருகிலேயே அவனும் இருந்து வருகிறான். அவனுடைய வீட்டிலிருந்து சாம்பல் அதிகமாய் வெளியாகும். (அதாவது அவன் மிகவும் உயரமானவன். விருந்தினர்களை ஆதரிப்பவன்; விருந்தினர்களுக்காக வேண்டி தேவைப்படும் பதார்த்தங்களை உடனுக்குடன் தருவித்துக் கொள்ளும் பொருட்டே அவன் ஸ்திரீகளின் வீட்டிற்கருகில் தானும் ஜாகை வைத்துள்ளான். விருந்தினர்களைப் பாராட்டி அவனுடைய வீட்டில் சாப்பாடும் ஏராளமாய்ச் சமைக்கப்படுகின்றது. அதன் காரணமாகவே அவன் வீட்டிலிருந்து சாம்பலும் அதிகமாக வெளியாகிறது. மேலும் தம் வீட்டினர்களோடு அவன் அதிகப் பிரியமுள்ளவனா யிருப்பதினாலேயே தன் ஜாகையையும் வீட்டிற்கடுத்தாற்போல் ஏற்படுத்திக்கொண்டான் என்பதும், எண்ணிறந்தவர்கள் அவனுடைய பரிபாலனத்தின் கீழ் வளர்க்கப்பட்டு வருகின்றனர்,

(ஓ) "என் புருஷன்பெயர் 'மாலிக்' (உடையவன்) என்பதாகும். அவன் தன் பெயர்க்கேற்ப அநேக ஒட்டகங்களுக்கும் உடையவனு யிருக்கிறான். அவ்வொட்டகங்கள் அநேக மேய்ச்சலுள்ள மைதானங் களில் மேய்ந்துவருகின்றன. தன் வீட்டுக்கு விருந்தாளிகள் வரு வார்களாகில், அவன் கத்திகளைத் தீட்டி அவற்றை நட்டு விடுகிறான். இதை ஒட்டகங்கள் பார்த்தவுடனே தங்களில் அநேகருக்கு மரணம் சம்பவித்து விட்டது என அறிந்துகொள்ளுகின்றன."

(ஓ) "எற்கனவே என்னை ஒரு ஜமீன்தார் விவாகம் செய்து கொண்டான். அவன் என்னுடைய இரண்டு விலாவை இறைச்சியைக் கொண்டும், காதுகளை ஆபரணங்களைக் கொண்டும் சிங்காரித்திருந் தான். (அதாவது அவன் என்னை நன்றாய் ஊட்டிச் செழிப்பாக்கி அநேக நகைகளையும் செய்துபோட்டான்.) அந்த கணவனுடைய தாயா ராகிய கிழவி யொருத்தியும் இருந்தாள். அவள் தங்கமானவள், ஜமீன்தாருடைய கொட்டகைகள் யாவும் தானியங்களால நிறைந் திருக்கும். வீட்டு முற்றம் மிகவும் விசாலமானது; அக்கணவனுடைய மூத்ததாரத்து மகளொருத்தியு மிருந்தாள். அவளும தடித்த அங்க மும்,சௌந்தரியமும் வாய்க்கப்பெற்றவள்; மஹல்லாவில் எல்லோருக் கும் நல்லவளாக இருந்தாள். அவனுக்குமகனொருவனுண்டு அவன்மிக்க அழகாயிருப்பான்; குறைவாக புசிப்பான்; சீரான சுகானுபவ முடைய வன்; சில நாட்களுக்குப்பின் அந்த என் கணவ்ன் இன்னொருத்தியை விவாகம் செய்து கொண்டான். அவள் தடித்தவள்; ஆனால் அழகா யிருப்பாள்; எற்கனவே அவளுக்கு இரண்டு குழந்தைகளும் இருந்தன. அவளை விவாகம் செய்து கொண்டதற்குப்பின் ஜமீன்தாராயிருந்து வந்த என் கணவன் எனக்கு தலாக் செய்துவிட்டான். நான் அப்பால் மற்றொருவனை மணம்புரிந்து கொண்டேன். இவனும் பெரிய தைரிய வான்; பலவித நகை நட்டுகளைச்செய்து போடுகிறான்; என்னை மிகவும் நேசிக்கிறான். ஆனால் அந்த ஜமீன்தாருடைய ஒரே ஒரு ஹாலில் எவ் வளவு சாமான்கிடந்துவந்ததோ, அதற்கு இவனுடைய வீட்டுசாமான் முழுமையும் சேர்த்தால் கூட ஈடாக மாட்டாது."

ஜனுப் ரசூலெகரீம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர் கள் இவற்றை யெல்லாம் கேட்டு, "கடைசியாய் கூறிய ஸ்திரிகள் தங்கள் தங்கள் புருஷர்களின புகழ்ச்சிகளைப் பற்றி உரைத்து அவர்

கள் தங்களுக்குச் செய்துள்ள நன்றிகளை நல்ல விதமாக வெளிப் படுத்தியிருக்கிறார்கள். ஓ ஆயிஷாவே! நீ கூறிவந்த பதினொன்று வது ஸ்திரியின் கணவனாகிய ஜமீன்தார் அந்த ஸ்திரிக்காக எவ்வாறு இருந்து வந்தானோ, அவ்வாறே நான் உன் விஷயத்தில் இருந்து வரு பவனாவேன்'' என்று மொழிந்தார்கள்.

ஜமீன்தாரை நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர் கள் எதற்காக சிலாக்கித்துக் கூறினார்க ளென்றால், அவன் தன் பெண்ஜாதியோடு மிகவும் நல்ல விதமாகப் பழகிக் கொண்டவன். அதாவது அந்த ஸ்திரி அவனை விட்டுவிட நேர்ந்ததற்குப் பின்னரும் தனக்கு வேறொரு பராக்கிரம சாலியான புருஷன் வாய்ந்தான் என் பதைப்பற்றி அதிக சந்தோஷப் படுவதற்குப் பதிலாக, தன் முதல் கணவனை மறக்கவில்லை. அக்கணவனுடைய ஒவ்வொரு வஸ்து அதா வது வீடு, மகன், மகள், மனைவி, தாய் எல்லோரைப் பற்றியுமே புகழ்ந்தாள்.

வேறு சில ரிவாயத்துக்களில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷாநாயகி யவர்களுக்கு; "நான் உனக்குத்தலாக்குச்செய்யமாட்டேன்'' (அதாவது அந்த ஸ்திரியுடைய முதல் கணவனின் பழக்க வழக்கங்களுக்கு நான் இணங்கி யிருப்பி னுங்கூட, தலாக் விஷயத்தில் மட்டும் வேறுபட்டிருக்கிறேன்) என்று (இச்சந்தர்ப்பத்தில்) கூறியதாயும் வந்திருக்கின்றது. நபிகள் ஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இவ்வாறு மொழிந்ததானது அவர்களது பரிபூரண அன்பையும், அளவுகடந்த நல் உபசாரத் தையும் நன்கு விளக்கக்கூடிய திருஷ்டாந்தமாகும்.

இந்த ரிவாயத்துடைய பெரும்பாகமானது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நடவடிக்கை களுக்கு ஒருவாறு ஒத்திருப்பதால், பெருமானாரவர்கள் தம்மையும் அந்த ஜமீன்தாருக்கு ஒப்பிட்டுச் சொன்னார்கள். விளக்கமாகக் கூறு மிடத்து அந்த ஜமீன்தார் தன்னுடைய மனைவியின் திருப்திக்கும் சந்தோஷ காரத்திற்கு மாகவேண்டி எவ்விதமாய் நடந்து கொண் டானோ, அதேவிதமாகவே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் ஆயிஷா நாயகிக்கு, "நானும் உன்னுடைய சந் தோஷ காரத்திற்காக வேண்டி முயற்சிப்பேன்'' என்றும், இன்னும் எவ்

விதமாக அந்த ஸ்திரி தன் புருஷனைவிட்டு விலகிக் கொண்ட பின்னரும் அவனைப் புகழ்ந்து பேசுபவளாக இருந்தாளோ, அதேவிதமாக "நீயும் எனக்குப் பின்னால் என்னைப் புகழ்ந்து பேசுவாய்" என்றும் கூறிய தாகவும் இதற்குத் தாத்பரியமாகும்.

வியாக்கியானம் செய்வோர் மேற்கூறிய 11-ஸ்திரிகளின் பெயர்களை பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள். (1) இந்த முதல் ஸ்திரியின் பெயர் தெரியவில்லை. (2) அம்ராபிந்தெ அம்ரூதமீமி. (3) ஸைபி பிந்தெ கஅப் எமானி. (4) கீஷா. (5) ஹிந்தா. (6) வஹீபி பிந்தெ அல்கமா. (7) ஔஸ் உபைதீன் புதல்வியாகிய யாஸர். (8) பெயர் தெரியவில்லை. (9) கீஷா பிந்தெ அர்கம் (10) பெயர்தெரிய வில்லை. (11) அக்மல்பின் ஸதா எமீனுவுடைய புதல்வியாகிய உம்மெஸர்அ. இவளுடைய புருஷன் பெயர் அபூஸர்அ.

## ஆயிஷா நாயகியவர்களின் கல்வித் திறமை.

ஆயிஷா நாயகியவர்கள் சகல விதமான கல்விகளிலும் பரிபூரண தேர்ச்சி யடைந்திருந்தார்கள் என்பதைப்பற்றி, ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. பிரபல ஸஹாபாக்களும் அநேக மார்க்க விஷயங்களில் ஆயிஷா நாயகியவர்களிடம் ஆலோசனைக் கேட்பர். ஹஷ்ஷாம்பின் ஹஸ்வா, 'தப்காத்' கிரந்தத்தின் 8-வது பாகத்தில், "ஆயிஷா நாயகியவர்கள் 70, அல்லது 100-அடிகளைக் கொண்டுள்ள கஸீதா (கவி) ஒன்றும் கோர்வை செய்திருப்பதாக வரைந்திருக்கிறார். இன்னும் அநேக ராவிகளும், இதர சில கவிகளைக்காட்டி அவை யாவும் ஆயிஷா நாயகி யவர்களாலேயே கோர்வை செய்யப்பட்டவைகள் என கூறுகின்றனர். ஆனால் அவை எதுமட்டில் உண்மை என்ற விஷயம் ஆண்டவனுக்கே தெரியும்.

ஆயிஷா நாயகியவர்களால் கூறப்பட்டுள்ள ஹதீதுகளின் மொத்த எண்ணிக்கை 2210-என சொல்லப்பட்டிருக்கிறது. புண்ணியசிரோமணியான ஆயிஷா நாயகியவர்கள் இல்லாமலிருந்திருக்கும் பட்சத்தில் ஹதீதுடைய கல்விக்கு அதிக சேதமேற்பட் டிருக்கலாமென்று உலமாக்கள் யாவரும் ஏக மனதாய் ஆமோதிக்கின்றனர். 'ஸஹரி' என்பவர்கள் விவரிக்கிறார்கள். "ஆயிஷா நாயகியவர்களின் கல்வியறிவுக்கு நிகரில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சகல நம்பிராட்டியார்களி னுடையவும், உலகத்திலுள்ள சகல ஸ்திரிக

ளினுடையவும், கல்வியறிவுகளை ஒன்றுகூட்டிப் பார்த்தாலும் ஆயிஷா நாயகியவர்களின் கல்விக்கு ஈடாகமாட்டாது.

'அபூபர்தாபின் அபீ மூஸா' அவர்களால் அறிவிக்கப் படுகின்றது:—யாதொரு சிக்கலான பிரசினை எங்களுக்குள் ஏற்பட்டு எங்களால் அறிய முடியாமற் போமாகில் நாம் அதை ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் சந்நிதானத்திற்குக் கொண்டு போவோம். ஆயிஷா நாயகியவர்கள் கட்டாயம் அதற்குரிய சமாதானத் தீர்ப்பு அளிக்காமற் போகமாட்டார்கள். எப்பேர்ப்பட்ட கடினமான பிரசினைகள் இருந்தால் தானென்ன. ஆயிஷா நாயகியவர்கள் உடனுக்குடன் அதற்குரிய விவரத்தை விளக்கிக்கூறுவர். ஆயிஷா நாயகியவர்களால் கூறப்பட்டதாக வந்திருக்கும் 2210-ஹதீதுகளில் 170-ஹதீதுகளை ஹதீதுடைய உலமாக்கள் யாவரும் ஆதரிக்கின்றனர். ஹதீதுடைய கல்விப் பிரசாரத்தில் ஹஸ்ரத் ஆயிஷாநாயகி யவர்களுக்குச் சமமான பதவியை அடைந்தோர் வேறில்லை. ஆயிஷா நாயகியவர்களின் ஹதீதுகளின் விசேஷமேதெனில் அவர்களால்கூறப்பட்டுள்ள ஹதீதுகளில் பெரும்பான்மையான ஹதீதுகள் ஸ்திரீகள் சம்பந்தமான பிரசினைகளுக்கு அதிக சான்றாக இருந்து வருகின்றன.

ஆடவர் ஸ்திரிகளுடன் பழகிக்கொள்ள வேண்டிய ஒழுக்கங்கள், கணவன் மனைவிக்கிடை இருக்கவேண்டிய லக்ஷணங்கள், முக்கிய மஸ்அலாக்கள், குறிப்பான சந்தர்ப்பங்களில் நோன்பு தொழுகை, ஹஜ்ஜு, தவாப்,உம்ரா முதலியவைகளைக் கடைப்பிடித்தல்கூடும்,கூடாது என்பதைப் பற்றிய மார்க்க உத்தரவுகள், சுத்தம், அசுத்தம் சம்பந்தமான போதனை, கோஷா, உடை, நகைகளை அணிதல், அலங்கரித்துக் கொள்ளல், கணவனுக்குக் கீழ்ப்படிதல், தலாக், நிக்காஹ், சம்பந்தமாக முக்கியமாய் தெரிந்துகொள்ளவேண்டிய நுட்பங்கள், அவசியமான சந்தர்ப்பங்களில் ஸ்திரிகள் வீட்டை விட்டு வெளியில் போதல் முதலிய அநேக விஷயங்களைப் பற்றியும், ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள ஹதீதுகள் மிகவும் சான்றாயிருந்துவருகின்றன. இத்தகைய ஹதீதுகள் வாராம லிருக்குமாயின் இஸ்லாத்தில் குறிப்பாக ஸ்திரிகளுடைய பிரசினைகளுக்காக வேண்டி பாதகமே ஏற்பட்டிருக்கலாம்.

பிற்காலத்தில் முஸ்லிம் ஸ்திரிகளுக்கு என்னென்ன சிக்கலான பிரசினைகள் ஏற்படக் கூடுமென்பதை ஆயிஷா நாயகியவர்கள் தம்முடைய விசால அறிவைக்கொண்டும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய திவ்விய சாவகாசத்தின் பாக்கியத்தைக்கொண்டும் நன்கு உணர்ந்துக்கொண்டார்கள். கூட்டங்கள், சமூகங்கள், வேதங்கள், கட்சிகள் இவைகளுக்கிடை மேற் கூறிய சிக்கல்களின் காரணமாகவும் கலவரங்கள் ஏற்பட்டுக்கொண் டிருக்குமென்பது அவர்களது அறிவுக்குப் பட்டதுமன்றி, "ஹஸ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலா மவர்கள் தம் சந்ததியார்களுக்காக ஷரீஅத் என்னும் ஒரு மார்க்கத்தைவிட்டுப் போயிருப்பார்கள். அதை அவர்களது சந்ததியார்கள், சீக்கிரம் மறந்துபோய்விட்டனர்" என்பதையும், அவர்கள் உணர்ந்துகொண்டார்கள். இதற்குச் சான்ருக, ஹஸ்ரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம், அவர்களுடைய மார்க்கமாகிய 'ஹனீப்' அவர்களுடைய காலத்திற்குப்பின், சில பிரதான நபிமார்களுடைய போதனைகளையடையப் பெற்றுங் கூட, க்ஷீண தசையடைந்து போயிற்றென்பதும் அப்பால் அது கடைசி நபியாகிய முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களால் தான் சீர் திருத்தத்திற்குக்கொண்டு வரப்பட்டதென்பதும் அவர்களுக்கு நினைப்பூட்டக் கூடியதாயிருந்தது.

மற்ருெரு புறத்தில் 'ஹூத்' 'சாலிஹ்' அலைஹி முஸ்ஸலாமவர்கள் தத்தம் கூட்டத்தவர்களுக்கு இறைவனுடைய வணக்கத்தைப் போதித்திருந்துங்கூட அவர்களுடைய கூட்டத்தார்கள், அவற்றை சொல்ப காலத்திற்குள்ளாகவே மறந்துபோய் 'யகூஸ்' முதலிய 5-வித விக்கிரகங்களை வணங்கத் தொடங்கினுர்கள் என்பதும், ஆயிஷா நாயகியவர்களுக்குத் தெரியாமலிருந்திருக்கவில்லை. இவைகளை யெல்லாம் உத்தேசித்து ஆயிஷா நாயகியவர்கள் தாம் உயிரோடிருந்துவந்த காலம் வரை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய ஹதீதுகளை யாவும் கூறிக்கொண்டிருந்தார்கள். அதாவது அவர்கள் தம் வாழ்நாட்களையே அத்தகைய அரிய வேலைக்காகவேண்டி அர்ப்பனஞ் செய்துவிட்டார்கள்.

இதனின்றும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும், ஸ்திரிகள் சம்பந்தமான கல்வியைப் பூர்த்தியான அள

வுக்கு ஆயிஷாநாயகி யவர்களுக்குப் போதித்திருந்ததாகவே புலனு கிறது. அரேபியாவிலுள்ள ஸ்திரீகள் யாதொரு மஸ்அலாவைப் பற்றி கேட்க விரும்புவார்களானுல், அவர்கள் ஆயிஷா நாயகிவிடமே கேட்டுத் தெரிந்துக்கொள்வார்கள் என உண்மையான ரிவாயத்துக் களினின்றும் வெளியாகின்றது. இதன்பொருட்டு ஆயிஷா நாயகி யவர்களுடைய கல்வியறிவுக்கு மேன்மேலும் அதிக பயன் ஏற்படக் கூடிய சாதனமேற்பட்டுள்ளது.

ஆயிஷா நாயகியவர்களுடைய வாழ்க்கை ஒரு முக்கிய அம்சத் தைக்கொண்டுள்ளதாகும். பொதுவாக எல்லா ஸ்திரிகளுக்கும், ரசூ லுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியிடத்து அதிக பிரியம் வைக்கிருர்கள் என்பது செவ்வனே தெ ரிந்திருந்தமையால், அவர்கள் எந்த மஸ்அலாவையும் ஆயிஷா நாயகி யவர்களிடத்தில் கேட்டுக்கொள்வதையே மேலாக எண்ணி வந்தனர்.

ஒவ்வொரு வேலைக்கும் முறையே ஒவ்வொரு பிரத்தியேக அறி வும், தேர்ச்சியும் பெற்றவனே அவ்வேலைக்கு லாயக்காகிருன். ஒரு வேலை எல்லோராலும் நல்ல படியாக பூர்த்தி செய்துவைக்கமுடியாது. அதாவது யார் யாருக்கு எந்தெந்த வேலையில் அனுபவமும், யோக் யதையும்வாய்ந்திருக்கின்றதோ, அவனே அதைத்திறமையுடன்முடிக் கக் கூடியவன் என்பது துலாம்பரமான விஷயம். இதற்கிணங்க, ஆயிஷா நாயகியவர்களால் கூறப்பட்டுள்ள ஹதீதுகளே வேறெவர் களைக் கொண்டும் கூறப்பட்டிருக்கும் பட்சத்தில் அவற்றை விளக்கிக் கொள்வதில் அநேக சிக்கல்களும், கஷ்டங்களும் நேரிட்டிருக்குமென் பதே கல்வி மேதாவிகளின் அபிப்பிராயமாகும்.

இஸ்லாம் மார்க்க விஷயங்களை நான்கு பாகங்களாக்கிப் பார்ப் பின், அவற்றுள் 2பாகங்களின் அமைப்புக்கு ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களுடைய பிரயாசையே வெளிப்படுவதாகும், எனவே ரசூலுல் லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தம் ஸஹாபாக் களுக்கு, "நீங்கள் மார்க்கத்தினுடைய இரண்டு பாகங்களைப் பற்றிய விஷயங்களை 'ஹிமைரா' விட மிருந்து தெரிந்து கொள்ளுங்கள்.

எனத் திருவுளம்பற்றியிருக்கிறார்கள். 'ஹிமைறு' ஆயிஷா நாயகியவர்களின் பட்டப்பெயர் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சந்தோஷமான நேரங்களில் இப்பட்டப் பெயரைக் கொண்டே ஆயிஷா நாயகியவர்களைக் குறிப்பிடுவார்கள்.

ஹஸ்ரத் முஆவியா றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—"நான் ஆயிஷா நாயகியவர்களுக்கு ஒரு கடிதமெழுதி அதில் அவர்கள் எனக்கு ஏதேனும் போதனைகளைச் செய்ய வேண்டுமெனவும், ஆனால் அப்போதனைகள் கூடியவரையில் சுருக்கமாக இருக்கவேண்டுமெனவும் கேட்டுக்கொண்டதற்கு ஆயிஷா நாயகியவர்கள் எனக்கு எழுதியுள்ள பதில் யாதெனில்,

"அஸ்ஸலாமு அலைக்கும்"

தவிர, எவனொருவன் ஜனங்களுடைய கோபாவேசத்தின்போது, ஆண்டவனுடைய பொருத்தத்தைத் தேடிக்கொள்வானோ! அப்போது ஆண்டவன் அந்த ஜனங்களுடைய பிரயாசைகளைவிட்டும், அவனைக் காப்பாற்றிக்கொள்வானென்றும், இன்னும் எவனொருவன் ஆண்டவனுடைய கோபாவேசத்தின்போது ஜனங்களுடைய பொருத்தத்தை விரும்புவானோ, அவனை ஆண்டவனாகிறவன் ஜனங்களுக்கு வசப்படுத்தி விடுவானென்றும் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களால் சொல்லப்பட்டுவந்ததை நான் கேட்டிருக்கிறேன்; மற்றபடி உங்கள் பேரில் சலாம் உண்டாவதாக" என்பதே.

ஆயிஷா நாயகியவர்கள் தெய்வீகம், மார்க்கம் இவைகளில் மட்டுமென்றி தேசீயம், ராஜீயம், சம்பந்தமானவிஷயங்களிலும் அவற்றிற்குரிய பிரதானக் கோட்பாடுகளில் தக்க அனுபவம் வாய்ந்திருந்தார்கள் என்பது, மேற்கூறிய ரிவாயத்திலிருந்து நன்கு வெளியாகின்றது. ஒரு பாதுஷாவாகிய ஹஸ்ரத் முஆவியா றலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும், ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள போதனையானது அந்த பாதுஷாவின் மரணகாலம் வரையில் அவருக்கு, நற்பயனைத் தரத்தக்கதாயிருந்தது. தடையின்றி ஆயிஷா நாயகியின் மேம்பாட்டிற்கு, அவர்களுக்கு இறைவனால் அருளப்பட்ட அரிய புத்தியே காரணமாகும்.

ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள்:-"நான் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் உலகத்

தில் மனிதர்களுக்கு எந்த வஸ்துவைக் கொண்டு மேன்மை உண்டு? எனக் கேட்டதற்கு அவர்கள், "புத்தியைக் கொண்டே" என்று மொழிந்தார்கள். அப்போது நான், "என்ன அவரவர்கள் செய்த நல்ல அமலுகளுக்கேற்ப அவர்களுக்குப்பலன்கிடைக்காதா?" என்று வினவியபோதுரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் "ஓ ஆயிஷா! அவர்களுக்கு எவ்வளவு புத்தி இறைவனால் அருளப்பெற்றதோ, அவ்வளவுக்கே அவர்கள் நல் அமலுகளையும் செய்திருத்தல் வேண்டும்" என்றார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் கல்வி கற்க வேண்டிய விஷயத்தில் விசேஷ ஊக்கங்காட்டி வந்தார்கள் என்பதற்கு, தமக்கு விளங்காமற்போகும் மஸ்அலாவைப்பற்றி அவர்கள் அடிக்கடி ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்வார்கள். இப்னு அபிகலிகா கூறுகிறார்கள், "ரசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் நம்பிராட்டியார்களான ஹஸரத்ஆயிஷா அவர்கள் பெருமானாரவர்களிடத்தில் தமக்கு விளங்காதபடி யாதொரு விஷயத்தைக் கேட்பார்களாகில் அதை பூர்த்தியாக விளங்கிக்கொள்ளாதவரையில் திரும்பத்திரும்பக்கேட்டே தீருவார்கள்."

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "கியாமத்நாளில் யாதொருவரிடமிருந்து கணக்கு வழக்கு வாங்கப்படுகின்றதோ, அத்தகையவர்பேரில் கட்டாயம் வேதனைஏற்படும்" என்று திருவுளம் பற்றினார்கள்:-ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் கூறுகிறார்கள், "இதைக்கேட்டவுடன் நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் திருகுருஆனில் விரைவில் அவனிடமிருந்து சுளுவான கணக்கு வாங்கப்படும் என வந்திருக்க வில்லையா? எனக் கேட்டேன். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், இந்த ஆயத்தில் எந்த கணக்குச்சம்பந்தமாக கூறப்பட்டிருக்கிறதோ உண்மையில் அது கணக்கல்லவென்று திருவுளம் பற்றினார்கள்."

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் பெரும்பாலும் கூறி வருவார்கள்:-"வெட்கத்தைப் பாராட்டி கல்விப் பயிற்சி பெறாமல் போதல் மிகவும் திருத்தமற்ற காரியம். ஸ்திரிகளுக்கிடை அன்ஸார் கூட்டத்

தைச் சேர்ந்தவர்கள் எவ்வளவு மேலானவர்கள்! அவர்கள் மார்க்கவிஷயங்களை அறிவதில் வெட்கப்படுவதில்லை'' என்றார்கள்.

ஆயிஷா நாயகியவர்கள் தப்ஸீர் (வியாக்கியானம்) சம்பந்தமான கல்வியிலும் உன்னதப்பதவி யடைந்திருந்தார்கள் என்பதற்கு கீழ்க் கண்டவிஷயங்கள் அத்தாட்சியா யிருந்து வருகின்றன. அதாவது ஜனாப் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பதருடைய சண்டையில் வெற்றியடைந்து கொல்லப்பட்டுப் போன பகைவர்களாகிய காபிர்களின் பிணங்களையெல்லாம் ஒரு பள்ளத்தில் போடும்படி உத்தரவு கொடுத்ததற்குப்பின் பள்ளத்தில் போடப்பட்ட அந்த பகைவர்களின் தலைவர்களுடைய பெயர்களைச் சொல்லி மொழிகிறார்கள்.

''ஓ பள்ளத்தில் வீழ்த்தப் பட்டவர்களே! நீங்கள் நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) யுடைய வமிசத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால் நீங்கள் என்னுடன் கெட்டவிதமாக பழகிக்கொண்டீர்கள், மற்றவர்கள் என்னை உண்மை நபி என ஒப்புக்கொண்டார்களாயினும், நீங்கள் என்னை நிராகரித்தீர்கள்.

ஓ அக்பா! ஓ ஷீபா! ஓ உம்மியா! ஓ அபூஜஹில்! முதலியவர்களே! உங்கள் ஆண்டவன் கூறிய வாக்குத் தத்தத்தின் விஷயம் இன்னதென்று இன்னமும் நீங்கள் விளங்கிக் கொள்ளவில்லையா? என் ஆண்டவன், எனக்குச் செய்துள்ள வாக்குத் தத்தம் உண்மையானது என்பதை இன்று ருஜுப்படுத்திவிட்டான்''

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய இம்மொழிகளைக்கேட்ட ஸஹாபாக்கள், ''அல்லாவுடைய ரசூலே! இந்த அசுத்தமான பிணங்கள், அதாவது மாமிச பட்சணிகளுக்கு இரையாகக் கிடந்துவரும்படியானவை தங்களுடைய மொழிகளைக்கேட்கின்றனவா''? எனக் கேட்டபோது, நபி பெருமானாவர்கள் ''இவை உங்களைக் காட்டிலும் நன்றாய் கேட்கின்றன. ஆனால் வித்தியாசமேதெனில், இவை பதில் சொல்ல முடியாத நிலைமையிலா யிருக்கின்றன.'' ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வபாத்தடைந்த சிறிதுகாலத்திற்குப்பின் ஸஹாபாக்களுக் கிடை இருவிதக் கட்சிப் பிளவு ஏற்பட்டது. அவற்றுள் ஒரு கட்சியினர் இறந்துபோனவர்கள் கேட்கின்றனர் என்ற கொள்கைக்கு மற்றொரு கட்சியினர் அதற்கு மாறான கொள்கைக்கும் ஐக்கியப்பட்டனர்.

இறந்தவர்கள் கேட்கிறார்கள் என்ற கட்சியில் அப்துல்லா இப்னு உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களும், இறந்தவர்கள் கேட்கவில்லை என்ற கட்சியில் அபூ கதாதா றலியல்லாஹு அன்ஹு அவர்களும்; இருந்து வந்தார்கள். இறந்தவர்களுக்கு யாதொரு பேச்சைக்கேட்க வைக்கும்படியான சக்தி றசூலுல்லாஹி ஸல்லல்லாஹி அலைஹிவஸல்லம் அவர்களுக்கு மட்டுமேயிருந்துவந்ததென்றும், இறந்துபோனவர்கள் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வார்த்தைகளை மட்டுமே கேட்கக்கூடுமென்றும் அவர்களுக்குள் அபிப்பிராய பேதமேற்பட்டது. கடைசியாக இந்த அபிப்பிராய பேதமாகிறது அவர்களுக்கிடை விவகாரமாக முடிந்து அப்பால் ஆயிஷா நாயகியவர்கள் வரையில் செய்தி எட்டியது.

அதைக்கேட்ட ஆயிஷா நாயகியவர்கள் "அல்லாஹுத் தஆலா அப்துல்லா றலியல்லாஹு அன்ஹுவின் பேரில் இரக்கம் பாராட்டுவானாக! ஏனெனில் அவர்கள் திருக் குர்ஆனில் (நீங்கள் இறந்துபோனவர்களுக்கு யாதொன்றும் கேட்க வைக்கமுடியாது) என்றும், (நீ கபுருகளில் இருக்கப்பட்டவர்களுக்கு யாதொன்றையும் கேட்க வைக்க முடியாது) என்றும் வந்திருப்பதை அவர் அறியவில்லை.

றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களோவெனில் ஜனங்களுடைய படிப்பினைக்காக வேண்டியே அவ்வாறு திருவுளம் பற்றினார்கள்" என்று கூறினார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களின் தீர்ப்பு இன்னதென்று மேலே கூறப்பட்டதை அறிந்துகொண்டதற்குப் பின்னர், 'இப்னு அபித்துன்யா' அவர்களால் அறிவிக்கப்படுவதையும் கவனியுங்கள்; ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள்:-எவனொருவன் தன் சகோதரனுடைய கபுரை (ஸியாரத்) தரிசிக்கிறானோ, இன்னும் எதுகாறும் அதனண்டைஉட்காருகிறானோ, கபுரிலுள்ளவனும் அவனை நேசிக்கிறான். அவனுடைய சலாமுக்குப்பதில் கூறுகிறான்" என்பதே.

'ஹஷாம்பின் அர்வா' அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:— "இறந்து போனவர்களுக்கு அவர்களுடைய வீட்டார் அழுவதினின்றும் வேதனை ஏற்படுமென்பதாக இப்னு உமர் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய ஹதீதைக் கூறியிருக்கிறார்களோ" என்பதைப்பற்றி ஆயிஷா

நாயகியவர்களிடத்தில் வினவப்பட்டபோது, ஆயிஷா நாயகியவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இவ்வாறு கூறியதற்குத் தாத்பரியமாவது மையத்திற்கு அதன் பாவம் பிழை சம்பந்தமாக வேதனை ஏற்பட்டுக் கொண்டிருப்பதனால், அதனுடைய வீட்டாரும் அதுவரையில் அழுது கொண்டிருக்கிறார்கள்'' என்பதாகும். மேலும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதருடைய சண்டையில் கொல்லப்பட்டுப்போனவர்களைப்பற்றி பேசியதில் அதாவது, "நான் எதொன்று அந்த பிணங்களுக்குச் சொன்னேனோ, அது உண்மை தான் என அவைகள் அறிந்து கொள்ளும் என்பதில் என்னுடைய தாத்பரியமாவது அக்கொல்லப்பட்டுப் போனவர்கள் நரகத்தில் இடந்தேடிக் கொள்ளுமுன் கேட்கக்கூடும்'' என்பதே.

இறந்தவர்கள் கேட்பதைப்பற்றி இமாம் கஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களுடையவும், மெய்ஞ்ஞானிகளுடையவும் கொள்கை எப்படி இருந்து வந்தபோதிலுங்கூட ஹனபி உலமாக்களில் பெரும்பான்மையோர் ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களுடைய ஆதாரமே திருத்தமானதென ஒப்புக்கொள்ளுகின்றனர். இமாம் அபூஹனீபா ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களும் மையத்துகள் கேட்குமென்பதை நிராகரிக்கிறார்கள். இமாம் முஹம்மத் இஸ்மாயீல் புகாரி அவர்களும் இதற்குச் சான்றாகவே கூறுகிறார்கள். ஆனால் இமாம் ஷாபி அவர்களும் இதரசில மஹான்களும் மையத்துகள் கட்டாயம் கேட்கக்கூடும் என்பதாய் கூறுகிறார்கள். முடிவாக, இத்தகைய சிக்கலான பிரசினைகளையெல்லாம் ஆயிஷா நாயகியவர்கள் தம்முடைய கல்வி யறிவின் சகாயத்தைக்கொண்டு தீர்த்து வைப்பார்கள். அது சம்பந்தமான யாவற்றையும் கூறுமிடத்து அதற்கென்றே தனித்தனி புத்தக மொன்று வரைதல் அவசியமாகும்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் தம் வாழ்நாட்கள் முழுதும் ஸ்திரிகளின் சீர்திருத்த சம்பந்தமான விஷயங்களிலேயே கழித்து வந்தார்கள். சுருங்கச்சொல்லில் அத்தகைய மஸ்அலாக்களில் ஆயிஷா நாயகியுடைய ஆலோசனை கொஞ்சமேனும் சம்பந்தப்பட்டிராத மஸ்அலாவே கிடையாதென்றே சொல்லலாம். அப்துல்லா இப்னு உமர் ஸ்திரிகளுக்கு அவர்கள் தலையைத்திறந்து குளிக்கலாம்

எனக் கட்டளைக் கொடுத்தார் என்பதைக்கேட்ட ஆயிஷா நாயகியவர்களுக்கு மனவேதனை ஏற்பட்டது. அப்போது ஆயிஷா நாயகியவர்கள், "அப்துல்லாவே! ஸ்திரிகள், தலைரோமங்களைச் சரைத்துக்கொள்ளலாம் என்று நீங்கள் ஏன் தீர்ப்புச் சொல்லக்கூடாது" என்றார்கள்.

ஆயிஷா நாயகியவர்கள் ஹதீதுகளைப்பற்றி ஆராய்ச்சி செய்ய முன் வருவார்களாகில் முஹத்திஸீன்கள் (ஹதீதுகளை எடுத்துச் சொல்வோர்) பிரமித்துப்போய் சூரிய உதயத்தின்போது விளக்குகளைக் கொளுத்துவதில்லை" என்று தாழ்மையுடன் கூறுவர். மானிட ஜீவாச்சார சம்பந்தமாகவும் ஆயிஷா நாயகி யவர்களால் கூறப்பட்டிருந்திருக்குமாயின், எத்தகைய கெட்டிக்காரச்சீர்திருத்தகனும் அவர்களுக்கு ஈடாக இருந்திருக்கப் போவதில்லை வமிச சாஸ்திரத்திலும் அரபியர்கள் ஆயிஷா நாயகியவர்களைத் தம்முடைய குரு என ஒப்புக்கொண்டு வந்தனர். சரித்திர ஆராய்ச்சியிலும் அவர்கள் அடைந்திருந்த திறமை இன்றியமையாததாகும் ஜிஹாத்களிலும் ஆயிஷா நாயகியவர்கள் அற்ப ஊழியர்களைப்போல் இஸ்லாம் மதத் தியாகிகளுக்குத் தொண்டுபுரிந்து வருவார்கள்.

அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் கூறப்படுகின்றது. "நான் ஹஸ்ரத் ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்களையும், உம்மெஸல்மா றலியல்லாஹு அன்ஹா அவர்களையும் அவர்கள் தங்கள் கால் சட்டைகளின் அடியோரங்களைத் தூக்கி விட்டுக்கொண்டு மிக்க பரபரப்பாகவும் பிரயாசையோடும் நீர் துருத்திகளில் தண்ணீர் நிரப்பிக்கொண்டும் தம்முதுகின்பேரில் அவற்றைச் சுமந்துகொண்டும் ஜிஹாதில் காயமடைந்தோருக்கும் காஜிகளுக்கும் அவர்களுடைய தாகத்தைத் தணியவைத்துக்கொண்டு போவதைக் கண்டிருக்கிறேன்" ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களால் அறிவிக்கப்படுகின்றது. "நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சமுகத்தில் அல்லாவுடைய ரசூலே! ஸ்திரிகளாகிய நாங்கள், ஜிஹாதையே எல்லா அமல்களைக் காட்டிலும் மேலாக அறிகின்றோம். ஆதலால் நாம் எவ்வாறு ஜிஹாது செய்யாமலிருப்பது?" எனக்கேட்டபோது, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "உங்களுடைய மேலான ஜிஹாதாகிறது உங்களுடைய நல்லெண்ணமேயாகும்" என திருவுளம் பற்றினார்கள். ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் கல்வி சாஸ்திரத்திலும் போதிய திறமை வாய்ந்தவர்களேயாவர்.

வியாதியஸ்தர்களுக்குப் பிரயோசனத்தைத் தரக்கூடிய அநேக மஸ்அலாக்களும் அவர்களால் அநேக சந்தர்ப்பங்களில் கூறப்பட்டுள்ளன.

கஸ்வா றலியல்லாஹு அன்ஹு அவர்களால் கூறப்படுகின்றது:-ஆயிஷா நாயகி யவர்கள் திருவுளம் பற்றினார்கள். "பலஹீனமுள்ளவர்களுக்கும், துக்க முள்ளவர்களுக்கும், 'ஹரீரா' என்னும் பதார்த்தம் பிரயோசனமுள்ளதாகும். மேலும் அது (ஹரீரா) "வியாதியஸ்தருடைய மனதிற்கு உற்சாகத்தை யுண்டுபண்ணி துக்கமுள்ளவர்களின் துக்கத்தை நிவர்த்திக்கக் கூடியதாகும்" என நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைக் கொண்டும் கேள்வியுற்றிருக்கிறேன் என்று.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களால் அறிவிக்கப் படுகின்றது:— ஹஸ்ரத் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சீக்காயிருந்து வந்த சமயம் நாங்கள் அவர்களுக்கு மருந்தைக் குடிப்பாட்டினோம். அப்போது ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "வாயில் மருந்தை ஊற்ற வேண்டா மென்பதாய் சைகை காட்டினார்கள். வியாதியஸ்தருக்கு மருந்து பிடிப்பதில்லை என்பதை எண்ணி நாங்கள் அவர்களுடைய சைகையைப் பாராட்டாது அவர்கள் வாயில் மருந்து ஊற்றி விட்டோம். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குத் தேக சௌக்கிய மேற்பட்டபோது அவர்கள் என்னிடம், "நான் உமக்கு பலவந்தத்துடன் மருந்து வாய்க்குள் செலுத்தவேண்டா மெனச் சொல்லவில்லையா?" என்று கேட்டார்கள். அப்போது நான் "நாங்களோ சாதாரண வியாதியஸ்தர் மருந்தை உட்கொள்ள அருவெறுப்புக் காட்டுவது போலவே தாங்களும் அருவெறுப்புக் காட்டுவதாக நினைத்தோம்" என்று முறையிட்டேன். அதற்கு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "வீட்டிலுள்ள ஒருவரையும் விடாமல் எனக்குப்போட்டது போலவே எனக்கு முன்பாகவே எல்லோருக்கும் வாயில் மருந்து போட வேண்டும், ஆனால் அப்பாஸ் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் உங்களில் சேர்ந்திராததால் அவர் மட்டும் தப்பித்துக் கொள்ளலாம்" என்று கோபத்துடன் திருவுளம் பற்றினார்கள்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வபாத்தடைந்தபோது எந்த வியாதியில் பீடிக்கப் பட்டிருந்தார்களோ அதைப்பற்றி கூறுவதற்கிடையே ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்

பற்றுகிறார்கள். "ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என் வீட்டிற்கு வந்தபோது அவர்களுடைய நோய் அதிகரிக்கத் தொடங்கிற்று. அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "என்னைத் தொட்டியில் உட்காரவைத்து ஏழு நீர் துருத்திகள் கொண்ட ஜலத்தை என்மீது ஊற்றுங்கள். (ஒருக்கால் ஆறுதலேற் படுமாயின்) நான் ஜனங்களுக்குப் போதிக்கட்டும்" என்று கூறினார்கள். எனவே நாங்கள் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய ஒரு பெரிய வாயகன்ற பாத்திரத்தில் உட்காரவைத்து நீர் துருத்திகள் நிறைய தண்ணீர் ஊற்ற ஆரம்பித்தோம். ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் போதும் என்று சொல்லிய நேரம் வரையில் தண்ணீர் ஊற்றப்பட்டது. நீங்கள் இப்போது என்னைக் குளிப்பாட்டி விட்டீர்கள் என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மெதுவாகக் கூறிவிட்டு ஜனங்களிடம் போய் அவர்களைத் தொழுகவைத்து குத்பா கேட்கவைத்தார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப் படுகின்றது:— ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள். "காய்ச்சல் நரக சுவாலையாகும் அதை ஜலத்தைக் கொண்டு குளிரப்படுத்துங்கள். இங்கிலீஷ் டாக்டர்களும், யூனானி வைத்தியர்களும், இஸ்லாம் மதபக்தர்களும் சிற்சில காய்ச்சல்களின் போது இவ்விதப் பரிகாரமே செய்விக்கின்றார்கள்.

பிளேக் நோயைப்பற்றி ஆயிஷா நாயகியவர்கள் அறிவிக்கிறார்கள்:— ரசூலுல்லாஹி "பூர்வீககாலத்தில் அல்லாஹு தாலாவாகிறவன் எந்த ஜனங்களுக்கு தண்டனைவிதிக்க நாடுவானோ, இக்கொடிய நோயின் வேதனைக்கு உட்படுத்தி வருவான். இப்போதோ இந்நோயானது முஸ்லிம் களுக்காக வேண்டி இறைவனுடைய கிருபையாகி விட்டது. அதாவது எவனொருவன் இப்பிணியால் பீடிக்கப்பட்ட பின்னரும் அதை மிக்க பொறுமையுடன் சகித்துக்கொண்டு, இறைவனுடைய விதிப்படியே நடக்கட்டு மென்பதாக இருந்து விடுவானோ அவனுக்கு ஷஹீதானவர்களுக்குரிய பலன் கிடைத்துவிடும்" என்று திருவுளம் பற்றினார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷாநாயகி யவர்களால் அறிவிக்கப் படுகின்றது. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மாலுல்

மவுத் (மாணசிக்கு) தின்போது (முஅவ்விஸதைன்) குல்அவூது பிறப்பில் பலக், குல்அவூது பிறப்பின்னாஸ என்னும் இரண்டு சூறாவும் ஓதி ஊதிக்கொள்வார்கள். அவர்களுக்கு அதிக வேதனை ஏற்படும் சமயங்களிலும் நானும் அதே சூராத்துகளை ஓதி அவர்கள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் மீது ஊதி வந்தேன். இன்னும் பரக்கத்துக்காக வேண்டி அவர்களுடைய திருக்கரத்தைக் கொண்டே அவர்களுடைய திவ்விய உடலின்பேரில் தேய்த்து விடுவேன்.

"சூராத்துக்களை ஓதி எப்படி ஊதிக்கொள்வதென" பாத்திமா நாயகியிடத்து வினவப்பட்டபோது, அவர்கள் தம்முடைய இரண்டு உள்ளங் கைகள்பேரிலும் ஓதி அவற்றை முகத்தின்பேரில் துடைத்துக் கொண்டவர்களாய் "இப்படித்தான்" என்று கூறினார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப் படுகிறது:— ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "கண் திருஷ்டிக்காக வேண்டி மந்திரம் (அதாவது துஆ) ஓதிக்கொள்ளல் பாதகமன்று" எனத் திருவுளம் பற்றினார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களுடைய திவ்விய விருத்தாந்தங்கள் யாவற்றையும், முஸ்லிம்கள் தெரிந்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடனேயே மேற்கூறிய ரிவாயத்துக்களை வரைந்துள்ளோம்.

பாத்திமா நாயகியவர்களின் மகிமைக்கு அவர்களது வித்வ ஞானமே காரணமாயிருந்து வந்தது. மற்றபடி சௌந்தரியத்திலோ வெனில், இதர நம்பிராட்டியார்களுக்குக் கிஞ்சித்தும் பிற்போக்கடைந்திருக்கவில்லை. ஹதீதுகள் சம்பந்தமான விஷயங்களில் முஸ்லிம்களுடைய அவசியத்திற்குட்பட்ட ஹதீதுகளில் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்பட்டிராத ஹதீதுகள் மிக்க அரிதாகவே காணப்படும்.



## ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களின் சம்பந்தங்களும், குடித்தனக் காரியங்களும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்கள் தங்களுக்கிடை கையாண்டுவந்த குடித்தனக்

காரியங்கள்சம்பந்தமான ரிவாயத்துக்களில் சில ரிவாயத்துக்களைக்கவனிக்குமிடத்து தீர்க்காலோசனையும்,உன்னத அறிவுமற்ற சிலர்அவற்றைப் படித்து தப்பெண்ணங் கொள்ளக்கூடிய ஏதுகாருமுண்டு. ஆனாலோ அவர்களுக்கு மாறாய் சர்வவல்ல இறைவனுடைய தத்துவத்தையும் அவனுடைய நுட்பமான காரியங்களையும் சிந்தித்து, அவனைத் துதிக்கும் தன்மையுடையோர் எந்த ஹதீதைப்பற்றியும் தங்கள் அறிவைக்கொண்டு விகற்பமான அருத்தங்களைக் கொள்ள உடன்பட மாட்டார்கள் என்பது திண்ணம்.

ஆசை என்னும் வஸ்து ஒவ்வொரு மனிதனிலும் இருந்து வருதல் இயற்கையே. ஆனால் அந்த ஆசையாகிறது நற்கருமங்களிலும், கெட்ட கருமங்களிலும் ஏற்படுதல் உண்டு. இதை உணர்ந்து கொள்ளாத அநேகர், மூமீன்களுடைய ஆசையைச் சாமானிய உலக அபேக்ஷகர்களுடைய ஆசைக்கு ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள். உண்மையிலோவெனில் மூமீன்களுடைய ஆசையும் இச்சையும், உலக ஆசை இச்சைகளை விட்டும் மிகவும் வேறுபட்டவை. இஸ்லாம் மதப்பற்றுடையவர்கள் தங்களைப்பொய்யான வழிக்குக்கொண்டுபோகக் கூடியதும், அல்லது வீண் ஆசைகளைக் கற்பிக்கக் கூடியதுமான வழியை என்றைக்கும் பின்பற்றுவதில்லை.

ஆசைக்கும், பொறாமைக்குமிடை விசேஷ பேதமுண்டு. இதை அநேகர் கவனிப்பதில்லை. அந்தோ! அவர்கள் யாதொரு ரிவாயத்தைப் பற்றி விவாதிக்க முன்வருவார்களாகில், ஆசை, பொறாமை இவ்விரண்டையும் ஒன்றாக்கி, வீண் விவாதங்களைச் செய்யத் தொடங்குகிறார்கள். ஆசை, பொறாமை இவ்விரண்டும் வேறுபட்டிருக்கின்றன. மூமினானவருக்கு ஆசை ஜாயிஸாகவும், பொறாமை கூடாதெனவும், ஏற்பட்டிருக்கின்றது என்பதில் பொறாமைக்காரனைப் பற்றியும், பொறாமையைப் பற்றியதுமான கெடுதி நன்குவெளியாகிறது. ஆனால் நற்காரியத்திற்குரிய ஆசையானது ஒரு மேலான விருப்பம் (இச்சை) என்பதாகப் பொருள்படும். அதுவே மனிதனை ஓர் உயர்தரப் பதவிக்கு கொண்டுபோய் சேர்ப்பதாகும்.

நல்லாசைக்கு ஒரு திருஷ்டாந்தம் யாதெனில், ஒருவன் தருமத்தைச் செய்வதை நாம் பார்க்கும்போது, நாமும் அவ்வாறே, தர்மம் செய்யவேண்டுமென்றும், மற்றவன் நம்மைவிட அதிக தர்மம் செய்வ

தாக பிரஸ்தாபம் அடையக் கூடாதென்றும் நமக்கு எண்ண மேற்படுவதாக வைத்துக்கொள்வோம் என்பதே. ஆனால், பொறுமைக்கு திருஷ்டாந்தமோவெனில், தர்மத்தைச் செய்பவன் தர்மத்தைச் செய்யாவண்ணம், நாம் அவனுக்கு இடையூறுகளை உண்டாக்கி அவனும் நம்மைப்போலவே, தர்மத்தைச் செய்யாமக்கச்செய்வதே நமக்கு பெருமையாகும் என எண்ணுவதேயாகும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுக்கிடை வேளா வேளைகளில் ஏற்படும் மனஸ்தாபமுங்கூட நல்லாசையின் பயன்களைக்காட்டிலும், வேறு எத்தகைய துர்ப்பயன்களையும், கொடுக்கக் கூடியவைகளாக இருக்கவில்லை. ஒரு கணவருக்கு சில மனைவிக ளிருப்பார்களாகில் அவர்களுக்கிடை, "எனக்கு, உனக்கு" என்ற இச்சையும், ஆசாபங்கமும் ஏற்படுதல் சகஜமேயன்றி வேறல்ல.

ஒரு அரிய வஸ்துவுக்காக அநேக அபேக்ஷகர்கள் ஏற்படக் கூடிய சந்தர்ப்பத்தில் ஒவ்வொருவரும், அந்த அரிய வஸ்து நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தனக்கே வாய்க்க வேண்டுமென்ற இச்சையில், தமக்கிடை சச்சரவுகளை ஏற்படுத்திக் கொள்வார்களாகில், அவர்களை கெட்டவர்கள் என்று சொல்லல் அநீதமேயாகும். இதுமட்டிலிருக்கட்டும். ஹதீது சம்பந்தமான இல்முகள் எப்போது ஒழுங்காக (தர்தீபாக) ஏற்பட்டதென்பதைக்கவனிப்போம். ஹிஜ்ரி முன்னூறுண்டுகளுக்குப் பின் ஹதீதுகளின் சேகர மேற்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது முன்னூற்றுண்டின் ஆரம்பத்தில் "புகாரி" உடைய ஒழுங்குத் திட்டத்தின்பேரில் ஏற்படலாயிற்று. அதைக்கண்ட இஸ்லாம்மதப் பகைவர்களின் மனம் பொறுமையின் அக்கினியால் கருகிச் சாம்பலாயின. அவர்கள், முஸ்லிம்கள் தங்களுடைய அத்தகைய முயற்சியில் சித்திபெறுவண்ணம் தம்மாலியன்றவரையில் இடையூறுகளை உண்டாக்கப் பாடுபட்டனர்.

அதன்பயனாக முஸ்லிம்களுக்கு அநேக கஷ்டங்கள் சம்பவித்தன. உண்மையான ரிவாயத்துக்களில் பலவித பொய்யான கட்டுரைகளையும் சேர்த்து, அவற்றை அலங்கோலப் படுத்திவிடவும் பகைவர்களால் முயற்சிக்கப்பட்டது. ஆனால் அவற்றை அப்பொய்யான கட்டுரைகளை விட்டும் அகற்றி உள்ளவற்றை உள்ளபடியே சேகரிப்பதில்

தங்களுடைய வாழ்நாட்கள் முழுதும் விசேஷ சிரத்தையெடுத்துக் கொண்ட அந்த முஸ்லிம் மேதாவிகள்பேரில் ஆண்டவன் கிருபை செய்வானுக!

ஹதீதுகளைச் சேகரித்து எழுதும்படியான காலம் துவங்கிய போது முஸ்லீம்கலீபாக்களுடைய ஆதிக்கம்தலைசிறந்து விளங்கிவந்தமையால், பகைவர்கள் யதேச்சையுடன் தங்கள் இஷ்டப்படி உண்மையான ஹதீதுகளை மாற்றிவிடும்படியான வழியில் அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

ஆனதுபற்றி அவர்கள் என்னசெய்தார்களென்றுல், ஒருரிவாயத்திலுள்ள நான்குவிதமான உண்மை மொழிகளோடு ஒரு பொய்யான வார்த்தையும் கலந்துவிடும்படியான முறையைக் கைக்கொண்டு விட்டார்கள். இதனின்றும் பெரிய அறிவாளர்களுங்கூட ஏமாந்துபோககூடிய சந்தர்ப்பமாயிருந்தது. ஆயிஷா நாயகியவர்களைப் பற்றிய உண்மை விஷயங்களைப் பாதிக்கக்கூடிய அநேக தீய மொழிகளுடன் கூடிய ஹதீதுகளையும் அவர்கள் வெளியாக்கி விட்டனர்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் தேசீய சம்பந்தமான விஷயங்களிலும், பொறுப்பேற்றுக்கொள்ள நேரிட்டதன் பயனுக மூன்ருவது கலீபாவின் காலத்தின்போதே, ஆயிஷா நாயகியவர்களுக்கு விரோதமான கட்சியினர் தோன்றிவிட்டார்கள். திரும்ப அலி றலியல்லாஹு அன்ஹு அவர்களை ஆதரித்துள்ள ஷியா கட்சியினர்களைப் பற்றியோ கேட்பானேன்? அவர்கள் ஜமல் சண்டையினல் அதிக கோபங் கொண்டுவிட்டார்கள். ஹஸரத் ஆயிஷாநாயகியவர்களை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களினின்றும் வெளிப்பட்டவர்கள் என்று சொல்லவும் அவர்கள் துணிந்துபோயினர்.

ஷியாக்கள் கூறுகிருர்கள்:-ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களுக்குத் தலாக்குச் செய்துவிட்டார்கள். மேலும் நபிபெருமாஞரவர்கள் அலி றலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு, "நீங்கள் எனக்குப்பிறகு, ஆயிஷாவை என் சார்பாக தலாக்குச் சொல்லிவிடுங்கள்" என்று கூறினுர்கள் என்று.

'ராப்லி' கூட்டத்தார்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய, திருஹதீதுகளின் சேகர ஒழுங்கையும், அவற்றின் உறுதிப்பாடுகளையுங் கண்டு தாமும் மற்றொருவிதமான முறையில் ஹதீதுகளைச் சேகரித்து தங்களிஷ்டத்திற்கிணங்க அவற்றைச்சான்ருக்கிக்கொண்டனர். இத்தோரணையினின்றும் நேயர்கள் விஷயங்களை நன்கறிந்துக்கொள்ளக் கூடும்.

ஆயிஷா நாயகி யவர்களால் அறிவிக்கப்படுகின்றது:-"ஒரு இரவு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னண்டையிலிருந்து புறப்பட்டு வெளியே சென்று விட்டார்கள். 'என் முறையன்று தாங்கள் இதர நம்பிராட்டியார்களிடம் போய் விடுதல் சரியா என்ற ஆசாபங்கம் என் மனதில் உதித்திருந்தபோது; ரசூலுல்லா அவர்கள் திரும்பி வந்தார்கள். அப்போது நான் வியசனமாக இருக்கக்கண்டு (காரணத்தை உணர்ந்து) "ஆயிஷாவே! ஏன் இப்படி ரோஷமடைகிறீர்?" என்று கேட்டார்கள். அதற்கு "நான் என்ன சொல்லுவேன்! என்னைப்போன்றவள் தங்களுக்காக வேண்டி இச்சைப்படாது இருக்க முடியுமா?" என்று பதிலளித்தேன்.

அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "என்ன! உம்முடைய மனதை அலங்கோலப்படுத்துவதற்கு உம்மிடத்தில் ஷைத்தான் வந்திருந்தானே?" எனக்கேட்டபோது நான், "ஓ அல்லாவுடைய ரசூலே! என்னுடன் ஷைத்தானும் இருந்து வருகிருனு?" எனக்கேட்டதற்கு ரசூலுல்லா அவர்கள், "ஆம் இருந்துவருகிருன்" என்று மொழிந்தார்கள். மீண்டும் நான், "ரசூலுல்லாவே! தங்களுடன்ஷைத்தான் இருந்துவருகிருனு" என்று கேட்க, நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "இருக்கிருன், ஆனல் அல்லாஹுத் தஆலாவானவன் என்னை அவனைவிட்டு மீளவைத்திருக்கிருன். ஆதலால் நான் தப்பி இருக்கிறேன்" என்று திருவுளம் பற்றினுர்கள்.

மேற்கூறிய ரிவாயத்தைப்பற்றி முஸ்லிம் அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ஆயிஷா நாயகி யவர்கள் கூறுகிருர்கள். அவர்கள் அன்றிரவு படுக்கையைவிட்டு எழுந்திருந்து கபுருஸ்தான் புறமாய் சென்று விட்டார்கள். நானும் அவர்களைப் பின் தொடர்ந்து

போனேன். கபுருஸ்தானுக்குப் போனதும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கண்ணீர்விட்டு அழுதவர்களாய் இபாதத்தில் அமர்ந்து விட்டார்கள். அதைக் கண்ணுற்ற நான் சுப்ஹானல்லா நான் எண்ணியது என்ன? இங்கே நடப்பது என்ன வென்பதைப் பற்றி பிரமித்து விட்டேன்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திரும்பி வர ஆரம்பித்தவுடன் நானும் அவர்களுக்கு முன் ஓடியோடிவந்து வீட்டை யடைந்தேன். ஆனால் நான் இரைக்க இரைக்க ஓடிவந்ததன் காரணமாக பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்க நேர்ந்தமையால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னைப் பார்த்து மேலே கூறியபடி வினவ, நானும் மேலேயே கூறியபடி பதிலளித்தேன் என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வணக்க நிலைமையும், ஆயிஷா நாயகியவர்களுடைய பிரீதியும் இந்த ரிவாயத்தி லிருந்தும் நன்கு புலனுகின்றது.

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—"ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுக்குள் ஹஸ்ரத் கதீஜா ரலியல்லாஹு அன்ஹா பேரிலேயே எனக்கு அதிக இச்சை எற்படுவதுண்டு. நான் அவர்களையோ பார்த்திருந்ததும் கிடையாது. ஆனால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கதீஜா றலியல்லாஹு அன்ஹா அவர்களைப்பற்றி மிகவும் புகழ்ந்து பேசிவருவார்கள் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களால் ஆடு அறுக்கப்படுமாகில் கதீஜா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய தோழிகளுக்காகவேண்டி கொஞ்சம் இறைச்சியை அனுப்பாமலிருக்க மாட்டார்கள்.

நான் சிற்சில சமயங்களில், "தாங்கள் சொல்வதினின்றும் உலகத்தினிடையே கதீஜாவைத்தவிர வேறு நல்லஸ்திரி கிடையாதென்று தெரிகிறது" என ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குச் சொல்வேன். அதற்கு அவர்கள், "தடையின்றி அவர் அப்படியே இருந்து வந்தவர். அவரைக்கொண்டே எனக்குச் சந்ததியு மேற்பட்டது" என்பார்கள்.

ஆயிஷா நாயகியவர்களுக்கு யாரிடத்து அதிக ரோஷமேற்படக் கூடியதாயிருந்து வந்ததோ, பின்னர் அவர்களைப்பற்றிய வரிசைகளை

கொஞ்சமேனும் கூடக்குறைவன்றி அவர்களாலேயே அறிவிக்கப் பட்டிருத்தல் அவர்களின் (ஆயிஷா நாயகியின்) மனத்தூய்மையை வெளிப்படுத்துவதாகும்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றியிருக்கிறூர்கள்:-நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுக்கிடை இருவிதக் கட்சிகள் ஏற்பட்டிருந்தன. முதலாவது கட்சியில் சம்பந்தப் பட்டிருந்தவர்களின் பெயர்களாவன:-ஹப்ஸா, ஸபிய்யா, சவ்தா இரண்டாவது கட்சியில் உம்மெஸல்மாவும் இதர எல்லா நம்பிராட்டியார்களுமாக யிருந்தார்கள்.

ஜனங்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சந்தோஷ காரத்திற்காகவேண்டி என்னுடைய முறையன்றோ தங்களது காணிக்கைகளை அனுப்பிவருவார்கள். அதன் பேரில் உம்மெஸல்மா வுடைய கட்சியி னருக்கு ஆக்ஷேபனை ஏற்பட்டது. அவர்களெல்லோருங்கூடி உம்மெஸல்மாவின் மூலமாய் ஜனங்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எங்கே (எங்கெந்த நம்பிராட்டியார் களுடனிருப்பாரோ) இருக்கிறூர்களோ, தங்கள் காணிக்கைகளை அங்கேயே அனுப்பி வைக்கும்படியான ஏற்பாடு செய்யும்படியாக சொல்லியனுப்பினூர்கள். அதற்கு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "உம்மெஸல்மாவே! என்னைக் கஷ்டப்படுத்த வேண்டாம். ஏனெனில் வஹீயும் ஆயிஷாவுடைய வீட்டில் தான் இறங்குகிறது" என்று மொழிந்தபோது உம்மெஸல்மா, "ரசூலுல்லாவே! நான் உங்களைக்கஷ்டப்படுத்தவில்லை என்பதற்குத் தவ்பா செய்கின்றேன்" என்று சொன்னூர்கள். அப்பால் அந்த நம்பிராட்டியார்கள் யாவரும் பாத்திமா நாயகி யவர்கள் மூலமாக அதே செய்தி சொல்லி அனுப்பினூர்கள். பாத்திமா நாயகியவர்களும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சமுகத்திற்குப்போய் அதைப்பற்றி முறையிட்டபோது ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "மகளே! நான் யாரைநேசிக்கிறேனே, நீ அவர்களை நேசிக்கவில்லையா?" எனக்கேட்டதற்கு பாத்திமா நாயகி தடையின்றி நான் அவர்களை நேசிக்கிறேன் என்றூர்கள். அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "அப்படியானூல் ஆயிஷாவை நேசி" எனத் திருவுளம் பற்றினூர்கள்.

இந்த ரிவாயத்தானது ஆயிஷா நாயகியுடைய மகிமையையும், ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களுக்கும் பாத்திமா நாயகியவர்களுக்கு மிடை ஏற்பட்டிருந்த பிரியத்தையும் வெளியிடுவதாகும். கதீஜா நாயகியவர்கள் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு மாறும் எள்ளளவும் நடந்துகொள்ள மாட்டார்கள் என்பதற் கிணங்கவே பாத்திமா நாயகியும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய கட்டளையைப் புறக்கணிக்க மாட்டார்கள்.

ஆயிஷா நாயகியவர்கள் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நற்போதனைகளைப்பற்றிக்கூறி வருவதற்கிடையே மொழிகிறார்கள். நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், "ஸபிய்யா றலியல்லாஹு அன்ஹா அவர்களைத் தாங்கள் விட்டு விடலா மென்பதற்கு அவர்கள் மிகவும் குட்டையாயிருந்து வரும் பின்னமே போதியதாகும்" என்றபோது, ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னை நோக்கி "நீர் சொல்லிய வார்த்தையானது சமுத்திரத்தில் கலந்து போகுமாயினும் அதை (சமுத்திரத்தை) கெடுத்து விடக்கூடியதாகும்," என்று கூறினார்கள்.

(யதார்த்த விஷயம் என்பது இதுவேயாகும். ஆயிஷா நாயகியவர்கள் தம்முடைய யாதொரு நல்ல விஷயத்தை வெளிப்படுத்துவது போலவே தம் குறைகளையும் வெளிப்படுத்தி விடுகிறார்கள். நற்போதனையின் களஞ்சியத்தில் ஏதொன்று இருந்துவருமோ, அதை உள்ளபடியே எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.)

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—(ஒரு தடவை வழியில்) ஹஸ்ரத் ஸபிய்யாவுடைய ஒட்டை சீக்கடைந்து போயிற்று. அச்சமயம் ஹஸ்ரத் ஸைனப் அவர்களிடத்தில் அதிக ஒட்டைகளிருந்து வந்தமையால் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸைனப் அவர்களிடம், "நீங்கள் ஸபிய்யாவுக்காக ஒரு ஒட்டையைக் கொடுத்து விடுங்கள்" என்று மொழிந்தார்கள். அவர்கள் (ஸைனப்) மிக்க ஆச்சரிய மடைந்து, "நான் இந்த யூதஸ்திரிக்கு ஒட்டை கொடுக்க வேண்டுமா?" என்றார்கள்.

அதைக்கேட்ட ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அதிக மனவருத்த மேற்பட்டது. ஷவ்வல் ஹஜ்ஜு, முஹர்ரம், ஸபருடைய சில நாட்கள் வரையிலும் (3மாத காலம் வரையில்) ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸைனப் ரலியல்லாஹு அன்ஹா அவர்களை அழைக்காமலே விட்டு வைத்தார்கள்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்கள் நம்பிராட்டியார்களுக்கு நல்லொழுக்க சம்பந்தமாய் எத்தகைய நற்போதனைகளையும், சமத்துவக் கொள்கைகளையும் கற்பித்து வருவார்கள் என்பதற்காக வேண்டியே இந்த ரிவாயத்தானது ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப் பட்டுள்ளது. அதாவது நீதியை யனுசரிக்கு மளவில், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் நீதிக்கு மாருக ஒருவருக்காகிலும் சகாயம் செய்யும்படியான வழியில் நடந்துக்கொள்ள மாட்டார்கள்.

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது:-"ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், உம்மெ ஸல்மா றலியல்லாஹு அன்ஹா அவர்களை நிக்காஹ் செய்துகொண்டார்கள் என்பதைக் கேள்வியுற்றபோது எனக்கு அதிக கவலை எற்பட்டது. ஏனெனில், உம்மெஸல்மா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் மிகவும் சௌந்தரியம் வாய்ந்தவர்கள் என்பதை நான் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தேன். அதனால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உம்மெ ஸல்மாவையே அதிகமாய் நேசிக்க ஆரம்பித்துவிடுவார்களோ என்பது என்னுடைய எண்ணம். நிக்காஹ்வுக்குப் பின்னர், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்க ளடங்கிய கூட்டமொன்று (என்னைஉள்பட) மணமகளை (உம்மெஸல்மாவை) பார்க்கப்போயிருந்தோம். நாங்கள் அவர்களை நெருங்கிப்பார்த்தபோது உண்மையாகவே, அவர்கள் நான் ஏற்கனவே கேள்வியுற்றிருந்த சௌந்தரியத்திற்கு இருமடங்கு அதிக சௌந்தரிய முடையவர்களாகவே இருக்கக்கண்டோம். நான் ஹப்ஸா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் இதைப்பற்றி சொன்னபோது அவர்கள், "சரிதான் சௌந்தரியத்தில் குறைவில்லை. ஆனால் அத்துடன் அவர் அறிவும் நற்குணமும் வாய்ந்திருப்பதால் நாம் பயப்படவேண்டியதில்லை. அவருக்கும் நம்மவர்களுக்கும் எவ்வித சிக்கலும் ஏற்படமாட்டாது" எனப் பதிலளித்தார்கள். கடைசியில் அவர் சொன்னபடியே ஆயிற்று. அவர் எங்களுடன் இருக்கத் தொடங்கியதுமுதல் அவர் இறைவனால் எவ்வளவுக்கெவ்வளவு அழகை வாய்க்கப் பெற்றிருந்தாரோ அவ்வளவுக்கவ்வளவு நல்லாச்சாரங்களின்செல்வத்தையும் அடையப்பெற்றிருந்தார் என்பதைக்கண்டோம். அவருடைய புத்திசாலித்தனத்தினால் நிகழ்ந்துள்ள ஒரு சாதாரணமான சம்பவம் (ஹுதைபியாவில் சம்பவித்தது) யாதெனில்,

ஹுதைபியாவில் குறைஷியர்களுடன் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சமாதானமடைந்த பின்னர் தங்கள் ஸஹாபாக்களை நோக்கி, "சரி இப்போது நீங்கள் குர்பானி செய்யுங்கள். உரோமங்களைக் கத்தரியுங்கள்" என்று கட்டளையிட்டார்களாயினும், எல்லோரும் அதைக்கேட்டு மௌனமாகவே இருந்துக்கொண்டனர். அதற்குகாரணம் யாதெனில், சமாதான உடன்படிக்கை நிறைவேறுகையில் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் முஸ்லீம்களுக்கு மாறாய் சில ஷாத்துக்களையும் ஒப்புக்கொண்டுவிட்டார்கள். அதனால் பாதகமேற்படக் கூடுமென்பதாக முஸ்லிம்கள் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு முன்னிலையிலேயே வெகுநேரம் வரையில் தங்களுக்கிடை விவாதித்துக் கொண்டிருந்தனர். அதன்பயனாக முஸ்லீம்களுடைய மனதில் அச்சமயம் ஒருவித அதிருப்தி எற்பட்டிருந்தது.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஒன்றுவிட்டு மூன்றுதடவைகளில் குர்பானிசெய்யும்படியான கட்டளை பிறப்பித்தார்களாயினும் முஸ்லீம்கள் அதைக் கவனியாது பாராமுகமாயிருந்துவந்தனர். ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் முஸ்லிம்களுடைய அத்தகைய அசட்டையையுணர்ந்து மனமுறிவுடன் ஹஸ்ரத் உம்மெஸல்மா அவர்களுடைய கூடாரத்திற்குள் பிரவேசித்தபோது, அங்கு அதுவிஷயங்களைப்பற்றி உம்மெஸல்மாவிடம் விவரித்துக் கூறினார்கள்.

அதைக்கேட்ட உம்மெஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், "ரசூலுல்லாவே! நான் ஓர் உபாயங் கூறுகிறேன். அதாவது தாங்கள் தாமே சென்று எல்லோருக்கும் முதன்முதலாக அவர்களுக்கு முன்னாலேயே குர்பானிகொடுத்து ரோமங்களைக் கத்தரித்துக் கொள்ளுங்கள். அதைப் பார்த்தபின்னர் ஒரு முஸ்லிமாவது தங்களைப் பின்பற்றாமலிருக்கமாட்டார்," என்று கூறினார்கள்.

ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அவ்வாறே செய்தபோது முஸ்லிம்களுக்குள் ஒருவித இரைச்சலும் பரபரப்பும் எற்பட்டுவிட்டது. எல்லோரும் தங்கள்தங்கள் பிராணிகளைக் கொண்டுவந்து குர்பானியாகக்கொடுக்க ஆரம்பித்து விட்டனர். அவசரத்தில் அம்பட்டனைக் கூப்பிடவேண்டுமென்பதையும் அவர்கள் மறந்

துபோய், தங்களுக்கிடையே ஒருவர் மற்றொருவருடைய உரோமங்களைக் கத்தரிக்க ஆரம்பித்துவிட்டார்கள். அதிலும் விசேஷமோவெனில் அநேகருடைய தலைகளுக்குக் காயமும் ஏற்பட்டது. இருந்தாற்போலிருந்து ஒரு பாபரப்பான காட்சியே நிகழ்ந்துள்ளது. ஆக உம்மெ ஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்களால் கூறப்பட்ட உபாயத்தின் பயனாகவே காரியம் கைகூடலாயிற்று.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் பின்பற்றி நடப்பதில் ஸஹாபாக்கள் விசேஷபற்றுடையவர்களாவர் என்ற உண்மையின் உணர்ச்சியினாலேயே அவர்கள் அத்தகைய ஆலோசனையைக் கூறினார்கள்.''

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது. ''ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸைனப் ரலியல்லாஹு அன்ஹா அவர்களை நிக்காஹ் செய்து கொண்ட சமயத்திலுங்கூட உம்மெஸல்மாவுடைய நிக்காஹ்வின்போது ஏற்பட்டிருந்த கவலையே எனக்கு ஏற்பட்டிருந்தது. ஏனெனில் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களும் மிக்க அழகுள்ளவர்களாக இருந்து வந்தமையால், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்கள் புறமாகவே மனஞ் சாய்த்துவிடுவார்களோ என்ற சந்தேகமேற்பட்டது. உண்மையில் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும், ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களைச் சிறிதுகாலம் வரையில் மிகவும் நேசித்ததிலிருந்து அவர்கள் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா தம்மைத் தாமே எனக்குச் சமமாக எண்ணவும் ஆரம்பித்தார்கள்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களிடத்தில் அதிகமாக இருந்தும் வருவார்கள். இதற்குக்காரணம் அவர்கள் யதார்த்தம், வணக்கம், பேணுதல் முதலிய லக்ஷணங்களும் வாய்ந்தவர்கள்.

அவர்கள் என் சககளித்தியார் என்ற முறையிலிருந்து வந்தார்களாயினும் என்னைப்பற்றி வீண்பழி சுமத்தப்பட்ட காலத்தில் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களிடமும் வினவியபோது அதற்கு அவர்கள், ''ரஸூலுல்லாவே! எனக்குத் தெரிந்த மட்டில் ஆயிஷா றலியல்

லாஹு அன்ஹா அவர்கள் ஒரு புண்ணிய சீதேவி என்பதற்குத் தடை கிடையாது" என்றார்கள்.

ஸைனப் றலியல்லாஹு அன்ஹா தர்மம் செய்வதிலும் அதிக மேம்பாடடைந் திருந்தார்கள். அவர்களுடைய அத்தகைய மேம்பாட்டிற்கு அத்தாட்சி யாதெனில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய சில நம்பிராட்டியார்கள் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், "எங்களெல்லோருக்கும் முந்தி (தாங்கள் வபாத்தடைந்ததற்குப்பின்) தங்களைச் சந்திக்கக் கூடியவர்கள் எவர்?" எனக்கேட்டபோது, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உங்களெல்லோரிலும் நீளமான கைகளை வாய்ந்தவரே என்னை முதன்முதலாகச் சந்திப்பார்" என்று மொழிந்தார்கள். ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய அத்தகைய பதிலைக்கேட்டவுடன் எல்லோரும் தங்கள் தங்கள் கைகளை அளந்து பார்க்க ஆரம்பித்தோம். ஹஸ்ரத் ஸவ்தா றலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய கைகளே எல்லோருடைய கைகளைக்காட்டிலும் நீளமாக இருக்கக் கண்டோம்.

ஆனல் அச்சமயம் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமொழிகளின் இரகசியம் ஒருவருக்காவது விளங்கவில்லை.

அப்பால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வபாத்திற்குப்பின் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்கள் வபாத்தடைந்ததிலிருந்து ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களைத்தான் நீண்ட கைகளுடையவரென சொல்லியிருந்தார்களென்றும், நீண்ட கைகள் என்பது ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஏராளமான ஸத்கா (தர்மம்) செய்து வந்ததே பொருள் என்றும் அறியப்பட்டது

ஹஸ்ரத் ஸைனப் அவர்கள், ஸத்கா கொடுப்பதிலும், தர்மஞ் செய்வதிலும் அதிக ஊக்கங்காட்டி வருவார்கள். இரண்டாவது ரிவாயத்தில் கூடுதலாக வந்திருக்கும் விஷயம் யாதெனில், ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூலிவேலை செய்து அக்கூலிப் பணத்திலிருந்து இறைவனுடைய பாதையில் செலவு செய்து வரு

வார்கள். அவருடைய வாழ்க்கையும் உலகின்கண், ஒரு புனிதவாழ்க்கையாக இருந்து வந்தது. உலகத்தார் அவர்களைச் சதா நினைக்கும்படியான வழியில் அவர்கள் இவ்வுலகத்தைக் கடந்து சென்றார்கள்.''

இந்த ரிவாயத்துக்களை ஆராய்ந்து பார்க்குமிடத்து ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்கள் தங்களுக்கிடை வாழ்ந்துவந்த நிலைமை நன்கு வெளியாகின்றது. ஹஸ்ரத் ஆயிஷா நாயகி ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்கள் பால் பிரியங்கொண்டிருந்ததற் கேற்பவே, ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்களும் ஆயிஷா நாயகி யவர்களிடத்து அதிக பிரியங் கொண்டிருந்தார்கள். இவர்கள் அவரை மிகைத்துவிட எண்ணியிருந்து வந்தது போல், அவர்கள் இவரை மிகைத்துவிட முயற்சித்து வந்தார்கள் ஆயினும், அந்தரங்கத்தில் அவர் இவரையும், இவர் அவரையும் வாழ்த்தியும் புகழ்ந்துங் கொள்ளும்படியான ரீதியிலிருந்துவந்தனர். அவர்களுக்கிடை பகை, விரோதம் ஏற்பட்டிருந்ததாக சொல்லப்படின் அது இத்தகைய பகை; விரோதமே என்பதை நன்குணர வேண்டும்.

ஹஸ்ரத் ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்கள், ஆயிஷா நாயகி தம்முடைய சகக்களத்தி தானே என்பதை முன்னிட்டு அவர்களுக்குத் தீங்கை விளைவிக்க விருப்பி யிருப்பார்களாகில், ஆயிஷா நாயகியவர்கள் பேரில் சுமத்தப்பட்டிருந்த வீண் பழியையே பலப்படுத்தல் அவர்களுக்குப் பெரும்சாதனமாக இருந்துவந்தது. (ஸ்திரிகளுக்குள் அத்தகைய துர்ப்பழக்கம் இருந்துவருதல் சகஜமே என்பதையும் நாம் அறிகிறோம்.) ஸைனப் றலியல்லாஹு அன்ஹா அவர்கள் அவ்வாறு அப்பழியைப் பலப்படுத்தி யிருப்பார்களாயின், ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களுடைய பெருமைக்கும், கண்ணியத்திற்கும் அது பாதகமாக இருந்திராதாயினும், ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கோ ஆயிஷா நாயகியவர்கள் பால் வீண் சந்தேக மேற்பட்டிருக்கும். ஆனால் பொறாமை, வஞ்சகம், தீமை முதலிய துராச்சாரங்களின் வாஞ்சையும் அறியாத அப்புனித நம்பிராட்டியார்கள் றலியல்லாஹு அன்ஹாவும் அவர்களிடம் அத்தகைய கெட்ட எண்ணம் அணுகவும் முடியுமோ? இதற்குச் சான்றாக அடியிற்கண்ட ரிவாயத்தையும் கவனிக்க.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது:—உம்முல் முமினீன் உம்மெஹபீபா அவர்கள் வபாத்தடையும்சமயம் நெரு

ங்கி விட்டது. அப்போது அவர்கள் என்னைக் கூப்பிட்டு அழைத்து, "ஆயிஷாவே! நான் பயணமாகிறபடியால, நம்மவர்களுக்கிடை ஏதேனும் மனஸ்தாபத்திற்குரியபேச்சுகள் நடந்திருக்குமாயின், அவற்றைத் தாங்கள் மன்னிக்க வேண்டியது" என்று நயந்து கேட்டுக்கொண்டபோது நான், "மன்னித்தேன்" என்று சொன்னதுடன் என்னைப் பற்றிய மட்டிலும் அவர்களிடம் மன்னிப்புக்கேட்டு அவர்களுக்காக வேண்டியும் துஆச்செய்தேன். பின்னர் உம்மெஹபீபா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் இதர நம்பிராட்டியார்க ளனைவர்களையுங் கூப்பிட்டு மன்னிப்புக்கேட்டுக் கொண்டார்கள். உம்யெஹபீபா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் மதீனாவின் கண் ஹிஜ்ரி 24-ல் வபாத்தடைந்து, "பகீ" யுடைய கபுருஸ்தானத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

ஆயிஷா நாயகி யவர்கள் ஜுவைரியா றலியல்லாஹு அன்ஹா அவர்களைப்பற்றி திருவுளம பற்றுகிறார்கள். "ஜுவைரியா' மிகவும் சற்குணங்கள் வாய்ந்தவர்கள். அவர்கள் இறைவனுடைய வணக்கத்தில் ஈடுபட்டிருத்தலையே மேற்கொண்டிருந்தார்கள். தம் நேரத்தை யெல்லாம் வணக்கத்திலேயே கழித்து விடுவார்கள்.

ஒருநாள் சாலையில் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஜுவைரியா றலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய அறை வீட்டிற்குள் பிரவேசித்தபோது, அவர்கள் தொழுதுகொண்டிருப்பதைக் கண்டார்கள் அப்பால் பிற்பகல் போனபோதும் அவர்கள் வணக்கத்திலேயே இருந்து வருவதைக் கண்டார்கள். அப்போது நபி பெருமானாரவர்கள், "ஏ! ஜுவைரியா! நான் உமக்கு ஒரு கலிமாவைப் போதிக்கிறேன். அது இரவும் பகலும் நீர் செய்யக் கூடிய வணக்கங்களுக்குப் பகரமாக இருந்துவரக் கூடியதாகும். அக்கலிமா யாதெனில் (ஸுப்ஹானல்லாஹி அதத கல்கஹு) என்பதேயாகும். இந்த ரிவாயத்திலிருந்து விளங்குவது யாதெனில் இபாதத் (வணக்கம்) தின் காரணமாகக் கணவனுக்கும், மனைவிக்கு முள்ள சம்பந்தங்களும், கடமைகளும் அற்றுப்போக வேண்டு மென்பது நோக்கமல்ல வென்பதும், இஸ்லாம் அத்தகைய வணக்கத்தைச் செய்ய போதிக்கவில்லை என்பதும், ஒவ்வொரு மனிதன் தனக்குரிய பிரதமக் கடமைகளையும் அவசியம் நிறைவேற்றி வைக்க வேண்டுமென்பதுமேயாகும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியாருக்குள் ஹஸ்ரத் 'ஸபிய்யா' றலியல்லாஹு அன்ஹா அவர்கள் பனி இஸ்ராயீல் உடைய வமிசத்தைச் சேர்ந்தவர்களா யிருந்துவந்தார்கள். இதர நம்பிராட்டியார்கள் பனி இஸ்மாயீல் வமிசவழியிலுள்ளவர்களா யிருந்துவந்தமையால், கீழ்கண்ட சம்பவத்திற்கிணங்க அவர்களுக்கிடை சிற்சில சமயங்களில் விகற்பமேற்பட்டுப்போதல் உண்டு.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸபிய்யா றலியல்லாஹு அன்ஹா அவர்களை அழைத்துக் கொண்டு மதீனுவுக்குச் சென்றபோது ஸபிய்யா றலியல்லாஹு அன்ஹா அவர்களுக்காக, ஹாரிஸாபின் நொஅமான் அவர்களுடைய வீட்டில் தனியே ஓரிடத்தை அமைத்துக் கொடுத்தார்கள். இதர நம்பிராட்டியார்கள் யாவரும் ஸபிய்யாவைப் பார்க்கப்போயினர். ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களும், ஸபிய்யாவைப் பார்த்துவிட்டு திரும்பினுர்கள். அப்போது ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகி யவர்களுக்குப் பின்னுல் சென்று அவர்களுடைய போர்வையின் முனையை இழுத்துக்கொண்டு, "ஆயிஷாவே! நீர் பார்த்தது என்ன? (நீதமாய்ச்சொல்லும்)" என்று கேட்டதற்கு ஆயிஷா நாயகி யவர்கள், "நான் பார்த்ததோ வெனில் யூதஸ்திரியொருத்தி உட்கார்ந்து கொண்டிருக்கிறுள்" என்றுர்கள். (இதோர் தமாஷான சம்பாஷணையா யிருந்து வந்ததேயன்றி எத்தகைய துவேஷத்தையும் வெளிப்படுத்தக் கூடியதாக இருந்திருக்க வில்லை.) அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "இல்லை, அவள் இஸ்லாத்தை தழுவி விட்டாள். அவளுடைய இஸ்லாமும் நல்லதே" என்று கூறினுர்கள்.

ஹதீதுடைய கிதாபுகளில் வந்திருக்கின்றது:—ஒரு தடவை ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களும், ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்களும் சேர்ந்து ஸபிய்யா றலியல்லாஹு அன்ஹா அவர்களைப்பற்றி ஏதோ இழிவாய்ப் (சற்றேறக்குறைய யூதஸ்திரி என்று) பேசிவிட்டார்கள். இதைப்பற்றி ஸபிய்யா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தம்மிடம் வந்தபோது தெரிவித்துக் கொண்டார்கள்.

அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஸபிய்யாவே! அவ்விருவர்களும் தாங்கள் நபியுடைய வமிசத்தைச் சேர்ந்தவர்களென பாராட்டிக் கொள்ளும் பட்சத்தில், நீர் என்னுடைய தந்தையாரும் ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் போலொத்த பரிசுத்த நபியே ஆவார். ஹஸ்ரத் மூஸா அலைஹிஸ்ஸலாம்அவர்கள்என்னுடையசிறியபிதாவும் முஹம்மத்ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னுடைய கணவருமாவர் என்று சொல்லி பாராட்டிக் கொள்ளும்" என மொழிந்தார்கள்.

சுப்ஹானல்லா திருநபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் திருமொழிகள் எவ்வளவு ரம்மியான போதனைகளாக இருந்துவந்தன. தகப்பன், பாட்டன் முதலியவர்களைப் பாராட்டி பெருமைக் கொள்ளல் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு மிகவும் பிடித்த மற்றதா யிருந்தமையால், அவர்கள் ஸபிய்யா றலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு அத்தகைய பதிலளிக்குமாறு போதித்தார்கள். ஸபிய்யா றலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய பெருந்தன்மையோ வெனில், அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களால் போதிக்கப்பட்ட மொழிகளையுங் கூட இதர நம்பிராட்டியார்களுக்குச் சொல்ல உடன்பட்டிருக்க வில்லை.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தம் வபாத்தின்போது தமக்கு ஏற்பட்ட நோயின் கொடுமையைச் சகியாது படுக்கையில் கிடந்து புரண்டு கொண்டிருக்கும் சமயம், நம்பிராட்டியார்கள் யாவரும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைச் சூழ்ந்து கொண்டு இருந்து வருவதற்கிடையே சண்ணீர் விட்டுக் கொண்டிருந்த ஸபிய்யா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை நோக்கி, "ஓ அல்லாவுடைய ரசூலே! அந்தோ! தங்களுக்கும் உண்டாயிருக்கும் நோய் எனக்கு வந்திருக்கக் கூடாதா?" என்றார்கள்.

அதைக் கேட்ட இதர நம்பிராட்டியார்கள் தங்களுக்கிடை கண் சிமிட்டிக் கொண்டார்கள. அதாவது ஸபிய்யாவுடைய மொழியை அவர்கள் இழிவாய் எண்ணினர். அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் நம்பிராட்டியார்களின்

சைகையை யுணர்ந்து, "ஆண்டவன் பேரில் சத்தியமாக, ஸபிய்யா இந்த மொழிகளைத்தம்மனமாரவே கூறினர். அவர் யதார்த்தவசனியா வார்" என்று மொழிந்தார்கள்.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுக்குள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகவும், மாறுபட்ட சுபாவ முடையவர்களாகவும் இருந்து வந்தார்களாயினும், ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்கள் பெரும்பான்மையான நம்பிராட்டியார்களைப்பற்றி புகழ்ந்தே பேசிவருவார்கள் என்பதற்கு, ஆயிஷா நாயகியவர்கள், "உம்முல்மூமினீன் மைமுனு றலியல்லாஹு அன்ஹா அவர்கள் மிகவும் நல்லவர்களாகவும், எங்களெல்லோரிலும் மிக்க பக்தியும், பேணுதலும் வாய்ந்தவர்களாகவும், உறவின்முறை சுற்றத்தார்களை அதிகம் நேசிப்பவர்களாகவும் இருந்து வந்தார்கள்" என்று கூறியுள்ளதே போதுமான அத்தாட்சியாகும்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்கள் திருவுளம் பற்றுகிறூர்கள்:— நான் ஒரு தடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்காக வேண்டி, "ஹரீரா" சமைத்துக்கொண்டு போனேன். அப்போது ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், ஸவ்தா றலியல்லாஹு அன்ஹா அவர்களும் இருந்து வந்தார்கள். நான் ஸவ்தா றலியல்லாஹு அன்ஹா அவர்களையும் 'ஹரீரா' சாப்பிடும்படியாகக் கேட்டுக் கொண்டேன். அவர் தனக்கு வேண்டாமென்றூர்கள். அப்பால் நான் அவர்களை வற்புறுத்தி, "நீங்கள் எப்படியாவது இதை சாப்பிடத்தான் வேண்டும். அப்படி சாப்பிடாது போனுல் இதை எடுத்து நான் உங்கள் வாயில் தடவித்தான் விடுவேன்" என்று சொன்னேன்.

அப்படிச் சொல்லியும் அவர்கள் தமக்கு ஹரீரா வேண்டாமென பிடிவாதம் செய்ததன் பேரில் நான் எழுந்திருந்து கொஞ்சம் போன்ற ஹரீராவை எடுத்து அவர்கள் வாயின் மீது தடவி விட்டேன். அதைக்கண்ட ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் புன்சிரிப்புடன் ஸவ்தா றலியல்லாஹு அன்ஹா அவர்களை நோக்கி, "நீரும் அதேவிதமாக ஆயிஷாவுடைய வாயின் மீது ஹரீராவைப் பூசிவிடும்" எனக்கூறி என் கைகளை அழுத்தமாய் பிடித்துக் கொள்ளவே, ஸவ்தா (ரலி) அவர்கள் ஹரீராவை கொண்டு

வந்து என்வாயின்மீது தடவிவிட்டார்கள் இச்சந்தர்ப்பத்தில் ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் தம்புதல்வராகிய அப்துல்லாவை அழைத்துக் கொண்டு வரும் சப்தம் கேட்டது. உடனே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒருக்கால் வீட்டிற்குள் வருகிறார்களோ என்ற எண்ணத்தின்பேரில், "நீங்கள் இருவரும் சீக்கிரம் போய் முகங்களைக் கழுவிக்கொள்ளுங்கள்" என்று மொழிந்தார்கள். ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களை மிகவும் பாராட்டுகிறார் என்பதை நாம் அன்றுமுதல் உணர்ந்து கொண்டதிலிருந்து அவர்கள் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் பால் என்றைக்குமே ஒருவித அச்சத்தை அடைந்து வந்தோம்.

இந்த ரிவாயத்தினின்றும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நீதிநெறியும், ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய மேன்மையும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்கள் அடைந்து வந்த மன உல்லாசமும் நன்கு புலனாகின்றன.

ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள்:-ஒருதடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் யாத்திரைக்குப்போகும்படி நேர்ந்தபோது, நம்பிராட்டியார்களுக்குள் யாரை அழைத்துப்போகலா மென்பதைப்பற்றிச் சீட்டு குலுக்கப்பட்டது. அப்படிச் செய்ததில் என்பெயரும் ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய பெயருமாக இரண்டு பெயர்கள் வெளியாயின. நாங்கள் இரண்டு பேரும் போகநேரிட்டது. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இராக்காலத்தில் யாத்திரை பண்ணும்படியான சந்தர்ப்பங்களில் நான் அவர்களுடன் இருக்க நேரிட்டால் அவர்கள் என்னோடு சம்பாஷித்துக் கொண்டே வழிபயணத்தைப் போக்குவது வழக்கம். ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் என்னிடம், "இன்றிரவு நீங்கள் என் ஒட்டையின் மீது வாசனமேறிக் கொள்ளுங்கள். நான் உங்கள் ஒட்டையின் பேரில் ஏறிக்கொள்ளுகிறேன். நான் உங்கள் ஒட்டையையும் நீங்கள் என் ஒட்டையையும் பார்த்துக் கொண்டே போவோம்" என்றார்கள். நான் அவர்களுடைய அத்தகைய கோரிக்கையை அங்கீகரித்து அதின்

பேரில் வாகன மேறிச்சென்றேன். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என் ஒட்டகையை நோக்கி வந்தார்கள். அதில் ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஏறி இருந்தார்களென்பதை யறிந்தும் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கே சலாம் செய்து விட்டுத்தாமும் அதில் ஏறிக் கொண்டார்கள். இறங்கவேண்டியிருந்த விடத்தை யடைந்ததும் நான் முந்தி இறங்கி விட்டேனாகிலும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னோடு இல்லாமற் போனதைக்கண்டு மிக்க மனவேதனையுடன் என்னுடைய இரண்டு கால்களையும் புல்லில் தொங்க விட்டுக்கொண்டு, "இறைவனே! நீ என்னை ஒரு பாம்பு அல்லது தேளைக் கொண்டாவது தீண்டவை; ஏனெனில் நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீது குறை கூறவுங்கூட இடமில்லையே (குற்றம் என்னுடையதே) என்று கூறி வருந்தினேன்.

உபைத்பின் உமர் அவர்களால் அறிவிக்கப் படுகின்றது:— ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றினார்கள்; "ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸைனப் பின்தெ ஹஜஷ் அவர்களிடம் வெகுநேரம் உட்கார்ந்திருந்து தேன்வாங்கிப் புசிப்பதுண்டு. ஒரு நாள் நானும், "ஹப்ஸா" றலியல்லாஹு அன்ஹா அவர்களுங்கூடி நம்மிருவர்களுக்கிடை எவரிடமாவது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வருவார்களானால், அவர்களுடைய திருவாயிலிருந்து கந்தனாபூண்டு உட்கொண்டதனால் ஏற்படக்கூடிய துர்வாசனை வெளிவருவதாகக் கூறி அவர்கள் அவற்றைப் புசித்தார்களா வெனக் கேட்க வேண்டுமென்பதாய் முடிவுசெய்து கொண்டோம்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், எங்களிடம் வரவே அவர்களிடம் அவ்வாறே வினவப்பட்டபோது அவர்கள், "நானோ ஸைனபுடைய வீட்டில் தேன் குடித்தேன். இனி அதைக் குடிக்கமாட்டேன்" என திருவாய்மலர்ந்தருளியபோது, அல்லாஹுத் தஆலா திருகுருஆனில் (ஒநபியே! நீர் அல்லாவால் ஹலாலாக்கப்பட்ட வஸ்துவைத் தமக்காகவேண்டி என் ஹராமாக்கிக் கொள்ளுகிறீர்)" என்ற ஆயத்து இறங்கியது. இந்த ஆயத்தின் மீதி

யான பாகத்தில் ஹஸ்ரத் ஆயிஷா அவர்களையும் ஹஸ்ரத் ஹப்ஸா அவர்களையும் சுட்டிக்காண்பிக்கப் பட்டிருக்கிறது.

ஆனல் இதைப்பற்றிய இரண்டாவது ரிவாயத்து யாதெனில், ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களால் அறிவிக்கப்படுகிறது:— "ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு ஹல்வாவும், தேனும் மிகவும் பிரியமான வஸ்துக்களாய் இருந்தன. மேலும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அஸர் தொழுகைக்குப் பின்னர் தங்களுடைய நம்பிராட்டியார்களிடம் சென்று தங்கள் பிரியத்திற் கிணங்க யாதொருவரோடு தமாஷாய் சம்பாஷித்துக் கொண்டிருத்தல் வழக்கமாக இருந்து வந்தது.

ஒருநாள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஹப்ஸா பின்தெ உமர் அவர்களுடைய வீட்டிற்குச் சென்று தங்கள் வழக்கத் திற்கு மாருகவே அதிகநேரம் அங்கு தங்கி விட்டார்கள். அதனல் எனக்கு அதிக ஆசாபங்க மேற்பட்டது. நான் அதற்கு என்ன காரண மென்பதாக வெளியில் விசாரித்தபோது ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு யாரோ தேனையனுப்பி யிருந்ததாகவும், அவர்கள் அத்தேனைக் கொண்டு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஷர்பத்து செய்து கொடுத்ததாகவும், அத ஞலேயே ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய ஜாகையில் அதிக நேரம் தாமதித்திருக்க நேர்ந்ததாகவும் தெரியவந்தது. அதைக் கேட்ட எனக்கு ஒருவித எண்ணமுண்டாயிற்று. அதாவது எப்படி யாவது ஒரு உபாயம் செய்யவேண்டு மென நான், "ஸவ்தா" றலியல் லாஹு அன்ஹா அவர்களை நோக்கி, "ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உங்களுடைய வீட்டிற்கு வந்தால் நீங் கள் அவர்களிடம், 'தாங்கள் ஏதோ நாற்றமுள்ள பதார்த்தத்தைப் புசித்திருக்கிறீர்கள் போல் தெரிகிறது" என்று சொல்லுங்கள். அதற்கு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இல்லையே என்பார்களாகில், "இதோ எனக்கு உங்கள் வாயிலிருந்து வரும் துர்நாற்றத்தால் தெரிகிறதே" என்று சொல்லுங்கள். அப் போது அவர்கள், "நான் ஹப்ஸாவுடைய வீட்டில் தேனைக் குடித் தேன்" என்று மொழிவார்களாஞல் நீங்கள், "ஒருக்கால் அத்தேன் வண்டுகள், அர்பத் என்னும் செடிகளின் ரசத்தை உறிஞ்சிருக்கும்

போல் தெரிகிறது'' என்று சொல்லுங்கள். ''நானும் இதேவிதமாகச் சொல்லுவேனுகையால் ஸபியாவே! நீங்களும் இப்படியே சொல்ல வேண்டும்'' என்றேன்.

ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள்:— ''ஸவ்தா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் அப்பால் எனக்கு அளித்தபதில் யாதெனில், ''றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என் வீட்டிற்குவந்து வாயற்படியின் பேரில் நின்றார்கள். அப்போது நான் தாங்கள் சொல்லிய வார்த்தைகளைப் பயந்து பயந்து கேட்கத்துணிந்தேன். அதாவது, ''றசூலுல்லாவே! தாங்கள்யாதொரு நாற்றப்பதார்த்தத்தைப்புசித்தீர்களா?'' எனக்கேட்டதற்கு அவர்கள், ''இல்லையே'' என்று மொழிந்தார்கள். நான், ''அப்படியானல் தங்கள் வாயிலிருந்து துர்வாடை வருவதற்குக் காரணம் யாது?'' என்று கேட்டபோது அவர்கள், ''ஹப்ஸா எனக்குத்தேனைகுடிப்பாட்டினார்'' என்றார்கள். நான், ''அத்தேன்வண்டு அர்பத் செடியின் ரசத்தை உறிஞ்சிருக்கவேண்டும்'' என்று கூறினேன். பிறகு றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னிடம் (ஆயிஷா நாயகி) வந்தபோது நானும் அவ்வாறே கேட்டேன். அவர்கள் ஸபியாவுக்கு அளித்தபதிலே எனக்கும் அளித்தார்கள். ஆனல், உடனே அவர்கள், ஹப்ஸா விடத்திற்கு மீண்டும் போனார்கள்.

றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திரும்பி வந்ததைக் கண்ட ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்கள், ''றசூலுல்லாவே! நான் தங்களுக்காகத் தேன் ஷர்பத்தைக் கொண்டு வரலாமா?'' எனக் கேட்டதற்கு ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹி ஸல்லம் அவர்கள், ''எனக்குத் தேனே வேண்டியதில்லை'' என்று மொழிந்தார்கள்.''

ஆயிஷா நாயகியவர்கள் கூறுகிறார்கள்:—''இதற்குள் 'ஸவ்தா' றலியல்லாஹு அன்ஹா (வெகு சந்தோஷங்கொண்டு) ''நாங்கள் தேனை ஹராமாக்கி விட்டோம்'' என்று கூறியபோது நான், ''சும்மா இருங்கள். (றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் காதில் கேட்கக்கூடும்)'' என்று சொன்னேன்.

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—''றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிசர்

டியார்களுக்குள்ளாக ஒருவர் மற்றொருவரைக் கெட்டவ ரென்று சொல்லி விடுவார்களானால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள், "நீரும் அவருக்குக் கெட்டவரென்று பதிலுக்கு பதிலாக சொல்லிவிடும், அல்லது பொறுமையைக் கைக்கொள்ளும் இதுரொம்பவும் நல்லது" என்று போதிப்பார்கள். நான் எச்சமயத்திலாவது எவர் மீதும் கோபங்கொண்டு விட்டாலோ ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஓ அயீஷ்!" ஆண்டவனே! என்னுடைய பாவங்களை மன்னித்து என்னைப் பித்ற என்னும் புரட்சிகளை விட்டும் காத்துக்கொள்" என்று துவாகேட்கும் படியாகச் சொல்லுவார்கள். தப்பித்தவறி நான் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடனேயே கோபித்துக் கொண்டாலோ அவர்கள் எனக்குச்சமாதானங் கூறுவார்கள். அதற்கும் நான் உட்படா விட்டால் சரி ஒரு மத்தியஸ்தரை அழைத்துக் கொள்ளும்" என்று திருவுளம் பற்றுவார்கள்.

ஒருதடவை அவ்வாறே நேரிட்டபோது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னிடம், "உமக்குச்சம்மதமானால் நான் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களை மத்தியஸ்தராக அழைக்கின்றேன் என்றபோது நான், "அவரை அழைக்கவேண்டாம்; ஏனெனில் அவர் மிகவும் கண்டிப்புள்ளவர். ஆனதால் நான் என் தந்தையாரையே மத்தியஸ்தராக்கிக் கொள்ளுகிறேன் எனச்சொல்லி என் தந்தை ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து விஷயத்தைக் கூறியபோது, அவர்கள் என்னை அடிக்க ஆரம்பித்தார்கள். நான் ஓடிப்போய் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குப்பின் ஒளிந்து கொண்டேன். என் தந்தையார் போய் விட்டதற்குப்பின் நான் வேறுபட்டு ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டபோது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னை அழைத்தார்கள். நான் போகவில்லை. அப்போது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னைப்பார்த்து சிரித்தவர்களாய், "இதோ! சற்றுமுன் நீர் என் முதுகையொட்டி உட்கார்ந்திருந்தீரே! இப்போது நான் கூப்பிட்டால் வரக்கூடாதா?" என்று கூறினார்கள்."

## ஆயிஷா நாயகியவர்களின் கல்விப் பயிற்சி.

ஆயிஷா நாயகியவர்களின் பிரியமும் விசுவாசமும் அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடன்

வாழ்ந்து வந்த நிலைமையும் இதுவரையில் கூறிவந்த விஷயங்களினால் நன்கு வெளியாகிவிட்டது. ஆனால் கணவருக்கும் மனைவிக்குமுள்ள சம்பந்தங்கள் அவர்களுக்கிடை ஏற்படும் அன்னியோன்னியங்களைக்கொண்டே அற்றுப்போய்விட வேண்டுமென்பது இதனால் தாத்பரியமல்ல. இவ்வாறு கைக்கொள்ளல் அல்லது நினைத்தல் உலக அபேக்ஷகர்களினதே கொள்கையாகும்.

முன்னால்வந்துள்ள ரிவாயத்துக்களைப் பார்க்கையில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு ஆயிஷா நாயகியவர்களின் பிரியமொன்றே போதுமானதாக இருந்திருக்கலாமோவென சில குறுகிய நோக்கமுடையவர்கள் நினைக்கவுங்கூடும், இது பெருந் தவறுதலேயாகும்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் தம்முடைய 9-பிராயத்திலேயே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் திவ்விய கிரகத்திற்கு ஒரு ஒளிக் கொப்பாக இருந்து வந்தார்கள் என்பதும், அவர்களுடைய அரியகுணங்கள் பாராட்டக் கூடியனவாயிருந்தன வென்பதும் சிந்திக்கத்தக்க விஷயமே. ஏனெனில் ஒரு சிறு பிராயமுள்ள பெண் கல்வியையும், நல்லொழுக்கங்களையும் போதிக்கப் பட்டாலொழிய அவ்வாறு நடந்து கொள்ளல் சாத்தியமோ?

அவர்களுடைய கணவர் வீட்டில், அவர்களுடைய கணவர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பேரிலேயே வஹீ என்னும் தெய்வ அறிவிப்பு இறங்கி வருமே யல்லாது ஆயிஷா நாயகியவர்கள் பேரில் வஹீ இறங்குவதும் கிடையாது. அவ்வாறு வஹீ இறங்கி இருந்தாலாவது அவர்களுக்கும் இல்மெலதுன்னி என்னும் அசரீரக்கல்வி அடையப்பெற்றதெனச் சொல்லலாம். ஆக, அவர்களுடைய கல்விப்பயிற்சியின் ஒரு பாகம் அவர்களுக்கு அவர்களது பெற்றோர் வீட்டிலேயே அடையப் பெற்றதாகும். அவர் எந்த வமிசத்தில் பிறந்திருந்தார்களோ, அந்த வம்சத்திற்கும் கல்வியறிவே சிறப்பை யுண்டாக்கக் கூடியதாக விருந்தது. அப்பால் ஆயிஷா நாயகியின் கல்வி யபிவிருத்திகள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய திவ்விய சாவகாசத்தின் பயனாகவே பரிபூரண நிலைமைக்கு எட்டியன.

இறைவன் ஆயிஷா நாயகியவர்களின் கல்விப்பயிற்சிக்காக வேண்டி அவர்களுக்கு அருள்புரிந்த போதகரோ வெனில், உலகில் தோன்றியுள்ள போதகர்களான நபிமார்களுக் கெல்லாம் தலைமை அந்தஸ்தை வகித்தவர்கள்.

அவர்களுடைய மார்க்கபோதனையோ வெனில், (அக்மல்து வகுல் தீனுகும் வஅத்மம்து அலைகும் நிஃமதீ) என்னும் முத்திரையைக்கொண்டு சீர்படுத்தப்பட்டது.

ஆயிஷா நாயகியவர்களுக்கு எந்த கிதாபிலிருந்து பாடம் போதிக்கப்பட்டு வந்ததெனில், அக்கிதாபு (குர்ஆன்ஷரீப்) சர்வமேன்மையும் படைத்த இறைவனால் கோர்வை செய்யப்பட்டுள்ளது. அதன் பயனாகவே அந்தரங்கமும் பகிரங்கமானதுமான எல்லா விஷயஞானங்களும், ஆயிஷா நாயகியவர்களுக்குள் ஒருங்கே அமைந்திருந்தன. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உலகத்திற்காக வேண்டியே இருளைப்போக்கக் கூடிய ஒளியையும் விவரமுள்ள கிரந்தத்தையும் தம்முடன் கொண்டு வந்தார்கள். வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு, ஆக நான்கு திசையிலுள்ளவர்களும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களது பரிசுத்தமான போதனைகளினின்றும் விழிப்படைந் திருக்கையில், றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய சுற்றத்தார்களில் குறிப்பாக அவர்களின் வீட்டினர்களுக்கு ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அத்தகைய அரிய கல்வியின் பாக்கியத்தைக் கொண்டும், ஞான ஒளியைக் கொண்டும் நிறப்பமாக்காது வைக்கவும் உடன் பட்டிருப்பார்களோ? ஒருபோது மன்று.

ஹஸ்ரத் இமாம் கஸ்ஸாலிரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், "இஹ்யாஉல் உலூம்" என்னும் கிரந்தத்தில்; வரைந்திருக்கிறார்கள்:—றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியவர்களை நோக்கி "ஆயிஷாவே! நீர் சதா சுவர்க்கத்தின் கதவை தட்டிக்கொண்டு இருக்கவும்" என மொழிந்தபோது, ஆயிஷாநாயகியவர்கள், "எந்த வஸ்துவைக்கொண்டு?" என்றார்கள். அப்போது றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "பசியைக்கொண்டு" என போதித்தார்கள்.

இந்த ரிவாயத்திலிருந்து றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியுனுடைய பிரீதியில், எத்

தகைய அம்சத்தைக் கையாண்டு வந்தார்கள் என்பது உத்தேசிக்கப் படலாம். தம் அன்பினர்க்குப் பட்டினியாக இருக்கும்படி போதித்தல் இறைவனுடைய வழக்கமென்றோ அல்லது அவனுடைய ரசூலின் பழக்கமென்றோ சொல்லக்கூடும். உலகமோக முள்ளவர்களாகிய துர் இச்சையின் அபேக்ஷகர்கள் இத்தகைய நற்போதனைகளைப் போதிக்கும் வழக்கத்திற்கு ஆளாகமாட்டார்கள்.

"இஹ்யாஉல் உலூம்" என்ற கிரந்தத்தில் வந்திருக்கிறது. "ஆயிஷா நாயகியவர்கள் எப்போதாவது கோபித்துக்கொள்வார்களானல் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷாநாயகி யவர்களின் மூக்கை பற்றிக்கொண்டு, "ஓ அயீஷ்!" இந்த துஆவை ஓதும் என்று கூறுவார்கள்.

(அதன் அருத்தம்:—முஹம்மதை வளர்க்கும் ஆண்டவனே! என் பிழைகளை மன்னித்துக்கொள். என் மனதின் கோபத்தை அப்புறப்படுத்து. என்னை மயக்கவைக்கும் பித்னக்களை விட்டும் தப்பவை). என்பதே. (கோபமான வேளைகளில் இந்த துவாவை ஓதுதல் முஸ்தஹப். ஆகும்.)

மேற்கூறிய ரிவாயத்தில், ஆயிஷா நாயகியை 'அயீஷ்' என்னும் சுருக்கப் பெயரைக்கொண்டு அழைக்கப்பட்டிருக்கிறது. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சந்தோஷமான வேளைகளில் அந்தப் பெயரைக்கொண்டு அழைப்பது வழக்கம் என இதற்கு முன்னும் வந்துள்ளது. நபி பெருமானவர்கள் ஆயிஷா நாயகியைக் கோபத்திலிருக்கக்கண்டும், அன்பாகவே அழைப்பதுடன் போதனையும் செய்வது குறிப்பிடத் தக்கது.

ஒரு தடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகி யவர்களிடம், "ஆயிஷாவே! எந்த ஒரு மனிதனில் சாந்தமும், மிருதுவும் அமைந்திருக்கின்றனவோ, அவன் இம்மை, மறுமைக்குரிய அருள்களுக்கு உரிமை வாய்ந்துவிட்டான். ஆனல் எவனில் இவ்வரிய தன்மைகள் வாய்ந்திருக்கவில்லையோ, அவன் தன் உரிமைகளையே இழந்தவனுவான். ஆயிஷாவே! சாந்தத்தை உட்கொள்; ஏனெனில், அல்லாஹுத் தஆலாவாகிறவன், எந்த ஒரு வமிசத்தை மேம்பாடாக்கி வைக்க நாடுகிறானே, அந்த வமிசத்தாருக்குச் சாந்தத்தின் மார்க்கத்தைக் காட்டுகிறான். ஆண்டவன்

தானும் சாந்தமா யிருக்கிறான் சாந்தத்தை விரும்புகிறான் என்று திருவுளம் பற்றினார்கள்.

ஒரு தடவை ஆயிஷா நாயகியவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடன் பிரயாணம்பண்ணிக்கொண்டிருக்கையில், அவர்களுடைய சவாரியின் ஒட்டகம் விரைவாய் செல்லக்கூடிய சுறுசுறுப்புள்ளதாக இருந்து வந்தது. ஆயிஷா நாயகியவர்கள், அந்த ஒட்டையை வலது புறமாயும், இடது புறமாயும், அடிக்கடி திருப்பி ஒட்டவே, அதைக்கண்ட ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியை நோக்கி, "ஆயிஷாவே! சாந்தத்தையும், இலகுவையும் கடைபிடியும். சாந்தமென்ற வஸ்துவோவெனில், எக்காரியத்தையும் லக்ஷணமாக்கி வைப்பதாகும். எக்காரியத்தில் அது இல்லையோ, அக்காரியத்திற்கே பின்னமேற்படுவதாகும்" என்று கூறினார்கள்.

இப்னு ஸஅத் அவர்களால் அறிவிக்கப்படுகிறது:-ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றினார்கள்:-என்னிடம் ஒரு 'அன்ஸார்' ஸ்திரியானவர் வந்தார். அவர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் கம்பளப் படுக்கையைப் பார்த்துவிட்டு தம் ஜாகைக்குச் சென்றதும், மிருதுவான ரோம வஸ்திரப் படுக்கையொன்றை என்னிடத்திற்கு அனுப்பி வைத்தார். ரசூலுல்லா அவர்கள் வீட்டிற்குள் வந்தவுடனே என்னிடம் (அப்படுக்கையைக் கண்டு) "ஆயிஷாவே! இதென்ன?" என்று கேட்க நான், "ரசூலுல்லாவே! என்னிடத்திற்கு அன்ஸார் மாதொருவர் வந்திருந்தார். அவர்தங்கள் படுக்கையைப் பார்த்துவிட்டுப்போய், இதை அனுப்பி யிருக்கிறார்" என்று பதில் கூறியதும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "இதை வாப்பீஸ் செய்யும், இதைவாப்பீஸ் செய்யும், இதைத்திரும்ப அனுப்பிவிடும்" என மூன்று முறை ஓயாது மொழிந்தார்கள். எனக்கோ அப்படுக்கை மிகவும் அழகாயிருந்தமையால், என்வீட்டில் இருக்கட்டுமென நான் விரும்பியபோது, மீண்டும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஆயிஷாவே! இதை வாப்பீஸ் செய்துவிடும். விரும்புவேனாகில் ஆண்டவன்பேரில் சத்தியமாகமொழிகிறேன். நான் மட்டும்என் சிருஷ்டிகர்த்தனாகிய இறைவன் என்னோடு பொன், வெள்

ளியுள்ள மலைகளையே நடத்தாட்டிவிடுவான்'' என்று திருவுளம் பற்றினார்கள்.

பைஹகீ அவர்களால் அனஸ் றலியல்லாஹு அன்ஹுவின் ரிவாயத்தை அறிவிக்கப்படுகின்றது:-ஒரு தடவை ஆயிஷா நாயகியவர்கள் காய்ச்சலினால் பீடிக்கப்பட்டு மிகவும் கஷ்டமடைய நேரிட்ட போது, அவர்கள் அக்காய்ச்சலை நோக்கியே கடிந்துபேசவும் தலைப்பட்டார்கள். (அநேக நோயாளிகள் இப்படிச் செய்வதும் இயற்கையே.) அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியவர்களுக்கு, "நீங்கள் காய்ச்சலுக்குப் பொல்லாங்கு சொல்லாதீர்கள். ஏனெனில், அதுவும் இறைவனாலேயே விடப்பட்டது. நான் உமக்குச் சில மொழிகளைக் காய்ச்சலுக்குப் பரிகாரமாக சொல்லிக்கொடுக்கிறேன். நீங்கள் அவற்றை ஓதுவீர்களாகில், இறைவன் உங்களைவிட்டும் அக்காய்ச்சலை அப்புறப்படுத்தி விடுவான்'' என்று கூறியபோது, ஆயிஷா நாயகியவர்கள், ''அம்மொழிகளை எனக்கு அவசியம் போதியுங்கள்'' என்றார்கள். அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ஒரு துஆவை ஓதினார்கள். அதன் அருத்தம் (இறைவனே! என்னுடைய மெல்லிய தோலின் பேரிலும் சிறிய எலும்புகள்மீதும் இரக்கம் பாராட்டி என்னைச் சூட்டின் கொடுமையை விட்டும் தப்ப வைப்பாயாக! ஓ உம்மெ மில்தம் (காய்ச்சலின் பெயர்) நான் இறைவனிடம் கார்மானத்தைத் தேடுகின்றேன். நீ எனக்கு தலையில் வலியும், என் வாயில் நாற்றத்தையும் உண்டாக்காதே. என் மாமிசத்தைத் தின்னாதே, என் இரத்தத்தை குடிக்காதே. நீ என்னைவிட்டும் அல்லாஹுத் தஆலாவைத் தவிர மற்றவர்களையும் வணக்கத்திற்குரியவர்களென ஆக்கிக்கொள்வோரிடத்திற்கு போய்விடு) என்று இவ்வாறு போதித்தார்கள். ஹஸ்ரத் ஆயிஷா நாயகி ரசூலுல்லா அவர்களால் கற்பிக்கப்பட்ட அம்மொழிகளை ஓதியதும் காய்ச்சல் உடனே நீங்கிவிட்டது'' எனக் கூறுகிறார்கள்.

மிஷ்காத் ஷரீபில் வந்திருக்கிறது:- ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், "அல்லாவின் ரசூலே! எந்த வஸ்துக்களைக் (கேட்போருக்கு) கொடுக்கும்போது தடுக்கலாகாது?'' என வினவியபோது, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "தண்ணீர், உப்பு,

நெருப்பு'' என குறிப்பிட்டார்கள். அப்போது ஆயிஷா நாயகியவர்கள், "ரசூலுல்லாவே! தண்ணீரின் அவசியத்தையோநாம் அறிவோம். உப்பு, நெருப்பு இவைகளும் முக்கியந் தானு? (இந்த கேவலமான இரண்டு வஸ்துக்களும், தண்ணீருக்கு ஈடாக இருக்கவில்லையே)'' என்று கேட்க, ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் 'ஹிமைராவே! (மறக்காதே) எவனொருவன், எவனொருவனுக்கு சமைக்க நெருப்புக் கொடுப்பானே அந்த நெருப்பைக்கொண்டு என்னென்ன பதார்த்தங்கள் சமைக்கப்படுமோ, அப்பதார்த்தங்களை யாவுமே (நெருப்பு கொடுப்பவன், நெருப்பு வாங்கினவனுக்கு) இலவசமாய் கொடுத்ததைப் போலாகும். இன்னும் எவனொருவன் எவனொருவனுக்கு உப்பைக் கொடுப்பானே அந்த உப்பைக் கொண்டு தயாராகும் ருசிகரமான பதார்த்தங்கள் யாவும் கொடுத்தவன் வாங்கினவனுக்கு தானஞ்செய்தது போலாகும். இன்னும் எவனொருவன் எவனொருவனுக்குத் தண்ணீர் கிடைக்கக்கூடிய விடத்தில் தண்ணீர் குடிப்பாட்டினுனே அவன் ஒரு அடிமையை விடுதலையாக்கி வைத்த பலனையடைவான். தண்ணீர் கிடைக்காத விடத்தில் தாகமுள்ளவனுக்குத் தண்ணீர் குடிப்பாட்டினவன் தாகமுள்ளவனுக்குப் புதியவாழ்க்கையை உண்டாக்கி வைத்த பலனையடைவான்'' என்று திருவுளம் பற்றினுர்கள்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய தர்மசம்பந்தமான போதனையைப்பற்றி ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறுர்கள்:-"ஒருநாள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடத்தில் ஏழு பவுன்கள் கிடைக்கப் பெற்றிருந்ததில், 5-பவுன்களோ அவர்களால் செலவு செய்யப்பட்டுப் போயின. மீதியாயிருந்து விட்டவை இரண்டு பவுன்கள். அவற்றின் காரணமாக அன்றிரவு முழுதும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு நித்திரை ஏற்பட்டிருக்கவில்லை. நான் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய அத்தகைய நிலைமையைக்கண்டு காரணத்தை வினவியதற்கு அவர்கள், "இதோ மீதியாயிருந்துவரும் இரண்டு பவுன்களின் கவலையினுலேயே எனக்கு நித்திரைவரவில்லை'' என்று கூறினுர்கள். அப்போது நான் "இதைப் பற்றி கவலை ஏன்? விடியற்காலமானதும் தாங்கள் அவற்றைத்தானஞ் செய்து விடக்கூடுமே'' என முறையிட்டேன். அதைக்கேட்ட ஹஸ்

ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஆயிஷாவே! விடியும் வரையில், என்னுடைய வாழ்க்கைக்கு உத்தரவாதம் செய்ய எவராலும் சாத்தியமோ? விடியும்வரையில் இது (பிராணன்) மீதியாய் இருக்குமோ, இல்லையோ. இதற்கு ஒருவராலும் ஜாமீன் கொடுக்க முடியாது" என்று மொழிந்தார்கள்.

ஒரு கடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகிக்கு, "ஆயிஷாவே! நரகத்தை விட்டும் தப்பித்துக் கொள்வதற்குக் கவலைப்படும். கஜூருடைய ஒரு துண்டானுலும் சரியே; இறைவனுடைய பாதையில் தானஞ் செய்யப்படவேண்டும்" என்று கட்டளையிட்டார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது:-ஒரு நாள் சில யூதர்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய சந்நிதானத்தில் ஆஜராகி அஸ்ஸலாமு அலைக்கும் என்று சொல்லுவதற்குப் பதிலாக அஸ்ஸாமு அலைக்கும் (உங்களுக்கு மரணம் வரக்கடவது) என்று சொன்னார்கள். அதைக்கேட்க எனக்கு மனம் சகியவில்லை. நான் அந்த யூதர்கள் பால் வெறுப்புக் காட்டினேன். அப்போது ரசூலுல்லா என்னைப்பார்த்து, "ஆயிஷாவே! அதனால் உமக்கென்ன? போகட்டும் விடுங்கள்" என்று கூறினபோது, நான், "பெருமானே! இவர்கள் என்ன சொன்னார்களென்பதை தாஙகள் கேட்கவில்லையா?" என்றேன். அதற்கு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "அவர்கள் சொன்னதையே நான் கேட்டேன். நானும் அவர்களுக்குக் கூறிய சுருக்கமான பதிலை நீர் கவனிக்கவில்லையோ? நான் அவர்களுக்கு, "வஅலைக்கும்" என்று சொன்னேனே. அதைவிடமேலென்ன? அதாவது எதொன்றை யூதர்கள் எனக்குச் சொன்னார்களோ, நானும் அதையே அவர்களுக்கு வாப்பீஸ் கொடுத்து விட்டேன்" என்று திருவுளம் பற்றினார்கள்.

ஹஸரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது:— "ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ரமலான் ஷரீபுடைய கடைசியான 10-நாட்களில் இராக்காலங்கள் முழுமையும் ஆண்டவனுடைய தியானத்திலும் தொழுகையிலுமே கழிப்பார்கள். அத்தோடு பெருமானவர்கள் தம்வீட்டு ஜனங்களையும் இபாதத்திற்காக வேண்டி விழிக்காட்டிக் கொள்வது வழக்கம். மேலும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இந்த நாட்

களில் உலக காரியங்களைக் கவனிக்கவு மாட்டார்கள்'' என்று திரு வுளம் பற்றினார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள்:— ''ஒரு வீட்டில் யாதொரு சித்திரப்படமுள்ள சாமான் இருந்துவரு மானால் அதைப்பார்க்கும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அதனை முறித்தெறியாது போகமாட்டார்கள். ஒருமுறை, நான் சித்திரவேலைப்பாடுள்ள தலையணை யொன்றை விலைக்கு வாங்கி னேன். அத்தலையணையைக் கண்ணுற்ற ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வீட்டிற்குள் பிரவேசிக்கவும் சம்மதியா மல் வாயற்படியின் பேரிலேயே நின்று விட்டார்கள். நான் அவர்க ளின் திருமுகத்தைக்கண்ட மாத்திரமே அவர்கள் ஏதோ அதிருப்தி யடைந்திருப்பதாக உணர்ந்து, ''ரசூலுல்லாவே! நான் அல்லாவுக்கும் அவனுடைய ரசூலுக்கும் முன்னிலையில் தவ்பாச்செய்து கொள்ளவோ தயாராயிருக்கின்றேன். ஆனால் தாங்கள் வீட்டிற்குள் பிரவேசிக்கக் கூடாதளவுக்கு என்னாலேற்பட்ட குற்ற மின்னதென்பதை வெளி யிடுவீர்களாக'' எனக்கேட்டுக்கொண்டபோது, ரசூலுல்லாஹிஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், அந்த தலையணையின் புறமாய் சைகைகாட்டி, ''அதுஎங்கிருந்து வந்தது?'' என்று வினவினார்கள். அதற்கு நான் ''ரசூலுல்லாவே அதை நான் தாங்கள் சாய்ந்து கொண்டு உட்காருவீர்களே என்ற எண்ணத்தின் பேரில் விலைகொடு த்து வாங்கினேன்'' என்றேன். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்கள், ''மறக்கவேண்டாம்; இந்த சித்திரப்படங் களை வரைபவர்கள் பேரில் கியாமத் நாளில் வேதனை ஏற்படும். இன் னும், ''நீங்கள் செய்துள்ள சொரூபங்களில் (படங்களில்) உயிரை யுண்டாக்குங்கள்'' என்றும் சொல்லப்படும். எந்த ஒரு வீட்டில் பட மிருக்குமோ அங்கு ரஹ்மத்து (கிருபை) க்குரிய மலக்குகள் இறங்கு வதில்லை என்னும் திருவுளம் பற்றினார்கள். இதேவிதமாக ஒருநாள் சித்திரப்படமுள்ள படுதா ஒன்று வீட்டின் ஒரு மூலையில் கிடந்து வந்ததைக்கண்ட ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அதைக் கிழித்துவிட்டபோது நான் (ஆயிஷா றலியல் லாஹு அன்ஹா) அதனின்றும் இரண்டு தலையணைகளுக்காக வேண்டி உரை தைத்துக்கொண்டேன். ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்கள் அத்தலையணைகளையும் உபயோகிக்க வில்லை.

ஒருதடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ஜிஹாதுக்குப் போனபோது நான் ஒரு புடவையை யெடுத்து கதவின் நிலைமேலிருந்து மறைவுக்காக போட்டுவிட்டேன். ஆனால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திரும்பிவந்து அப்படுதாவைப் பார்த்தபோது, "இறைவன் மண், கல் ஆகிய இவற்றிற்குப்புடவை உடுத்தும் படியாய் உத்தரவளிக்கவில்லை" என்பதாகக் கூறி அப்படுதாவைக் கிழித்து விட்டார்.

ஹஸ்ரத் இப்னு அப்பாஸ் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது.-"ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் தம்முடைய பந்துக்களுக்கிடை ஒருபெண்ணை ஒருவருக்கு நிக்காஹ் செய்து கொடுத்தார்கள். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வீட்டிற்கு வந்தபோது, "ஆயிஷாவே! நீர் அந்த மணமகளை அவளுடைய கணவனின் வீட்டிற்கு அனுப்பிவிட்டீரா?" எனக்கேட்டபோது, ஆயிஷா நாயகியவர்கள் ஆம் அனுப்பி விட்டேன் என்று பதிலளித்தார். அதன்பேரில் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "அப்பெண்ணுடன், பாடக்கூடிய யாதொரு மாதை அனுப்பிவைத்தீரா?" என்று வினவியபோது, ஆயிஷாநாயகி, "பாடக்கூடியவரை பெண்ணோடு அனுப்பவில்லையே" என மறுமொழி கூறினேன். அதற்கு ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "அன்ஸார்களோ பாடல்களைக் கேட்டு மகிழ்ச்சி யடைகின்றவர். ஆதலால் நீர் அந்தப்பெண்ணுடன் பாடக் கூடிய ஸ்திரியை அனுப்பியிருந்திருந்தால் அவர் (நாம் உங்களிடமும் நீங்கள் எங்களிடமும் வந்தீர்கள், இறைவன் உங்களையும் எங்களையும் சுகமாய் வைப்பானாக) எனபாடிக்கொண்டு போயிருப்பார். அது எவ்வளவு மேலாக இருந்திருக்கும்" என்று திருவாய் மலர்ந்தருளினார்கள். சுப்ஹானல்லா! எவ்வளவு ரம்மியமான சுபாவம் வாய்க்கப் பெற்றிருந்தது. எவ்வளவு நல்ல இஸ்லாமின் போதனை எனச் சொல்வது?

இப்னு மாஜா அவர்களால் அறிவிக்கப்படுகிறது:-ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் கூறுகிறார்கள், "ஒருவர் மற்றொருவருக்குள் அன்னியோன்னியத்தை பலப்படுத்துவதற்குச்சாதனமாக, அவர்கள் தங்களுக்கிடை காணிக்கைகளை அனுப்பிக்கொண் டிருக்கவேண்டுமென்றும் அப்படிச் செய்வதால் இடையிலுள்ள மனஸ்தாபமும், வேற்றுமையும்

அற்றுப்போய் விடுகிறதென்றும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவாய்மலர்ந் தருளினார்கள்.''

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப் படுகின்றது:- ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள். ''ஆயிஷாவே! நீர், ஜனங்களை அற்பமாயும், இழிவாயும் எண்ணும் பாவங்களை விட்டும் தப்பித்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் இறைவனுடைய சந்நிதானத்தில் அத்தகைய பாவங்களுக்கும் கணக்கு ஏற்படும்.''

## ஆயிஷா நாயகியின் பெருந்தன்மைகள்.

இப்பூவுலகின் கண், கணவன் மனைவிக்கிடை சந்ததி இல்லாமற் போமானால் இருசாரார்களும் அதற்காக வருந்தாமலிரார் என்பது வெளிப்படை. நம் நபிகத்திலகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் உம்மில் மூமினீன் கதீஜா நாயகியின் வரிசைகளைப்பற்றி கூறுகையில் அவர்களை (கதீஜாநாயகி) க்கொண்டே தங்களுக்குச் சந்ததி ஏற்பட்டதென்பதைச்சுட்டிக் கூறுவார்கள். ஸ்திரிகளுக்குச் சந்ததி பால் அளவற்ற விருப்ப முண்டாதல் இயற்கையே. இதைப்பற்றிய திருஷ்டாந்தங்களைக்கூறுமிடத்து ஒரு பூங்காவனத்திற்கு அதன் புஷ்பங்களைக் கொண்டே நேர்த்தி ஏற்படுவதும், புஷ்பங்களுக்கு அவற்றின் மணம், நிறம் இவ்விரண்டினாலேயே மதிப்புண்டாவதும் சிப்பிக்கு அதனுள் இருக்கத் தக்க முத்தின் காரணமாகவே பெருமை உண்டென்பதும், ரத்தினக் கற்களுக்கு அவற்றின் ஜொலிப்பே அவற்றிற்குரிய உயர்தரத்திற்கு மூலாதார மென்பதும், அறியக்கிடப்பதற் கேற்ப, ஸ்திரிகளுக்கு அவர்களுக்கேற்படுஞ் சந்ததிகளின் மூலமாகவே, மதிப்பு ஏற்படுவதாகும். உண்மையில், சந்ததிகளே தம்பதிகளுக்கு அடையப்பெறவேண்டிய அரிய செல்வமெனப்படும். குழந்தை இல்லாத வீடு இருளடைந்த வீட்டிற்குச் சமமாகும்.

## ஆயிஷா நாயகியின் கவலை.

ஒருநாள் ஆயிஷா நாயகியவர்கள் இருந்தாற்போ லிருந்து தமக்குக் குழந்தை இல்லையே என்ற துயரத்தை மேற்கொண்டார்கள். ஆனால் அவர்கள், அத்துயரத்தைப்பற்றி நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் பகிரங்கமாக எடுத்துக் கூறுவதற்கு அவர்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்

அவர்கள் பால் கொண்டுள்ள மரியாதை குறுக்கிட்டிருந்தமையால், மலைத்தாற்போல், "ரசூலுல்லாவே! என்மனம் ஒருபுதிய பட்டப்பெய ருக்கு ஆசைக்கொண் டிருக்கிறதென" ஒருவிதமாய் முறையிட்ட போது, நபி பெருமானுரவர்கள் தக்ஷணமே ஆயிஷா நாயகியின் நோக் கத்தை விளங்கிக்கொண்டு, "மிகவும் சரி, ஆனல் உங்கள் சகோதரிப் புதல்வனுகிய அப்துல்லாவும், உம்முடைய புதல்வரே யாவார். இன்று முதல் உங்கள் பட்டப்பெயர், உம்மெ அப்துல்லா, (அப்துல்லாவின் தாய்) என வைக்கப்பட்டிருக்கிறது" என்று மொழிந்தார்கள்.

ஆயிஷா நாயகியவர்களுக்கு "உம்முல் மூமினீன்" (மூமீன்களு டைய தாய்) என்னும் பட்டம் மிகவும், பொருந்தியதாக இருந்து வந் தது. கோடிக்கணக்கான மூமின் புதல்வர்களை வாய்ந்த அவர்களுக்கு ஒரு புதல்வர் வேண்டுமென்ற அவசியம் கட்டாயமா யிருந்திருக்க வில்லை. ஆயினும் நல்லடியார்கள் தங்கள் சிருஷ்டி கர்த்தனிடமிருந்து நன்மையைப் பெறவேண்டுமென்ற விஷயத்தில் குறையேற்படுத்திக் கொள்வதில்லை. மேலும் இச்சந்தர்ப்பத்தில், குறிப்பிடத்தக்க விஷ யமோவெனில், ஆயிஷா நாயகியவர்கள், 'உம்முல் மூமினீன்' என்ற பட்டப்பெயர் வாய்ந்திருந்ததற் கிணங்க 'உம்முன்னிஸா' (ஸ்திரீக ளின் தாய்) என்ற பட்டப் பெயருக்கு அருகராக இருந்திருக்கவில்லை என்பதற்கு கீழ்க்கண்ட ரிவாயத்து சான்ருகும்.

ஹஸ்ரத் மஸ்ரூக் அவர்களால் அறிவிக்கப் படுகிறது:—ஒருநாள் ஸ்திரியொருவர் ஆயிஷா நாயகியவர்களைத் 'தாய்' என அழைத்த போது, ஆயிஷா நாயகியவர்கள், அந்த ஸ்திரியை நோக்கி, "நான் உங்களுடையதாயல்ல; உங்களுடைய ஆடவர்களுக்கேதாய் ஆவேன்" என்று கூறினர்கள்.

### ஆயிஷா நாயகியவர்களின் தர்மகுணம்.

உற்வா அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ஆயிஷா நாயகி யவர்களின் தர்மகுணத்திற்கு அவர்கள், ஒருநாளில் 70-ஆயிரம் திர் ஹம்களைத் தானஞ்செய்துவருவார்கள் என்பதே போதுமான அத் தாட்சியாகும். அத்தகைய தானத்திற்கு உலகத்திலுள்ள தானதர்மங் களை ஒப்பிடுதல் அரிதாகும்.

'உம்மெஸரா' அவர்கள் கூறுகிறார்கள்:—"ரொக்கப்பணம் நிறை ந்த இரண்டு பைகள் 'இப்னுஸுபைர்' ரலியல்லாஹு அன்ஹு

அவர்களால் ஆயிஷா நாயகியவர்களிடம் அனுப்பப்பட்டன. அன்று ஆயிஷா நாயகியவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள் அந்த இரண்டு பைகளிலும் சுமார் 1½லக்ஷம் திர்ஹம்கள் இருந்தன. ஆயிஷா நாயகியவர்கள், தானத்திற்குரிய உரிமையாளர்களை யழைத்து ஒவ்வொருவர்களுக்கும் தாம்பாளம் நிறைய அவர்களுக்கிடை அந்த திர்ஹம்களைப்பகர்ந்து விட்டனர். சாயந்திரம் நோன்பு திறப்பதற்காக வேண்டியும் அவர்களிடத்தில் செலவுக் கில்லாமற் போய்விட்டது. அதைக்கண்ட நான் (உம்மெஸரா) 'உம்முல் மூமினீன் அவர்களே! அவற்றுள் ஒரு திர்ஹமுக்காகிலும் இறைச்சிவாங்கி யிருந்தால் நோன்பு திறப்பதற்காக பயன்பட்டிருக்குமே' என முறையிட்ட போது, அவர்கள், 'இதை நீர் முன்னமே யன்றோ எனக்கு நினைப்பூட்டியிருக்க வேண்டும். இப்போதோ என் வழக்கமுள்ள அந்த காய்ந்த ரொட்டித்துண்டுகளையே கொண்டுவாரும், நோன்பு திறக்க அவையே போதும்' என்றார்கள். சுப்ஹானல்லா! இதைவிட பொறுமை, தர்மத்திற்குரிய அத்தாட்சிகளும் வேண்டுமோ?''

காஸிம் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:-அதாவது ஆயிஷா நாயகியவர்கள் சதாநோன்பு வைத்து வந்தார்கள் என்று.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள்:- என்னிடத்திற்கு ஒருஸ்திரி தம்முடைய இரண்டு பெண்பிள்ளைகளைக் கூட்டிக் கொண்டுவந்து யாசகம் கேட்டார். அச்சமயம் என்னிடம் இருந்துவந்த பதார்த்தம் ஒரேயொரு கஜூர்மட்டுமே, ஆதலால் நான் அந்தஸ்திரிக்கு அந்த கஜூரைக் கொடுத்து விட்டேன். அந்த ஸ்திரி அந்த கஜூரை இருபாக மாக்கி தம்முடைய இரண்டு பெண் குழந்தைகளுக்கும் முறையே ஒருதுண்டைக் கொடுத்துவிட்டுத் தாம் கிஞ்சித்தும் அதனினின்றும் புசியாமலே எழுந்திருந்து போய் விட்டார்.

சிறிது நேரத்திற்குள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வீட்டிற்கு வந்தார்கள். அப்போது நான் அந்த ஸ்திரி என்னிடம் வந்துபோன செய்தியை ரசூலுல்லா அவர்களுக்கு அறிவித்தேன். அப்போது நபி பெருமானாரவர்கள், ''சர்வ வல்ல இறைவன் ஒருவருக்கு இரண்டொரு பெண் குழந்தையைக் கொடுத்து அவர் (பெற்றோர்) அக்குழந்தைகளை

நல்லவிதமாக பராமரிக்கிறாரா என்று சோதிக்கிறான். பராமரிப்போர் நல்லவிதமாகவே பராமரிக்கும் பட்சத்தில் அக்குழந்தைகள் அவர்களுக்காக வேண்டி நரகப்பாதைக்கு ஒரு தடுப்புப் படலுக் கொப்பாய் விடும்'' என்று திருவுளம் பற்றினார்கள்.

ஒரு தடவை ஆயிஷா நாயகியவர்கள் தம், பெற்றோர் வீட்டிற்குப் போயிருந்த சமயம் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குத் தேக அசௌக்கிய மேற்பட்டது. அதைக்கேட்டதக்ஷணமே ஆயிஷா நாயகியவர்கள் மிக்ககவலையுடன் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய சமூகத்திற்கு புறப்பட்டு வந்தார்கள். ஆனாலோ அது சமயம் ஆயிஷா நாயகியவர்களுடைய பெற்றோர் வீட்டில் சமையல் ஆய்க்கொண்டிருந்தமையால், அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய தேக அசௌக்கியத்தின் கவலையில் சாப்பாட்டையும் எதிர்பார்க்காமலே புறப்பட்டுவந்து விட்டார்கள். பசியோ கடுமையாக இருந்தது. ஆயிஷா நாயகியவர்கள் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய சமுகத்திற்கு வந்தவுடன் அவர்களின் அசௌக்கிய நிலைமையைப்பற்றி விசாரித்தார்கள். தலைவலியாக இருந்துவந்த ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியவர்களைக் கண்டவுடன் மிக்க ஆறுதலான விதத்தில் புன்சிரிப்புடனேயே தம்தேக அசௌக்கியம் நீங்கி விட்டதாகக் கூறினார்கள். அப்பால் பசியாயிருந்த ஆயிஷா நாயகியவர்கள் வீட்டிற்குள் ஒரு மூலையில் சில கஜூர்களும், பன்னீர் என்னும் பானமும், மான் இறைச்சியின் சில உப்புக்கண்டங்களும் ஒரு தட்டில் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டார்கள். கண்டதும் அவர்கள் அத்தட்டைத்தூக்கிக் கொண்டு போய் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் முன்னிலையில் வைத்து ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடன் புசிக்க எண்ணிக் கொண்டிருக்கையில், தற்செயலாக தம்வீட்டின் வாயில் ஒரு பக்கீரின் வேண்டுகோளைக் கேட்டனர். "அல்லாவுக்குப் பிரியமுள்ளோர் யாராவது உண்டானால் என்னை விசாரியுங்கள். நானும், என் பெண்ஜாதி பிள்ளைகளும் பட்டினியாய்க்கிடந்து மடிகிறோம். ஆண்டவன் பாதையில் எங்களைப் பசியாற்றி ஆண்டவனிடத்து அதற்குரியபலனை அடைபவர்உண்டா?" என்று அந்த பக்கிரி உரத்துக் கூவினார். உடனே ஆயிஷா நாயகியவர்

கள் மனம் உருகியது. அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய சமுகத்தில், "இப்பதார்த்தங்களைக்கொண்டுபோய்தங்கள்கைபட அந்த ஏழைக்குக்கொடுத்துவிடுங்கள். தவிர நான் புறப்படும் சமயம் என்தந்தையார் எனச்கருளிய ஒரு திர்ஹமும் என் போர்வையினுடைய ஒரு மூலையில் முடிந்திருக்கிறேன். அதையும் கொண்டுபோய் அந்த ஏழைக்குக் கொடுத்து விடுங்கள்" எனக் கேட்டுக் கொண்டார்கள்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அதன்படியே அவற்றைக்கொண்டுபோய் அந்த பக்கிரிக்குக்கொடுத்து விட்டனர். ஆயிஷா நாயகியவர்களுக்கோ தன்பசியைப்பற்றி லக்ஷியமிருக்கவில்லை.

சுப்ஹானல்லா! பூர்விக முஸ்லிம் மேதாவிகள் பேரிலும் முஸ்லிம் மதத்தலைவர்களுக்கும் எப்பேர்ப்பட்ட கஷ்ட நேரங்கள் முன்னிட்டிருந்தன. இருலோக பாதுஷாவாகிய முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியாரின் நிலைமையோவெனில், அவர்களிடத்தில் ஒருகஜூரைத் தவிர வேறொன்றும் புசிப்பதற்கு இருந்திருக்கவில்லை. அச்சமயத்திலுங்கூட அவர்கள் அதையும் தானஞ்செய்து விடுகிறார்கள். மற்றோர் விதத்தில் அந்த முஸ்லிம் ஸ்திரிதம் இரண்டு குழந்தைகளுடன் பிச்சைக்கேட்ட போது அவருக்கு ஒரே கஜூர் கிடைக்கிறது. அவர் அதையும் இரண்டு குழந்தைகளுக்கும் கொடுத்து விட்டுத்தாம் மிக்க பொறுமையுடன் இருந்து கொள்ளுகிறார்.

தற்கால முஸ்லிம்கள் பேரில் (ஆண்டவன்காக்க) அத்தகைய கொடிய கஷ்டங்கள் முன்னிட்டுப் போமாகில் எண்ணிறந்தோர் தம் இஸ்லாம்மார்க்கத்திற்கே தூர எட்டியிருந்து 100-சலாம் செய்துவிட தலைப்பட்டு விடுவர். கிறிஸ்துவர், யூதர் முதலியவர்களின் மதத்தைத் தழுவி சுகமாய்வாழ்ந்திருக்கலாமே என நினைக்கவும் அவர்கள் முன் வந்து விடுவர்.

அல்லாஹு அக்பர்! எவர்களின் ஆதாவில் இஸ்லாம் மதம் பரவியதோ அவர்களின் நிலைமையோ இப்படி இருந்துள்ளது. இப்போதைய ஜனங்கள் சொல்ப கௌரவத்திற்காக அளவுகடந்த காரியங்களில் ஈடுபட்டு விடுகின்றனர். இஸ்லாம் ஏழைகளைக் கொண்டே

பாவியது. இன்னும் அது ஏழைகளுக்கிடையே நிலைகொண்டு விடு மென்பதை அத்தகையோர் நினைக்கவேண்டும்.

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள்:—"அண்டை வீட்டாரோடு நேசமாய் நடந்து கொள்ளவேண்டுமென்பதைப் பற்றி 'ஜிப்ரீல்' அலைஹிஸ்ஸலா மவர்கள் எனக்கு அளவுகடந்து போதித்ததினின்றும் அண்டை வீட்டார்கள் தான் எனக்கு வாரிஸ்தாரர்களாய் விடுவரோ என நான் கருத நேரிட்டது."

அயலண்டை வீட்டாரோடு ஒற்றுமை வைக்க வேண்டுமென்பதற்கு இந்த ரிவாயத்தைக்காட்டிலும், மேலான போதனை நமக்குத் தேவையில்லை. ஆனால், நாம் அவ்வாறு அவர்களுடன் நேசமாய் நடந்துகொள்ளுகிறோமா? என்று கவனிக்கு மிடத்து நாம் அதற்கு மாறாக அவர்களைப் பாழாக்கும் வழியில் எத்தகைய குறையும் விட்டு வைக்கவில்லை என்பதே துலாம்பரமாக அறியக் கிடக்கின்றது. அந்தோ! அவ்வாறு நடந்துக்கொள்ளும் முஸ்லிம்கள், தம்மைத் தாம் "முஸ்லிம்களா" என்பதை சிந்திக்கவேண்டும்.

ஒருதடவை ஆயிஷாநாயகியவர்கள் யாத்திரையிலிருந்துவரும்சமயம், ஓரிடத்தில்முகாம்(தரிக்கச்)செய்யநேரிட்டது. அதுபோல்கூடாரமடித்து இறங்கியவுடன் கூடாரத்தின் வாயற்படியின்மீது ஒரு ஏழை, யாசகம்கேட்கவந்தார். ஆயிஷாநாயகியவர்கள் அந்த ஏழைக்குரொட்டியொன்றைக் கொடுத்தனுப்பினார்கள். அந்த ஏழை போனவுடன், மற்றொருவர் குதிரைமேலேறிவந்து, தமக்குப் பசியா யிருப்பதாகச் சொல்லி ஏதேனும், கொடுக்கும்படி வேண்டிக்கொண்டார். அப்போது, ஆயிஷா நாயகியவர்கள் அவரை அழைத்து, ஒரு நல்லவிடத்தில் உட்காரவைத்து வயிறு நிறைய பசியாற்றி வைக்கும்படியாக உத்தரவு செய்தார்கள்.

அதைக்கேட்ட ஜனங்கள், "நாயகியவர்களே! யாருக்கு அதிகஉதாசை செய்யவேண்டி யிருந்ததோ, அவருக்குத் தாங்கள் ஒரே ஒரு ரொட்டியைக் கொடுத்து அனுப்பி விட்டீர்கள். இப்போது, குதிரையேறிவந்த இவருக்கு இம்மட்டில் உபசாரமா?" என்று கேட்டனர். அதற்கு ஆயிஷா நாயகியவர்கள், "அந்த பக்கீர் ஒரு ரொட்டியைக் கொண்டு மகிழ்ச்சியடைந்து விட்டார். இவரோ அவ்வாறு திருப்தி

யடைந்துகொள்ள முடியாது. ஒவ்வொரு மனிதனுடைய தரத்தை யும் மதிக்கவேண்டும். சர்வ வல்ல இறைவனுங்கூட எல்லோருக்கு மிடை சமத்துவமான அந்தஸ்தை உண்டுபண்ணி யிருக்கவில்லை'' என்று சமாதானங் கூறினார்கள்.

இமாம் கஸ்ஸாலி ரஹ்மதுல்லா அவர்கள், ''இஹ்யாஉல் உலூம்'' என்னும் கிதாபில் எழுதுகிறார்கள். ஹஸ்ரத் ஆயிஷா நாய கியவர்கள் ஒரு தினத்தில், லக்ஷக் கணக்கான திர்ஹம்களைத் தானம் செய்துவிடுவார்கள். அமீர் முஆவியா, அபூ அமீர் றலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து, அளவு கடந்த ரொக்கக் காணிக்கைகள் ஆயிஷாநாயகியவர்களுடைய சமுகத்தில் சமர்ப்பிக்கப் பட்டு வந்தன. அப்படி யிருந்துவந்துங்கூட ஆயிஷா நாயகியவர்க ளுடைய தலைப் போர்வையில் ஒட்டுபோட்டுத் தைக்கப்பட்ட பழைய போர்வையே, உபயோகப்படுத்தப்பட்டு வரும். ஆயிஷா நாயகியவர் களின் வேலைக்காரி அவர்களிடம், ''பெருமாட்டியாரே! ஒரு திர்ஹ முக்கு இறைச்சி வாங்கியிருந்தாலென்ன! அது தங்களுக்கு நோன்பு திறப்பதற்குப்பயன்பட்டிருக்காதா?'' என்றபோது''நீஏன் அப்போதே எனக்கு ஞாபகப்படுத்தி இருக்கப்படாது'' என்று பதில் கூறினார்கள்.

சுப்ஹானல்லா! இவையாவும், றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ''ஆயிஷாவே! நீர் என்னைச்சுவர்க்கத்தில் சந்திப்பதற்கு, வறுமையிலேயே காலங் கழிக்க வேண்டும். செல்வந் தர்களுடைய சேர்க்கையி லிருக்கக்கூடாது. தலைப் போர்வையில் ஒட்டுப்போடும்படியான நேரம் வரும்வரையில் புதியபோர்வையை உப யோகிக்கக் கூடாது'' என்று போதித்ததன் பயன்களேயாகும்.

## ஆயிஷா நாயகியவர்களின் உபசார நிலைமை.

அபூ ஆஸிம் அவர்கள் விவரிக்கிறார்கள்:-''நாம் எங்களைச்சேர்ந்த வர்களுடன் றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர் களுடைய சமுகத்தில் ஆஜராவதற்காக மதீனாவுக்குப் போனபோது, ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மதீனாவைவிட் டும் வேறொருவிடத்திற்குப் போயிருந்தார்கள். ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் எங்களை உபசரித்து விருந்து நடத்தினார்கள். கஜூர் களைக்கொண்டும் அஸீதா (ஒருவகை சாப்பாடு) வைக்கொண்டும், எங்களுக்குப் பசியாற்றி வைத்தார்கள். நாங்கள் பசியாறி முடிந்தபின்

னர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் விஜயஞ்செய்தார்கள். அவர்கள் ஆயிஷா நாயகியவர்களின் உபசாரத்தைக்கேட்டு மிகவும் சந்தோஷ மடைந்தார்கள்.

ஹஸ்ரத் தஹ்பா றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப் படுகிறது:-"நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸபா ஜனங்களோடு நல்லவிதமாய் பழகிக்கொள்ள தங்கள் ஸஹாபாக்களிடம் சிபார்சு செய்தபோது, ஸஹாபாக்கள் முறையே தங்கள் தங்கள் அந்தஸ்திற் கேற்றபடி ஒருவர் அல்லது இருவர்களைத்தம்மோடு சாப்பாட்டிற்கு அழைத்துக்கொண்டு போனார்கள். நாங்கள் 5-பேர்கள் மட்டும் மீதியாயிருந்து விட்டோம். எங்களைக்கண்ட நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், எங்களைத்தங்கள் வீட்டிற்கு அழைத்துச்சென்றார்கள். வீட்டிற்குப்போனவுடன் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை நோக்கி, "ஆயிஷாவே! எங்களைப் பசியாற்றி வையுங்கள்" என்று கூறினார்கள். ஆயிஷா நாயகியவர்கள் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் வார்த்தையைக் கேட்டவுடன் பொரித்த இறைச்சியை எங்களுக்குமுன் கொண்டுவந்து வைத்தார்கள் நாங்கள் வயிறார உண்டுபசியாறினோம். அப்பால் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஓ ஆயிஷாவே! இன்னும் ஏதாவது இருந்தால் கொண்டு வாரும்" என்று கூறியபோது ஆயிஷா நாயகியவர்கள் 'ஹஸீஸ்' (கஜூர், பால், நெய் சம்பந்தப்பட்டுள்ள ஒருவகை பதார்த்தம்) கொண்டு வந்து கொடுத்தார்கள். நாங்கள் அதையும் புசித்தோம். பின்னர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஆயிஷாவே! எங்களுக்குத் தண்ணீர் கொடும்" என்று மொழிந்த போது ஆயிஷா நாயகியவர்கள் ஒரு பெரிய பாத்திரம் நிறைய நல்ல தண்ணீர் கொண்டுவந்து வைத்தார்கள். அத்துடன் அவர்கள், மற்றொரு பாத்திரத்தில் பாலும் கொண்டு வரவே நாங்கள் அப்பாலையும் செவ்வனே குடித்தோம். ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் ஏழை விருந்தினர்களுக்கு உபசாரம் செய்வதினின்றும் அளவற்ற சந்தோஷ மடைவார்கள்.

### ஆயிஷா நாயகியின் வணக்கமும், ஆண்டவனிடத்து பயமும்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது:— "நான் ஒருதடவை நரகத்தினுடைய நெருப்பை நினைத்து அழத்

தொடங்கினேன். அப்போது நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஆயிஷாவே! நீர் அழுதற்குக் காரணம் யாது" எனக்கேட்டார்கள். நான், "ரசூலுல்லாவே! நரகத்தினுடைய அக்கினி வேதனையை நினைத்து அழுகிறேன், தாங்கள் கியாமத் நாளன்று தங்கள் வீட்டினர்களைப்பற்றி நினைக்கமாட்டீர்களா?" என்றுகேட்டதற்கு, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "மூன்று விடங்களில் ஒருவர் மற்றொருவரை நினைக்க முடியாது. முதலாவது தராசுவிடத்து அதாவது ஒருவனுடைய அமுலுகளின் நிறை இலேசானதோ கனமானதோ என்பது அறியப்படுவதற்கு முந்தியும், இரண்டாவது அமுலுகளுடைய பத்திரம் கிடைக்கும்போது, அதாவது வாருங்கள் என்னுடைய கிதாபைப் படியுங்கள் என்று சொல்லப்படுவதற்கும் அது வலதுகையில் கொடுக்கப்படுகிறதோ அல்லது, இடதுகையிலோவென்று தெரிந்துக்கொள்வதற்கு முந்தியும், மூன்றாவது, 'ஸிராத்' என்னும் பாலத்தின்மீது நடக்கிற வேளையிலும், அதாவது, அப்பாலம் நரகத்தின்பேரில் வைக்கப்பட்டிருக்கையிலும்" என்று மொழிந்தார்கள்.

## மக்ரூஹ்களை விட்டும் ஒதுங்கியிருத்தல்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களுடைய வீட்டறைக்கு எதிரில் இருந்துவந்தமுற்றத்தில் ஒருவன், அநேகரைக்கூட்டி வீண்கதைகளைச் சொல்லத் தொடங்கினன். ஆயிஷா நாயகியவர்களுக்கு அவனுடைய செயல் மிகவும் வருத்தத்தை யுண்டுபண்ணியது. அதன்பேரில், ஆயிஷா நாயகியவர்கள், ஹஸரத் இப்னு உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் அதைப்பற்றி தெரிவித்து, "எங்களுடைய இபாதத்திற்கு அவனால் பங்கம் நேரிடுகின்றது. இபாதத் தஸ்பீஹ் செய்வதற்கு சப்தம், இரைச்சல் கூடாதளவுக்கு மனம் ஒருபக்கம் தரிப்பட்டிருந்தாலன்றோ! அதன் இன்பம் அடையப்பெறும்" எனக்கூறியபோது, ஹஸ்ரத் இப்னு உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், அவனை அதைவிட்டும் அடித்து வெளிப்படுத்தி விட்டார்கள்.

ஒருதடவை ஒரு ஸ்திரி ஆயிஷா நாயகியவர்களிடம் மற்றொரு ஸ்திரியைப்பற்றி, "அவள் நீண்ட முந்தானியுடையவள்" என்று சொன்னபோது ஆயிஷா நாயகியவர்கள், "இப்படிச் சொல்வதும்

புறம் பேசுவதாகும். நீ அந்த ஸ்திரியிடஞ் சென்று அதைப்பற்றி மன்னிப்பு கேளாதவரையில் உன்பாவத்தினின்றும் உனக்கு இரட்சிப்பு கிடைக்காது'' என்று கூறினார்கள். ஆயிஷா நாயகியவர்கள் ஆண்டவனிடத்து கொண்டிருந்த பயம், விசுவாசம், பேணுதல் முதலியவற்றிற்கு இந்த ரிவாயத்து போதிய அத்தாட்சியாகும். அவர்களுடைய பேணுதலின் கௌரவத்திற்கு அந்த ஸ்திரி கூறிய அற்ப மொழியுங்கூட பாதிக்கக் கூடியதாக இருந்தது.

## ஆயிஷா நாயகியவர்களின் பெருந்தன்மைகள்.

உற்வா இப்னுஸுபைர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் திருவுளம் பற்றியிருக்கிறார்கள், "ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கும், ஹஸ்ரத் ஸித்தீக்றலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும் பின்னிட்டு, ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களுக்கு அப்துல்லா பின்ஸுபைர் றலியல்லாஹு அன்ஹு அவர்களிடமே மற்றெல்லோரைக் காட்டிலும் அதிக அன்பு ஏற்பட்டிருந்தது. 'அப்துல்லா பின்ஸுபைர்' றலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆயிஷா நாயகியவர்களுக்கு அதிகமாய் பணிவிடை செய்து வந்ததுந் தவிர ஏராளமான ரூபாய்களையும் ஆயிஷா நாயகியவர்களுடைய சமுகத்தில் சமர்ப்பித்து வருவார்கள். ஆனால் ஆயிஷா நாயகியவர்களோவெனில், காலணாவுங்கூட மிச்சப்படுத்த மாட்டார்கள். அதாவது ஜாடா பணத்தையும் அப்போதைக்கப்போது ஆண்டவனுடைய பாதையில் தர்மஞ்செய்து விடுவார்கள்.

இதைக் கவனித்து வந்த ஹஸ்ரத் அப்துல்லாபின் ஸுபைர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஒருநாள் தற்செயலாக, "நல்லது இப்போது உம்முல்மூமினின் ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களின் கைகளை அடக்க வேண்டும்'' (அதாவது இனி அவர்களுக்கு அதிகப் பணம் கொடுத்து அவர்கள் வீண்செலவுகளைச் செய்யாதளவுக்குச் செய்துவிட வேண்டும்) என்று சொல்லி விட்டார். அன்னார் சொன்ன வார்த்தை எப்படியோ படிப்படியாய் ஆயிஷா நாயகியவர்களின் செவிகளுக்கு எட்டியது. எட்டவே ஆயிஷா நாயகியவர்கள் அடைந்துள்ள மனவேதனைக்கு ஓரளவில்லை. தாம் இனி அப்துல்லாபின் ஸுபைர் றலியல்லாஹு அன்ஹு அவர்களோடு பேசுவதில்லை என்று அவர்கள் தமக்குள் பிரமாணம் செய்துகொண்டார்கள். அப்துல்லாபின்

ஸுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு இச்செய்தி கிடைக்கவே, அவர்கள் பிரபல முக்கியஸ்தர்களிடத்திற்குப் போய் தன்னைப் பற்றி ஆயிஷா நாயகியிடம் சிபார்சு செய்யும்படியாய்க் கேட்டுக் கொண்டார்கள். ஆனாலும் அந்த மத்தியஸ்தர்களாலும் காரியம் கைகூடி வரவில்லை.

ஒருநாள் அப்துர் ரஹ்மான்பின் அஸ்வத், மசூர்பின் முக்ரிம் (ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு மாமன் என்ற முறையிலுள்ளவர்கள்) ஆக இவர்களும் அப்துல்லாபின் ஸுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்குச் சொன்னார்கள். "நாங்கள் ஆயிஷாநாயகியவர்களுடைய வீட்டில் அவர்களுடைய அனுமதியின் பேரில் உள்ளே போயிருக்கிறோம். நீங்கள் அதேசமயம் பார்த்து வீட்டிற்குள் வந்து விடுங்கள். உங்களிடத்து அவர்களுக்கு கோஷா முறைதான்கிடையாதே; நீங்கள் அவ்வாறு வரும்பட்சத்தில் இன்ஷா அல்லா நாங்களெல்லோருமாகக் கூடிச் சமாதானம் செய்து வைக்கிறோம்" என ஆலோசனை கூறினார்கள். அதன்படி, அப்துல்லாபின் ஸுபைர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் அவ்வண்ணமே செய்ததில் ஆயிஷா நாயகியவர்களின் பிரமாண ஈற்றிற்காக 10-அடிமைகளையும் விடுதலை செய்யும்படி நேரிட்டது. இந்த ரிவாயத்திலிருந்து விளங்குவது யாதெனில் ஆயிஷா நாயகியவர்களுக்குத் தர்மம் செய்வதில் அளவுகடந்த பிரியமிருந்து வந்ததனாலேயே அவர்களுடைய புதல்வரென்ற முறையிலிருந்து வந்தவரும் அவர்களுக்கு எல்லோரைக் காட்டிலும் அதிக அன்பு வாய்ந்திருந்தவருமான அப்துல்லாபின் ஸுபைர் றலியல்லாஹு அன்ஹு அவர்களே அச்சொல்ப வார்த்தையைக் கூறியதன் பயனாக ஆயிஷா நாயகியவர்களுடைய பார்வையில் கேவலமடைந்து போக நேரிட்டது.

இப்பூவுலகின்கண் மனிதன் (முஸ்லிம்) எவருடைய சாவகாசத்தில் நெருங்கி யிருக்க சம்மதிக்கிறானோ மரணமடைந்த பின்னரும் அவருடைய சாவகாசத்தில் (சமாதியை யொட்டியே) இருக்க உடன்படுதல் சகஜமே. இதற்கிணங்கவே, ஆயிஷா நாயகியவர்களும் தம்முடைய வபாத்திற்குப்பின் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய திவ்விய சமாதிக் கருகிலேயே அடக்கமாக வேண்டுமென விரும்பி யிருந்தனர். ஆயிஷா நாயகியவர்களுடைய அத்தகைய விருப்பம் விபரீதமானதல்ல வென்றே கூற

லாம். ஏனெனில், மேற்கூறியவாறு உலகின்கண் ஒவ்வொரு காதலன் காதலிக்கிடை அத்தகைய விருப்பம் தோன்றுவது இயற்கைதான் என்பது வெளிப்படை. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அடக்கம் செய்யப்பட்டுள்ள ஆயிஷா நாயகியவர்களின் புனித அறைவீடே ஆயிஷா நாயகியவர்களின் நல்லடக்கத்திற்காகவும் ஏற்றதாயிருந்தது. ஆனால் தற்செயலாக ஆயிஷா நாயகியவர்களின் தந்தையாராகிய ஹஸ்ரத் அபூபக்கரிஸ்ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய வபாத்தே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு அடுத்தபடி முன்னிட்டுப் போனதால், அவர்கள் (ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக்) தம்மை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கருகில் அடக்கம் செய்யும்படியாக ஆயிஷா நாயகியைக் கேட்டுக்கொண்டனர். அதற்கு ஆயிஷா நாயகியவர்களும் உடன்பட்டு விட்டார்கள். அப்பால் உமர் பாரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் வபாத்தடைந்தார்கள்.

உம்ருபின் மைமூன் ரத்வீ அவர்கள் கூறுகிறார்கள்:-"நான் ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களை அவர்கள் காயமடைந்த சமயம் கண்டேன். அப்போது அவர்கள் தம்புதல்வரிடம், "அப்துல்லாவே! நீர் உடனே உம்முல் மூமினீன் ஆயிஷா நாயகியவர்களிடத்திற்குச் சென்று உம்ருபினுல் கத்தாப் தங்களுக்குச்சலாம் சொல்லச் சொன்னார். இன்னும் அவர் தங்களுடைய இரண்டு தோழர்களுக்கு (ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும்) பக்கத்தில் அடக்கமாவதற்குத் தாங்கள் இடங்கொடுக்கச் சம்மதிக்கிறீர்களா வென்று கேட்கச் சொன்னார் என்று கேளும். ஆயிஷா நாயகியவர்கள் உம்முடைய வேண்டுகோளைச் சந்தோஷத்துடன் இசைந்து கொண்டால் போகட்டும்; இல்லையேல் நீங்கள் என்னை முஸ்லிம்களுக்குப் பொதுவான கபுருஸ்தானத்திலேயே அடக்கம் செய்து விடுங்கள்" என்று கூறினார்கள்.

தந்தையாருடைய உத்தரவைக்கேட்ட ஹஸ்ரத் அப்துல்லா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உடனே ஆயிஷா நாயகியவர்களிடம் சென்று செய்தியை அறிவித்தபோது ஆயிஷா நாயகியவர்கள், "அப்துல்லாவே! இனி நான் தான் அவ்விருவர்களுக்கருகில் அடக்க

மாக வேண்டுமென விருப்பங் கொண்டிருந்தேன். ஆனால் உமர் பாருக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை நான் மிகவும் மதிக்கிறேனாகையால், நீங்கள் உடனே திரும்பிப்போய் அவர்களுடைய கோரிக்கை நிறைவேறிவிட்டதென்னும் சந்தோஷகாத்தை அவர்களுக்கு அறிவியுங்கள்'' என்று விடைபகர்ந்தார்கள். ஹஸ்ரத் அப்துல்லா பின் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் திரும்ப தம்தந்தையாரிடத்திற்குப் போனபோது கடைசி ஆவலைக்கொண்டு அப்துல்லாவை எதிர்பார்த்துக்கொண்டிருந்த ஹஸ்ரத் உமர்ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அப்துல்லா தமக்கருகில் வரக்கண்டவுடன் பதஷ்டமுள்ள தொனியில், ''மகனே! என்னசெய்தி கொண்டுவந்தீர்'' எனக்கேட்டபோது அப்துல்லா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ''தங்கள் கோரிக்கை நிறைவேறிவிட்டது'' என்ற சந்தோஷச் செய்தியை முறையிட்டார். தக்ஷணமே உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய ஹயாத்தும் போயிற்று. (ஆத்துமா பிரிந்தது).

ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குப் பக்கத்திலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது. அந்தோ! ஆயிஷா நாயகியவர்கள் தாம் அந்தவிடத்தில் அடக்கமாக வேண்டுமென்பதாய் கொண்டிருந்தவிருப்பமானது விபரீதமாய்முடிந்தது. எனினும் அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ஆப்த நண்பராகிய ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய மனதிற்கு நோவேற்படாவண்ணமே தம்விருப்பத்திற்கு பங்கமேற்படுத்திக்கொண்டு அவர்களுக்காகத்தம்மிடத்தைக்கொடுக்க சம்மதித்து விட்டனர். இதுவன்றோ உண்மையான பரோபகாரமென்பது? அப்புனித அறைவீட்டில் அந்த மூன்று கபுருகளைத் தவிர இன்னொரு கபுருக்கும் இடம் வசதி இருந்து வந்ததாயினும் ஆயிஷா நாயகியவர்கள் தம்மை அந்த விடத்தில் அடக்கம் செய்யும்படியாக ஒருவரையும் கேட்டுக்கொள்ளவில்லை.

அதற்குக் காரணமேதோவெனில், அவர்கள் அந்த அறையில் அடக்கமாக வேண்டுமென விருப்பங் கொண்டிருந்தகாலம் வரையில் அங்கு அவர்களுடைய தந்தையாருடையதும் கணவருடையதுமான இரண்டு கபுருகளைத்தவிர வேறு கபுரு ஏற்பட்டிருந்ததில்லை. அப்

பாலோ வெனில், கோஷா பழக்கத்திற்கு விதியாக்கப்பட்டுள்ள மூன்றாவது மனிதரொருவர் அங்கு அடக்கம் செய்யப்பட்டுப் போனார். ஆனதால் இனி அங்கு அவர்கள் அடக்கமாகுதல் அவர்களது நாணமுள்ள பெருந்தன்மைக்கு மாறாகு மென்பதை யுணர்ந்து அவர்கள் தம்மை 'ஜன்னதுல் பகீ' என்னும் கபுருஸ்தானத்தில் அடக்கம் செய்யும்படியாக வஸீயத்துச் செய்தார்கள் என்பதேயாகும்.

ஹஸ்ரத் உமர் பாரூக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் அந்த புனித அறைவீட்டிற்குள் அடக்கமாவதற்கு முன்னர் ஆயிஷா நாயகியவர்கள் தாராளமாக அந்த அறைக்குள் பிரவேசித்து வருவார்களென்று ரிவாயத்து வந்திருக்கின்றது.

ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றியிருக்கிறார்கள். "பாரூக் ஆலம் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் அங்கு அடக்கமானதற்கு பின்னிட்டு அந்த அறை வீட்டிற்குள் பிரவேசிப்ப தென்றால் கூச்சத்தால் என்மனம் துணியவில்லை. அப்பால் நான் என்றைக்கும் அதற்குள் போனதே கிடையாது. வெளியில் நின்று கொண்டபடியே நன்மைக்குரிய துவாகேட்டு வருவேன். விளக்கமாகக் கூறுமிடத்து ஏற்கனவே அங்கு என்னுடைய தந்தையாரும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் மட்டுமே அடக்கமாயிருந்து வந்தமையால் நான் எத்தகைய கூச்சமுமன்றி உள்ளே சென்று கொண்டிருந்தேன். அப்பால் சண்ணியமுள்ள மூன்றாவது மனிதரொருவர் அங்கு அடக்கமாயிருக்கிறார் என்பதைப் பாராட்டி நான் உள்ளே செல்லமுடியாது தயங்கி விட்டேன்.

ஸாஹிபே 'அஸதுல் காபா' அவர்கள் வரைந்திருக்கிறார்கள்:—ஸையதினா ஹஸ்ரத் ஹஸன் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் வபாத்தடையும் காலம் நெருங்கி விட்டபோது அவர்களும் ஆயிஷா நாயகியவர்களுடைய சமுகத்தில் ஒருவரை யனுப்பித் தம்மை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக் கருகில் அடக்கம் செய்யப்படுவதற்கு அனுமதிக்கலாமா? எனக் கேட்டபோது ஆயிஷா நாயகியவர்கள் ஹஸ்ரத் ஹஸன் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய வேண்டுகோளுக்கும் இசைத்து கொண்டார்கள். எனினும் ஹஸன் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் தம்முடைய சகோதராகிய ஹுசேன் றலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு

சொன்னதாவது, "நான் மவுத்தானதற்குப்பின் நீங்கள் முன் ஜாக்கிரதையின் பொருட்டு மீண்டும் ஒருமுறை ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களிடம் என்னை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குப் பக்கத்தில் அடக்கம் செய்யும் விஷயமாய் அனுமதி கேட்கவேண்டியது. அப்போதும் அவர்கள் உத்தரவு கொடுத்தால் போகட்டும், இல்லையானால் முஸ்லிம்களுக்குப் பொதுவான, 'பகீ' என்னும் கபுருஸ்தானத்தில் என்னை நல்லடக்கம் செய்து விடுங்கள். ஏனெனில், ஒருக்கால் அவர்கள் என்னுடைய முகதாட்சண்யத்திற்காக வேண்டி இப்போது அனுமதி கொடுத்திருந்தாலுமிருக்கலாம்" என்று போதனை செய்தார்கள்.

ஹஸன் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் வபாத்தடைந்த சமயம் ஹுசேன் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், தம்முடைய சகோதரரின் போதனைகளுக் கிணங்கவே, ஆயிஷா நாயகியவர்களிடம் போய் மறுமுறை அனுமதி கேட்டபோது ஆயிஷா நாயகியவர்கள், "நானோ ஏற்கனவே என்மனப்பூர்த்தியாய் அதுவிஷயத்திற்காக அனுமதித்து விட்டேன். ஆதலால் அடிக்கடி அதைப்பற்றி கேட்டல் அனாவசியமானது" என்று விடைபகர்ந்தார்கள். ஆனால் அந்தோ! அப்போதைய ஆடவர்களான தலைவர்கள் தங்களுக்கிடை பலவிதமான அபிப்பிராயங்களைச் செய்து ஹஸன் றலியல்லாஹு அன்ஹு அவர்களை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய முபாரக்கான ஹுஜ்ரா (அறை வீடு) வில் அடக்கம் செய்ய இடங் கொடுக்கவில்லை.

## ஆயிஷா நாயகி வீட்டுக்காரியங்களைத் தாமே செய்துகொள்ளுதல்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றியிருக்கிறார்கள்:—"ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய குர்பானி ஒட்டகங்கள் ஹத்யாச் செய்து மக்கத்துக்கு அனுப்பப்படுமாகில் நான் அவற்றின் கழுத்துகளில் போடுவதற்கான ஹாரங்களைத் (மாலைகளை) தயார் செய்து கொடுப்பேன். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், அவற்றை என்னிடமிருந்துவாங்கி அவ்வொட்டைகளின் கழுத்தைச் சுற்றிலும் போட்டு அவற்றின் முதுகிலுள்ள கொண்டைகளையும் காயப்படுத்தி 'அகபா' ஷரீபின் புறமாய் அனுப்பிவைப்பார்கள். நான் வீட்டுக்காரி

ய்ங்களில் ஈடுபட்டிருப்பேனுகில், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் எனக்கு அக்காரியங்களில் ஒத்தாசை செய்ய முன்வருவார்கள்.''

சிந்திக்கத்தக்க விஷயமோ வெனில், இஸ்லாம் மதஸ்தாப கரும் அவர்களது புனித நம்பிராட்டியாரும் தங்கள் வீட்டுக் காரியங் களைத்தாமே தங்கள் கைபடசெய்து கொள்வார்களாம். சுப்ஹானல்லா! அவர்களுக்கு வேலை செய்யக்கூடிய ஆட்களின் குறைவு ஏற்பட்டிருந் ததில்லை. ஊழியர்களும், அடிமைகளும் ஏராளமாயிருந்து வந்தனர். அநேக அடிமைகளை விலைக்குவாங்கி விடுதலை செய்யப்பட்டும் வந்தது. அநேகர் கைவசமு மிருந்து வருவர். இவர்களைத்தவிர எண்ணிறந்த முஸ்லிம் தியாகிகள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல் லம் அவர்கள் பேரிலும் அவர்களின் வீட்டினர்கள் மீதும் தம் உடல் பொருள் ஆவி இம்மூன்றையும் எச்சமயத்தும் தியாகஞ் செய்யக்கூடி யவர்களாயிருந்து வருவார்கள். 'அஸ்ஹா அஹ்ஸ்ஸபா' அவர்களையும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தங்கள் வீட்டின் சொந்த ஜனங்களைப்போல் பாவித்து வருகையில், அவர் களும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களு டைய ஊழியங்களைச் சிரமேற் கொண்டிருந்தார்கள். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களுடைய உம்மத் தார்களை தம் சந்தியார்களுக் கொப்பாக பராமரித்து வந்தார்களா தலால் அவர்கள் (உம்மத்தார்கள்) அடையப்பெற்றிருந்த சிறப்பும் இன்றியமையாததே யாகும். தற்போதைய பீர் மஷாயக்குகளின் நட வடிக்கைகளைக் கவனிக்குங்கால் அவர்கள் காலைமுதல் சாயந்திரம் வரையில் தங்கள் முரீதுகளுக்குத் தங்கள் சேவைகளின்றும் ஒய்வு கொடுத்தல் அரிதாகிவிட்டது.

### துப்புரவான சுபாவம்.

ஹஸ்ரத் அஸாமாபின் ஸைத் அவர்களின் குழந்தைப் பருவத் தில் ஒருதடவை அவர்கள் நிலை வாயற்படியின்மீது கால் இடறி விழுந் துவிட்டதினின்றும் நெற்றியின்பேரில் பலத்த காயமேற்பட்டு இரத் தம் ஒழுக ஆரம்பித்தது. அப்போது, நபிகள் நாயகம் ஸல்லல்லா ஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியவர்களை நோக்கி, ''அந்தோ! அச்குழந்தையுடைய இரத்தத்தைத் துடைத்துவிடுங்கள்''

என்று மொழிந்தார்கள். ஆயிஷாநாயகியவர்கள் கூறுகிறார்கள், "எனக்கு அவ்வாறு செய்வதினின்றும், மனதிற்கு ஒருவிதமான அருவருப்பு ஏற்பட்டது. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அதை உணர்ந்து, தாமே அக்குழந்தையை யெடுத்து, அதன் இரத்தத்தைத்துடைத்துச் சுத்தப்படுத்தினார்கள்."

ஓரிரவு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியுடைய வீட்டில் இருந்துவருகையில், ஆயிஷா நாயகி யவர்கள் யாதொரு அலுவலின்பேரில் வெளியே போய்வர நேரிட்டபோது திரும்பி வருவதற்குக் கொஞ்சம் நேரம் பிடித்தது. அப்போது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ஆயிஷா நாயகியிடம் காரணத்தை வினவியபோது அவர்கள், "ரசூலுல்லாவே! ஒருவர் தம்முடைய ஜாகையில், குர்ஆன் ஷரீபை இனிய குரலுடன் மிக்க அழகாக ஓதிக்கொண்டிருக்கிறார். நான் அவர் ஓதுவதை இந்நேரம் கேட்டுக் கொண்டிருந்தேன். இவ்வளவு அழகான கிர்அத்தை நான் இதற்கு முன் ஒரு போதும் கேட்டதில்லை" என முறையிட்டபோது, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும், வெளியே போய் வெகுநேரம்வரையில் அதைக் கேட்டு, "ஓதுகிறவர் அபூஹுதைபா உடைய தந்தையாவார். இறைவன் என்னுடைய உம்மத்தில் இப்பேர்க்கொத்த ஒருவரைச் சிருஷ்டித்தான் என்பதற்கு நான் அவனைத் துதிக்கின்றேன்" எனத் திருவுளம் பற்றினார்கள்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், மிஸ்வாக்குச் செய்வதை அதிகம் சிலாக்கித்து வந்தார்களென்பதற்கேற்பவே ஆயிஷா நாயகியவர்களும், மிஸ்வாக்கை விசேஷ பிரியத்துடன் உபயோகித்து வருவார்கள். ஆயிஷா நாயகியவர்களால் கூறப்படுகின்றது:—"ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தாங்கள் மிஸ்வாக்குச் செய்துவிட்டதற்குப்பின் அதை கழுவும்படியாக என்னிடம் கொடுப்பார்களாகில், நான் அதைக்கொண்டு முதலில் என் பற்களை விளக்கிக்கொண்டு அப்பால் அதைக் கழுவிச்சுத்தப்படுத்திரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் திரும்பக் கொடுத்துவிடுவது வழக்கம்.

## ஆயிஷா நாயகி யவர்களுக்கு இனிய குரல்பால் விருப்பம்.

ஆயிஷா நாயகி யவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள். அய்யாமே தஷ்ரீக் பெருநாளொன்றில் என் தந்தையார் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் என் வீட்டிற்கு வந்தார்கள். அச்சமயம் என்னண்டையில் இரண்டு பெண்கள் 'தப்' என்னும் தம்பட்டத்தை அடித்துக்கொண்டு யுத்த சம்பந்தமான பாடல்களைப் பாடிக்கொண்டிருக்கையில் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்கள் முகத்தின்பேரில் முக்காடு போட்டுக்கொண்டு படுத்திருந்தார்கள். வெளியிலிருந்துவந்த என் தந்தையாரவர்கள் பாடிக்கொண்டிருந்த சிறுமிகளை அதட்ட ஆரம்பிக்கவே, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தம் முகத்தின்பேரிலுள்ள புடவையை நீக்கி, "ஓ அபூபக்கர் அவர்களே! ஒன்றும் சொல்லாதீர்கள். இன்று பெருநாளாயிருக்கிறது" என்று மொழிந்தார்கள். மற்றொரு ரிவாயத்தில் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஒவ்வொரு சமூகத்தாருக்கும் ஒரு பெருநாள் வருகிறது. எங்களுடைய பெருநாள் இதுவே" எனக் கூறியதாகவும் வந்திருக்கிறது.

## கணவருக்குக் கீழ்ப்படிதல்.

ஆயிஷா நாயகியவர்கள் எந்நேரமும் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய சேவைகளிலேயே அமர்ந்திருப்பார்களென்பதற்குச் சான்றாக அவர்களால் கலாச்செய்யப்படும் நோன்புகளையும் பூர்த்திசெய்து வைக்க சந்தர்ப்பம் கிடைத்தல் அரிதாய் விடும். ஆனதுபற்றி அவர்கள் அந்நோன்புகளை அநேகமாய் ஷஅபானுடைய மாதத்திலேயே பூர்த்தி செய்யும்படி சந்தர்ப்பம் வாய்க்கும். ஏனெனில் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் 'ஷஅபான்' மாதத்தினிடையே இறைவனுடைய வணக்கத்தில் அதிகமாய் ஈடுபட்டு விடுவார்கள்.

ஆயிஷா நாயகி யவர்கள் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் சேவையையுங்கூட தமக்குரிய ஒரு இபாதத் (வணக்கம்) என்றே கருதிவந்தார்கள். அதனால் இரவு பகல் முழுதும் நாயகத்தின் சேவையிலேயே கழிப்பார்கள். இதுபோல் இதர வணக்கங்களிலுங்கூட அவர் ரசூலுல்லா பால் கண்ணுங் கருத்துமாகவே இருந்துகொள்வார்கள். பிரயாண காலத்திலுங்கூட அவர்கள்

தொழுகையை கஸராக தொழமாட்டார்கள். நிறப்பமாகவே தொழுது கொள்வார்கள்.

ஆனதால், ஆயிஷா நாயகி யவர்களால் கூறப்படுகிறது. "முதன் முதலாக இரண்டு ரகஅத் தொழுகையே பாலாக்கப்பட்டது. யாத்திரை(ஸபர்)யின் தொழுகைக்கும் அந்த இரண்டு ரகஅத்துக்களே நிர்ணயிக்கப்பட்டிருந்தன. ஹலருக்கு நான்கு ரகஅத்துக்கள் பாலாக்கப்பட்டன. ஸஹ்ரா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் மொழிகிறார்கள். "நான் அரபாவிடம் 'ஆயிஷா நாயகி யவர்கள் தொழுகையை கஸராக தொழுதுகொள்ளாததற்குக் காரணம் யாது?' எனக் கேட்டதற்கு அவர்கள், 'உதுமான் றலியல்லாஹு அன்ஹு கடைபிடித்திருந்த கொள்கையையே ஆயிஷா நாயகி யவர்களும் கடைபிடித்திருக்கிறார்கள்' எனச் சொன்னார்கள். (ஹஸ்ரத் உதுமான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் கால் நடையாக பிரயாணம்செய்து அலுத்துவிட்ட பிரயாணிக்கே கஸர் தொழுகை ஏற்றது என்றும், பிரயாணத்தில் அவன் ஓரிடத்தில் தங்கிவிடுவானாகில் கஸர் தொழுகை அவனுக்கு ஜாயஸ் ஆகாதென்பதே அவர்களுடைய கொள்கை.)

## ஆயிஷா நாயகியின் வியாக்கியானமும், சில ஸஹாபாக்களுடைய வரிசையும்.

சர்வ வல்ல இறைவன் ஆயிஷா நாயகி யவர்களுக்கு அநேக அருள்களை அருள்புரிந்ததற்கிணங்கவே, உண்மை ஆராய்ச்சியுடைய ஞானத்தையும் போதியளவுக்கு அருள்புரிந்திருந்தான். அதனின்றும் ஆயிஷா நாயகி யவர்கள் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய அநேக ஸஹாபாக்களின் மேம்பாடுகளைப்பற்றி பாமரர்களுக்கு விளக்கிக் கூறியுள்ளார்.

ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றினார்கள். "எனது தந்தையார் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் வபாத்து நேரம் நெருங்கியபோது அவர்கள், 'எனக்கு ஜனங்களுக்கிடை உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களைக்காட்டிலும் பிரியமானவர்கள் இல்லை' என்று கூறிவிட்டு என்னை நோக்கி "நான் என்ன சொன்னேன்" என்றுகேட்கவே, நான் அவர்கள் சொல்லியதையே மடக்கிக்கூறினேன். அப்பால் அவர்கள், "அதுமட்டுமா,

உலகத்தினிடையே எனக்கு உமரைக்காட்டிலும் பிரியமானவர் ஒருவருமில்லை'' என்று மொழிந்தார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது:— ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சமுகத்தில் 'இப்னு ஹாரிஸா' 'ஜாபர்' 'இப்னு ரவாஹிர்' இவர்கள் கொல்லப்பட்டுப்போனார்கள் என்றசெய்தி எட்டியபோது ஹஸரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மிகவும் விசனமுற்றவர்களாய் உட்கார்ந்திருந்தார்கள். நான் கதவுகளின் இடுக்குகளிலிருந்து ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைக் கவனித்துக்கொண்டிருந்தேன். அப்போது அந்த ஒருவர்தற்செயலாக ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் வந்து, ''ஜாபர் வீட்டு ஸ்திரீகள் அழுகிறார்கள்'' என்று கூறினார். அதற்கு ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், 'நீர்போய் அவர்களை அழவேண்டாமென தடுத்துவிடும்' என்று கட்டளையிட்டார்கள். போனவர் திரும்பிவந்து, ''அவர்கள் என்பேச்சை கேட்கவில்லை'' என்றார். பின்னரும் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ''நீர் போய் அவர்களைத் தடுத்துவிடும்''என்றார்கள். அந்த மனிதர் மூன்றுவது முறையும் திரும்பிவந்து, ''ரசூலுல்லாவே! அந்த ஸ்திரிகள் நான் என்ன சொல்லுகிறேன் என்பதைப்பற்றியும் செவிகொடுக்கவில்லையே'' என முறையிட்டபோது ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ''நீர்போய் அவர்களுடைய வாயில் மண்ணள்ளிப்போடும்'' என வருத்தத்துடன் கூறினார்கள். அதைக்கேட்ட நான் ''ஓ ஆடவரே! ஆண்டவன் உம்மை இழிவுபடுத்துவானாக! நீர் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய கட்டளைக்கிணங்க அந்த ஸ்திரிகளை அழவேண்டாமெனத் தடுத்திருக்கவுமில்லை. அல்லது, ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை அடிக்கடி இம்சிப்பதினின்றும் ஒதுங்கிக்கொள்ளவுமில்லையே'' என்று கூறினேன்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது. ''ஒரு தடவை ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள்வீட்டில் படுத்திருந்தார்கள். அப்போது அவர்களது இடுப்புப்புடவை அவர்களுடைய கெண்டைக்கால்களைவிட்டும் விலகியிருந்துவந்தது. அச்சந்தர்ப்பத்தில் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்

ஹா அவர்கள் வீட்டிற்குள் பிரவேசிப்பதற்கு அனுமதிகேட்டார்கள். ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அனுமதித்து அவர்களை உள்ளே அழைத்துக்கொண்டார்கள். ஆனால் ஏற்கனவே படுத்திருந்தபடியே படுத்துக்கொண்டு அவர்களுடன் சம்பாஷித்து வந்தார்கள். அடுத்தாற்போல் ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு அன் ஹா அவர்களும் அனுமதியின்பேரில் உள்ளே வந்தபோது அவர்க ளுடனும் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அந் நிலைமையிலேயே இருந்துகொண்டு சம்பாஷித்தார்கள். அப்பால் சிறிது நேரத்திற்கெல்லாம் ஹஸ்ரத் உதுமான் ரலியல்லாஹு அன் ஹா அவர்கள் வந்து பிரவேச அனுமதியைவேண்டிக்கொள்ளவே நபி கள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உடனே எழுந்து உட்கார்ந்துகொண்டு தம்புடவைகளைச் சரிபடுத்திய பின்னர் அவர்களை உள்ளே அழைத்தார்கள். ஹஸ்ரத்உதுமான் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் உள்ளே பிரவேசித்துப் பேசிவிட்டுபோனபிறகு நான் ஹஸ்ரத்ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், "ரசூலுல்லா வே! தாங்கள் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹா அவர்களையும், ஹஸரத் உமர் ரலியல்லாஹு அன்ஹா அவர்களையும் லக்ஷியம் செய்யாது படுத்திருந்தீர்களே! ஹஸ்ரத் உதுமானை மட்டும் இவ்வளவு எச்சரிக்கையுடன் உபசரித்ததற்குக் காரணம் என்ன?" வென்றுகேட்டேன். அப்போது நபிகள்நாயகம் ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்கள், "ஆயிஷாவே! மலக்குகள் கூச்சப்படும்படி யானவரிடம் நான் கூச்சப்படவேண்டாமா?" என்று மொழிந்தார்கள்."

இது சம்பந்தமான மற்றொரு ரிவாயத்தில் நபிகள் நாயகம் ஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "தடையின்றி உதுமான் மிகவும் நாணமுள்ளவர். அவரை நான் படுத்திருந்தபடியே உள்ளே அழைத் திருக்கும் பட்சத்தில் அவர் தம்முடைய அவசியத்தைப்பற்றி என் னிடம் தெரிவிக்காமலே வெட்கப்பட்டுக்கொண்டு திரும்பிப்போயிருப் பார்" என்று மொழிந்ததாகவும் வந்திருக்கிறது.

ஜனப் சையதினா ஹஜ்ர் ரலியல்லாஹு அன்ஹா அவர்களை, 'ஸயாத்' என்பவர் சிறையாக்கி முஆவியா அவர்களிடத்திற்கு அனுப்பி விட்டார் என்ற செய்தி ஆயிஷாநாயகி யவர்களுக்குக் கிடைத்தபோது ஆயிஷாநாயகியவர்கள் அப்துர் ரஹ்மான் பின் ஹாரிஸ் அவர்களை

முஆவியாவிடத்திற்கு அனுப்பி ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுடைய ஸஹாபாக்களையும் குறிப்பாக இப்னு ஹஜர் அவர்களையும் நீங்கள் ஒருபோதும் அவமதிக்கலாகாது என்றும் செய்தி சொல்லியனுப்பினார்கள். ஆனால் அப்துர்ரஹ்மான் பின் ஹாரிஸ் அவர்கள் அங்குபோய்ச் சேர்வதற்கு முன்னமேயே ஹஜர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைக் கத்தல் செய்யப்பட்டு ஷஹீதாய் போனார்கள். முஆவியா அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது ஆயிஷா நாயகி யவர்களிடம் போகவே ஆயிஷா நாயகியவர்கள் ஹஸ்ரத் ஹஜர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் சம்பந்தமாய் நீண்டதோர் பிரசங்கம் செய்தனர். அதைக்கேட்ட 'முஆவியா' அவர்கள் உம்முல் மூமினீன்! எனக்கும் ஹஜர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு மிடை இருந்துவரும் வழக்கைத் தாங்கள் கியாமத்தன்று குத்தி வைத்து விடுங்கள். நாங்கள் இருவரும் எங்கள் வழக்கை எங்கள் சிருஷ்டி கர்த்தனுடைய சந்நிதானத்தில் தீர்த்துக்கொள்ளுவோம் என்றார்.

### கொலையாளரைப்பற்றிய புகழ்ச்சி.

அப்துர் ரஹ்மான் இப்னுஷமாமா அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—"நாங்கள் ஆயிஷா நாயகியவர்களிடம் போயிருந்தோம். அப்போது ஆயிஷா நாயகியவர்கள் எங்களிடம், "உங்கள் தலைவராகிய முஆவியாபின் ஸரீஹ் சண்டைகளின் போது எவ்வாறு நடந்து கொள்ளுகிறார். அவருக்குக் கீழ்பட்ட உத்தியோகஸ்தர்களோடு அவருடைய உபசாரம் எப்படி யிருந்துவருகின்றது" எனக்கேட்டதற்கு நாங்கள், 'நாம் அவர் பால் எத்தகைய குறைவும் காணவில்லை' எனக்கூறியதுடன் அவரைப்பற்றி புகழ்ந்தும் பேசினோம். இவற்றை யெல்லாம் கேட்ட ஆயிஷாநாயகியவர்கள், "அஸ்தக்பிருல்லா! அவர் என் சகோதரரைக் கொன்றார் என்பதை பாராட்டி நான் அவர் மிகவும் கெட்டவரென்பதாக எண்ணிவந்தேன். நீங்கள் சொல்வதினின்றும் அவர் நல்லவரென்றே புலனாகிறது. ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "இறைவனே! என்னுடைய உம்மத்தார்களோடு எவரொருவர் சாந்தமாக நடந்து கொள்வாரோ நீயும் அவரோடு சாந்தமாகவும், இன்னும் எவனொருவன் என்னுடைய உம்மத்தார்களோடு கொடூரமாக நடந்துகொள்வானோ நீயும் அவனோடு கொடுமையாக நடந்துகொள்வாய்! என்று பிரார்த்தித்து வந்ததை நான் கேட்டிருக்கிறேன் என்றார்கள்."

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—"ஒரு தடவை, புறைராவில், ரசூலுல்லா அவர்கள் என்னண்டை உட்கார்ந்திருக்கையில் நான், "ரசூலுல்லாவே! வானத்திலுள்ள நட்சத்திரங்களின் எண்ணிக்கைக்குச் சமமாக யாராவது நற்காரியங்களைச் செய்திருப்பதாகச் சொல்லலாமா?" எனக் கேட்டேன்.

அதற்கு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஆம்! ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய நன்மைகள் வானத்திலுள்ள நட்சத்திரங்களின் அளவுக்கு ஏற்படக்கூடும்" எனக் கூறினார்கள்.

ஆயிஷா நாயகி யவர்கள் கூறுகிறார்கள். "இதைக்கேட்டு நான் பிரமித்துப்போனேன். அப்பால் நான் "அல்லாவுடைய ரசூலே! என் தந்தையாரின் நன்மைகளைப்பற்றி தங்கள் அபிப்பிராயமென்ன?" வெனக்கேட்டபோது, ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய எல்லா நன்மைகளும், அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய ஒரு நன்மைக்கே ஈடாகும்" என்று விடை பகர்ந்தார்கள். இது சம்பந்தமாய் வந்துள்ள மற்றொரு ஹதீதில், ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் தொழுகை நோன்பு சம்பந்தமாகவே மேம்பாடடைந்திருக்கவில்லை யென்றும், அவர்களின் உள்ளத்தின் தூய்மையும் மாரிபத் என்னும் தெய்வஞானத்தின் ஆதாரவிலேயே அவர்களுக்கு அத்தகைய உயர்பதவி கிடைக்கப்பெற்றிருந்ததென்றும் வந்திருக்கிறது."

### கோஷா நாகரீகம்.

ஆயிஷா நாயகி யவர்களின் கோஷா நாகரீகத்தை ஆராய்ந்தறியுமிடத்து, அவர்கள் தம் சிறுபிராயத்தில், தம்மோடு பால் குடித்த முறையில் சகோதரர் என்றுவழங்கிய 'அப்லெகவஸீஸ்' உடைய சகோதரரையும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உத்தரவு ஏற்படுமுன், தம் வீட்டில் பிரவேசிக்கவும் இடங்கொடுக்கவில்லை.

குருடான ஹஸ்ரத் இஸ்ஹாக் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகின்றது. "நான் ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் சமுகத்திற்குப் போயிருந்தேன். அப்போது அவர்கள் என்னைக்

கண்டு கோஷாவை மேற்கொண்டார்கள். (திரைக்குள் மறைந்தார்கள்.) அதையுணர்ந்த நான் "உம்முல் முமினீன் அவர்களே! நானோ தங்களைப் பார்க்கமுடியாது. அப்படியிருக்க தாங்கள் என்னைக்கண்டு என் கோஷாவைக் கடைபிடிக்கிறீர்கள்" என்று கேட்டேன். அப்போது உம்முல் முமினீன் எனக்கு, "நீங்கள் என்னைப் பார்க்க முடியாவிட்டாலுங்கூட நான் உங்களைப் பார்க்க முடியுமன்றோ?" எனமொழிந்தார்கள்.

இக்ரிமா அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ஆயிஷா நாயகியவர்கள் முதன்முதலாக ஹஸ்ரத் ஹஸன், ஹுஸேன் றலியல்லாஹு அன்ஹு அவர்களைக் காணும்போதும் கோஷாவை அனுசரிக்க ஆரம்பித்தபோது, இப்னு அப்பாஸ் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் "ஸித்திகாவே! நீங்கள் அவ்விருவர்களோடு 'கோஷாவை' அனுசரிக்கும்படி முறை ஏற்பட்டிருக்கவில்லை" என்று கூறினார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் கூறப்படுகிறது:-"நாங்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களோடு இஹ்ராமை கட்டிக்கொண்டு போகையில், கூட்டத்தார்கள் எங்களுக்கருகிலிருந்து செல்லுவார்களானால் நாங்கள் முகமூடியைப் போட்டுக் கொள்ளுவோம், அவர்கள் எங்களைத் தாண்டிபோய்விட்டதும் நாங்கள் முக மூடியை நீக்கி விடுவோம்."

## ஆயிஷா நாயகியின் உடை.

ஹஸ்ரத் உர்வா அவர்களால் அறிவிக்கப்படுகிறது:-ஆயிஷா நாயகி யவர்களிடம் அப்துல்லா இப்னு ஸுபைர் அவர்களால் அனுப்பப்பட்டிருந்த ஒருவித பட்டு துப்பட்டா இருந்து வந்தது.

ஷம்ஸியா றலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்:- "நான் ஆயிஷா நாயகியவர்களிடத்திற்குப்போயிருந்த சமயம் அவர்கள் துப்பட்டா கால்சல்லடம் சட்டை ஆக இவைகளைத் தரித்துக்கொண்டிருந்ததைக்கண்ணுற்றேன். அவர்களின் சிலபுடவைகள் 'குசும்பா' என்னும்வர்ணத்தில் வைக்கப்பட்டிருந்தன. மற்றொருரிவாயத்தில் ஆயிஷா நாயகியவர்கள், இஹ்ராமுடைய தருணத்தில் 'குசும்பா' நிறமுடைய புடவைகளே அணிந்திருந்ததாக வந்திருக்கிறது. மூன்றாவது ரிவாயத்தில் இஹ்ராமின்போது ஆயிஷா நாயகியவர்களுக்கு மஞ்சள், (பொன்னிறம்) சிவப்பு, குசும்பா நிறங்களைக்கொண்டுள்ள புடவைகள் அவர்கள் தேகத்தின்பேரில் இருந்துவந்தன வென்றும், நான்காவது

ரிவாயத்தில், அவர்கள் இஹ்ராமின்போது உபயோகித்த போர்வை குசும்பா நிறமுடையதென்றும், ஐந்தாவதுரிவாயத்தில் அப்போர்வை மஞ்சள் நிறமானதென்றும் கூறப்பட்டிருக்கின்றன. 'பிக்ராபிந்தெ அக்பர்' அவர்களால் அறிவிக்கப்படுகிறது. நான் ஆயிஷாநாயகியவர்களுடைய சமுகத்தில்போனபோது அவர்கள் குசும்பா வர்ணத்தைத் தயாரித்துக் கொண்டிருந்தார்கள். மருதாணியைப்பற்றி வினவியதற்கு அவர்கள் அது ஒரு சிறந்த செடியின்தழை அத்தழைகளின் சாறு துப்பரவானது (அதாவது மருதாணி உபயோகித்தல் ஜாயிஸாகும்) என்று கூறினார்கள். இதர சில ரிவாயத்துகளினின்றும் ஆயிஷாநாயகியவர்களின் துப்பட்டா, கால்சல்லடம், சட்டை யாவும் சில சமயங்களில் குசும்பா நிறமுடையவைகளாயும் சிலவேளைகளில் ரோஸ் நிறங்கொடுக்கப்பட்டவைகளாயு மிருக்குமென சொல்லப்பட்டிருக்கிறது.

உம்மெமுகைறு ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்பட்டிருக்கிறது. "நான் ஆயிஷாநாயகியவர்களிடம் பட்டுப்புடவைகளைப்பற்றி வினவினேன். அதற்கு அவர்கள் தாம்ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய காலத்தில் பட்டைப்போலொத்த புடவையைப் பாவித்திருந்ததாயும் அதைப்பற்றி ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அவர்களுக்கு எத்தகைய ஆக்ஷேபமொழிகளையும் சொல்லவில்லை என்பதாயும் கூறினார்கள்."

ஆயிஷா நாயகியவர்களிடம் சில பொன் மோதிரங்கள் இருந்து வந்தனவென்றும். 'ஸஹீபுகாரி' என்னும் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

## ஆயிஷாநாயகியவர்களின் சுவீகாரபுத்திரரும், அடிமைகளும்.

ஆயிஷா நாயகியவர்களுக்கு றசூலுல்லாவிடம் சந்ததி உண்டாகவில்லை. ஆனதுபற்றி அவர்கள் தம் சகோதரியின் புதல்வராகிய அப்துல்லா ரலியல்லாஹு அன்ஹு அவர்களைத் தம்முடைய சுவீகாரப் புத்திரரென அங்கீகாரம் செய்துக் கொண்டார்கள். அப்துல்லா ரலியல்லாஹு அன்ஹு அவர்களது தந்தையாரின் பெயர் ஸுபைர் பின் அவாம் (இவர்கள் மிகவும் பிரக்யாதியும் மேம்பாடும் அடைந்துள்ள ஸஹாபியாவார்) தாயாரின் நாமம் அஸ்மாபிந்தெ அபூபக்கர். ஹிஜ்ராத்துக்கு முன்தினம் அவர்களுக்கு 'ஸாதுந்நாபீன்' என்னும்

பட்டப்பெயர் வாய்ந்திருந்தது. ஹஸ்ரத் அப்துல்லாவுடைய தந்தை யாரின் தாயாருடைய பெயர் 'ஸபிய்யா'. அவர் அப்துல் முத்தலிபின் புதல்வியார். இந்த ஸபிய்யாவானவர் ரசூல் ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்களுக்கு அத்தையாவர். ஹிஜ்ரத்துக்குப் பின்னர் முதன் முதலாக அப்துல்லா பின்ஸுபைர் அவர்களே பிறந்துள்ளார். ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் 'ஹர்ணு' வை மென்று அவர்களுடைய வாயில் அதன் சாற்றைப் போட்டார்கள். 'அப்துல்லாபின் ஸுபைர்' மிக்க வீரதீரர்களிலும் நல்லடியார்களிலு ஒப்புக்கொள்ளப்பட்டவர்கள். அவர்களுடைய சகோதரர் உற்வாவின் புத்திரர்கள் 'ஆமிர்' 'இபாத்' எனப்படுவர். ஆயிஷாநாயகியவர்கள் அப்துல்லா ரலியல்லாஹு அன்ஹு அவர்களைத் தம்சுவீகாரப்புதல் வராக்கிக் கொண்டதற்கேற்பவே அவர்கள் அப்துர்றஹ்மான் ரலியல் லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியாராகிய 'அம்ரா' என்பவர் களையும் தம்புதல்விக் கொப்பாக வளர்த்து வந்தார்கள். கடைசியாக இவர்களே அப்பெண்ணைக் கட்டிக்கொடுத்தார்கள் என்பதும் மேலே கூறப்பட்டுப்போயிற்று.

'அம்ரா' ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஆயிஷாநாயகியவர் களுடைய சேர்க்கையிலிருந்துவந்ததன் பயனாக, ஆயிஷா நாயகியவர் களின் விஷயங்களில் பெரும்பான்மையான விஷயங்களைப் பற்றிய விவரங்களை அவர் நன்கறிந்துவந்தார். ஆனதுபற்றி அவர் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்பட்ட ஹதீதுகளில் அநேக ஹதீதுகளை எடுத்துரைத்திருக்கிறார்.

'இப்னுஜஹான்' எழுதுகிறார். ஆயிஷாநாயகியவர்களுடைய விஷ யங்களை அதிகமாய் அறிந்திருந்தவர்களிலும், அவர்களுடைய ஹதீதுக ளில் பெரும்படியான ஹதீதுகளை தெரிந்திருந்தவர்களிலும் அம்ரா ரலி யல்லாஹு அன்ஹா அவர்களே எல்லோரிலும் மேற்பட்டவராவர். இவர்கள் ஹிஜ்ரி 103-ல் வபாத்தடைந்தார்கள் என இப்னு ஆஸிம் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் விவரிக்கிறார். 'சுல்தான் உம்ரு ப்னு அப்துல் அஜீஸ் இப்னு குர்ரம்' அவர்களுக்கு, "அவர்கள் அம்ராபிந்தெ அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்களி னின்றும் ஆயிஷா நாயகியவர்களுடைய ஹதீதுகளைக்கேட்டு வரைந்து கொள்ளும்படியாகவும் ஏனெனில் இந்த வித்தையில் அம்ரா றலியல் லாஹு அன்ஹா அவர்களுக்குப்பின் வேறொருவரும் தகுதிவாய்ந் திருக்கவில்லை யென்பதாகவும்" எழுதியிருந்தாரென தஹ்ஸீபுத் தஹ்ஸீப்' என்னும் நூலில் வரையப்பட்டிருக்கிறது.

“ஔப்பிபுனுல் ஹாரிஸ்’ பின்தபீல் ஆயிஷா நாயகியுடன் பால் குடித்த வகையில் சகோதரர் எனப்படுவர். ‘அப்துர் ரஹ்மான்’ ‘முஹம்மத்’ இவ்விருவர்களும் ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய புதல்வர்கள், ஆயிஷா நாயகியின் சகோதரர்கள், ஆனால் இவ்விருவர்களில் அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்களே ஆயிஷா நாயகிக்கு உடன் பிறந்த சகோதரராவார். முஹம்மத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஆயிஷா நாயகியவர்களுக்கு மாற்றாந்தாயின் புதல்வர் (சகோதரர்) ஆவார். அவர்களுடைய தாயாரின் பெயர் ‘அஸ்மா பின்தெ அமீஸ்’ என்பதாகும். முஹம்மத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹஜ்ஜுல் விதா இன்போது ‘ஸில்ஹலீபா’ என்னுமிடத்தில் பிறந்தார்கள். அவர்களுடைய தாயாராகிய அஸ்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை ஹஸ்ரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ‘ஜாபர் இப்னு அபீ தாலிப் அவர்களின் ஷஹாதத்திற்குப் பின்னர் நிக்காஹ் செய்து கொண்டார்கள். அஸ்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஹஸ்ரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்குப் பின்னிட்டு ஹஸ்ரத் அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய நிக்காஹ்வில் வந்துள்ளார்.

முஹம்மத்பின் அபுபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹஸ்ரத் அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் ‘ஜமல்’ சண்டையிலும் ஈடுபட்டிருந்தார்கள். ஹஸ்ரத் அலி ரலியல்லாஹு அன்ஹு முஹம்மத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை மிஸ்றுடைய அதிபதியாக நியமித்தபோது உம்றுபினுல் ஆஸ் முஹம்மத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மீது படையெடுத்து வந்தார். அவர்கள் ஓடிவிட்டார்களாயினும் கடைசியாகப் பிடிக்கப்பட்டு உம்றுபினுல் ஆஸ் என்பவரால் கொல்லப்பட்டார்கள். அவர்களுடைய மையத்து இறந்துபோன ஒரு கழுதையின் தோலினுல் சுருட்டப்பட்டு தீக்கிரையாக்கப்பட்டது. இச்செய்தி ஆயிஷா நாயகியவர்களுக்கு எட்டியதேயாகில், அவர்கள் மிகவும் மனவேதனை யடைந்தனர். அது முதல் அவர்கள் (ஆயிஷா நாயகி) காய்ந்த இரைச்சியை புசிப்பதையும் விட்டுவிட்டார்கள். முஹம்மத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய பட்டப்பெயர் ‘அபுல் காஸிம்’ என்பதாகும். அவர்களுக்கு காசிம் எனும் பெயர்கொண்ட புதல்வரொருவ ரிருந்தமையால் அத்தகைய பெயர் வழங்கியது.

ஆயிஷா நாயகியவர்களின் சகோதராகிய 'அப்துர் ரஹ்மான்' மிகவும் பாராக்கிரமசாலி என பிரக்யாதிபெற்றவர். ஸஹாபாக்களுக்கிடையும் மேம்பாடடைந்தவர்கள். 'பதர் 'உஹத்' இச்சண்டைகளின் போது அவர்கள் குறைஷ் காபிர்களின் சார்பில் வந்திருந்தார். சண்டை செய்வதிலும் அம்பு எய்வதிலும் அவருக்குப் போதுமான திறமை வாய்ந்திருந்தது. அன்னார் மேற் கூறிய யாதொரு சண்டையில் போர்க்களத்தினிடையே வந்துநின்று எதிரியைக் கூப்பிட்டபோது ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களே! அவரை எதிர்க்கப் புறப்பட்டார்கள். ஆனால் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அப்போது ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களைப் போகவேண்டாமென தடை செய்துவிட்டார்கள். அப்பால் 'ஹுதைபியா' உடைய சண்டையின் போது ஹஸ்ரத் அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்லாத்தைத் தழுவினார்கள். அவருடைய இஸ்லாத்தின் பற்றும் சிறந்த பற்றேயாகும். அவருடைய ஆரம்பப்பெயர், 'அப்துல் கஅபா'. 'அப்துர் ரஹ்மான்' என்னும் பெயர் அப்பால் அவர்களுக்கு ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களால் வைக்கப்பட்டது.

ஹஸ்ரத் 'அப்துர் ரஹ்மான்' அவர்கள் ஹஸ்ரத் காலித்பின் வலீத் றலியல்லாஹு அன்ஹு அவர்களோடு 'எமாமா'வுடைய சண்டையிலும் சம்பந்தப்பட்டிருந்தார்கள். எமாமாவின் பெரிய தலைவர்களில் ஏழுபேர்கள் அவர்களால் கொல்லப்பட்டும் போயினர். 'ஸுபைர் பின்புகார்' எழுதுகிறார். "அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய மூத்த குமாரராவார். அன்னார் மிகவும் நற்குணம் வாய்ந்தவர். இவர்களைக்கொண்டும் அநேகஹதீதுகள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. இவர் வியாபாரத்தின் பொருட்டு ஷாம்தேசத்திற்குச் சென்றிருந்த சமயம் அங்குள்ள லைலா' என்னும் பெயர்கொண்ட ஒரு பெண்ணின் மீது இவர் மோகங்கொண்டார். இச்செய்தி ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் வரையிலும் எட்டியது. அப்பால் ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் முஸ்லிம் சேனைகளை ஷாம்தேசத்தின் புறமாய் ஜிஹாதுக்கு அனுப்பியபோது, அச்சேனைகளுடைய தலைவரிடம், "சண்டையில் உங்களுக்கு வெற்றி

கிடைத்தபின்னர், 'ஜூதி'யுடைய மகளாகிய 'லைலா' என்கிற பெண் உங்களுக்கு வசப்பட்டு விட்டால் நீங்கள் அப்பெண்ணை அப்துர் ரஹ்மானிடம் ஒப்புவிக்கவேண்டியது'' என்று உத்தாவு கொடுத்தார்கள்.

அவ்வண்ணமே, முஸ்லிம்களுக்கு வெற்றிகிடைத்தபோது, அப்பெண் அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் பொறுப்பாக்கப்பட்டது. அவர்கள் அப்பெண்ணைத் தம் மனைவிமார்களுக்கிடை, இதர எல்லோரிடத்தும் காட்டிவந்த அன்பைக்காட்டிலும் அதிக அன்பாய் நடந்துகொண்டார்கள். அவர்களுடைய இதர மனைவிமார்கள் தம் சணவரின் அத்தகைய பழக்கத்தைப்பற்றி ஹஸ்ரத் ஆயிஷா றலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் முறையிட்டுக்கொள்ளத் தொடங்கினர்.

அதைக்கேட்ட ஆயிஷாநாயகி யவர்களுக்கு ஹஸ்ரத் 'அப்துர் றஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள்மீது அதிக கோபமேற்பட்டது. அப்போது அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆயிஷாநாயகி யவர்களிடம், ''தாங்கள் என்னை மன்னியுங்கள். என் பழக்கம் என் சக்திக்குட்பட்டிருக்கவில்லை. 'லைலா'வுடைய சௌந்தரியமானது என்னை அவ்வாறு மடக்கிவிட்டது'' என்று நயந்து முறையிட்டுக்கொண்டார்கள்.

ஆண்டவன் செயல்! சிறிது காலத்திற்குள், அப்துர் ரஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், அதே, 'லைலா'வுடன் விபரீதமாய் நடந்துகொள்ளவும் நேரிட்டது. அவர்களது அன்பு கொடுமையாக மாறியது. 'லைலா' கடைசியாக ஆயிஷாநாயகியிடம்போய் முறையிட்டார். அப்போது ஆயிஷாநாயகி யவர்கள் அப்துர் ரஹ்மானை அழைத்து, ''நீரும் ஒரு புதுமையான ஆடவராக இருக்கிறீரே! இவரிடத்து எவ்வளவுக்கெவ்வளவு அன்பாய் நடந்துவந்தீரோ அவ்வளவுக்கவ்வளவு கடுமையாக பழகிக்கொள்ள ஆரம்பித்துவிட்டீர். இது சரியல்ல. இவருடைய நடவடிக்கை உங்களுக்குப் பிடிக்காதபட்சத்தில் இவருக்குரிய விவாகக் கட்டணம் எதுவுண்டோ, அதைத்தீர்த்துக் கொடுத்து நல்லபடியாக அவரை எங்கிருந்து அழைத்துக்கொண்டுவந்தீரோ அங்கேயே கொண்டுபோய் விட்டுவிடும்'' என்று போதனை செய்தார்கள். அதன்பேரில் அப்துர்றஹ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் 'லைலா'வை அவருடைய பெற்றோர் ஜாகைக்கு கொண்டுபோய் விட்டுவிட்டு அவருக்குரிய 'மஹரை'யும் தீர்த்துவிட்டார்கள்.

ஹஸரத் அப்துர்றஹ்மான் றலியல்லாகுஅன்ஹு அவர்கள், ஆயிஷாநாயகியுடன் 'ஜமல்சண்டையிலும் ஈடுபட்டிருந்தார்கள். அமீர்முஆவியா எஸீதுடைய பையத்தை வாங்கியபோது அவர்கள் அதை முற்றிலும் நிராகரித்து "இது 'ஹிர்கில்' உடைய சடங்காகும்" என்றூர்கள். 'முஆவியா' அப்துர்றஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்களை இராசிக்குக்கொண்டு வரும்படியான வழியில், ஒருலக்ஷம் திர்ஹம்களையும் அனுப்பினர். ஆனல் அப்துர் றஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், நான் லஞ்சம் வாங்கப்பட்டவனுமல்ல. இம்மைக்காகவேண்டி மறுமையை விற்றுவிடக் கூடியவனுமல்ல" என்று சொல்லி அந்த திர்ஹம்களை வாப்பீஸ் செய்துவிட்டார்கள்.

அப்துர்றஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் எஸீதுடைய 'பையத்து' பூரணமடைவதற்கு முன்னமேயே மக்காவில் வபாத்தடைந்தனர். அவர்களுடைய வபாத்தும் திடீரென சம்பவித்துள்ளதே. அதாவது மக்கத்திலிருந்து 10-மைல் தொலைவிலுள்ள ஒரு வீட்டில் (அவ்வீட்டின் பெயர் "ஜஷ்") அவர்கள் தூங்கிக்கொண்டிருக்கையிலேயே உயிர் துறந்துவிட்டார்கள். அப்பால் அவர்களுடைய 'மையத்தை' அங்கிருந்து மக்கத்துக்குக் கொண்டுவந்து நல்லடக்கம் செய்யப்பட்டது. ஆயிஷா நாயகியவர்களுக்கு தம் சகோதாரின் துக்கச்செய்தி எட்டியபோது, அவர்கள், ஹஜ்ஜுடைய நாட்டத்தின் பேரில் மக்காவுக்குப் போய் தம் சகோதாரின் கபருக்கருகில் நின்று கொண்டு அழுதவண்ணமாக சில கவிகளை படித்தார்கள். அக்கவிகளின் சாராம்சம் யாதெனில், "(ஒருகாலத்திலோ) நாம் இருவரும்ஜஸ்இபா (இராக்கின்பாதுஷா) வுக்கொப்பாக இரண்டு ஆப்த நண்பர்களைப் போல் வெகுநாள் பரியந்தம் அன்னியோன்னியமா யிருந்துவந்தோம். நாங்கள் இனிபிரியப்போவதில்லை என்றும் சொல்லப்பட்டது. ஆனல் நாமும், எஜமானனும் இம்மட்டில் ஓரிடத்திலேயே கூடி இருந்ததற்குப்பின் பிரிந்துவிட்டதானது நாமிருவரும் ஒரு இரவுங்கூட சந்தித்திருக்கவில்லை என்பதை வெளிப்படுத்துவதாகும்."

ஹஸ்ரத் அபூபக்கர் றலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியாராகிய அஸ்மா இவர்களுடைய சகோதரியாராவார். இவர்களுடைய தாயாரின் பெயர் கதீலா, மற்றொரு சகோதரியின் பெயர் 'உம்மெ குல்ஸூம்', இவர்களுடைய தாயார் 'உம்மெ ஹபீபா'.

ஹஸ்ரத் 'பரீரா' என்பவர், அவர்களுடைய பிரபல வேலைக்காரியாக இருந்துவந்தவர்கள். ஆயிஷா நாயகியவர்கள் தம் வாழ்க்கையி

னிடையே எத்தனையோ அடிமைகளையும் வேலைக்காரிகளையும் விலைக்கு வாங்கி விடுதலைசெய்திருந்தார்கள். ஆயினும் 'பரீரா' விடத்து ஆயிஷா நாயகியவர்களுக்கு அளவற்ற பிரியமிருந்துவந்தது. ஹஸ்ரத் பரீராவும் ஆயிஷா நாயகியவர்களிடத்தில் தம் உடல் பொருள் ஆவியைத் தியாகம்செய்யக் கூடியவாறு அவ்வளவு அன்பாய்நடந்துகொள்வார்கள்.

பரீராவுடைய மேம்பாட்டைப்பற்றி ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றி யிருக்கிறார்கள். "பரீராவில் மூன்று முக்கிய அம்சங்கள் பொருந்தியிருந்தன. முதலாவது அவர் அடிமையாக இருந்துவந்து அப்பால் விடுதலையடைந்து போனவர். விடுதலையடைந்ததற்குப் பின்னர், அவர் தம்முடைய கணவரோடு நிக்காஹ் தரிபடுத்திக்கொள்ளும் விஷயத்தில் சுயேச்சை வாய்ந்திருந்தார். இரண்டாவது இதே சச்சரவு சம்பந்தமாகவே, றசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "வேலைக்காரனையோ அல்லது வேலைக்காரியையோ விடுதலை செய்பவனே சுயேச்சையின் பாத்தியத்திற்கு உரியவன்'' என மொழிந்தார்கள். மூன்றாவது ஒருதடவை றசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வீட்டிற்குள் வந்தபோது அடுப்பின்மேபரில் இறைச்சி சமையல் ஆய்க்கொண்டிருந்தது. சிறிது நேரத்திற்கப்பால் றசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு முன் ரொட்டியும் வீட்டிலுள்ள குழம்பில் கொஞ்சமும் கொண்டுவந்து வைக்கப்பட்டதேயாகில், பெருமானவர்கள், "நான் வீட்டிற்குள் நுழைந்தவுடன் சமயலாய்க்கொண்டிருந்த இறைச்சி எங்கே?'' எனக் கேட்டனர். அப்போது "றசூலுல்லாவே! அந்த இறைச்சியோவெனில் பரீராவுக்காகவேண்டி ஸத்காவின் மூலமாய் வந்துள்ளது. தாங்கள் ஸத்கா சம்பந்தமான பதார்த்தங்களைப் புசிப்பதில்லையே யென்பதைப் பாராட்டி அது தங்களுக்குமுன் கொண்டு வந்து வைக்கப்படவில்லை'' என அறிவிக்கப்பட்டதற்கு ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "இல்லை நான் அதைப் புசிப்பேன். அதுவோ பரீராவுக்காகவேண்டியே ஸத்காவாகும். நமக்கோ அது யாவும் காணிக்கையாகிவிட்டது.'' என்று கூறினார்கள்.

ஹஸ்ரத் இப்னு அப்பாஸ் றலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். 'பரீரா' வுடைய புருஷனாகிய 'முகீஸ்' கருமை நிறமுள்ள அடிமையாவார். அவர் மதீனாவுடைய தெருவீதிகளில் பரீராவுக்காக அழுதுக்கொண்டு திரிந்ததும், அவருடையகண்ணீர் அவரது தாடிரோமங்

களின் மீது வடிந்துகொண்டிருந்ததும் இன்னமும் என் பார்வையி லிருந்து வருகிறது. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லம் அவர்கள் என் தந்தையாரிடம், "ஓ அப்பாஸ் அவர்களே! முகீ சுக்கு பரீரா விடத்தில் ஏற்பட்டுள்ள பிரீதியையும், பரீராவுக்கு முகீசு பால் ஏற்பட்ட விரோதத்தையுங் கண்டு நான் ஆச்சரியமடையாது இருக்கமுடியுமோ?" என்று திருவுளம்பற்றினார்கள்.

அப்பால் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர் கள் பரீராவை நோக்கி, "பரீராவே! நீ உன் கணவனிடத்திற்குப் போய் விட்டால் மேலாகும்" என மொழிந்தபோது, பரீரா "அல்லாவுடைய ரசூலே! நான் அவ்வாறே செய்யவேண்டுமென தாங்கள் கட்டளையிடு கிறீர்களா?" என முறையிட்டபோது ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்கள் "இல்லை நான் சிபார்சு செய்கிறேன்" என்று கூறவே, பரீரா "அப்படியாயின் நான் முகீசிடத்திற்குப்போக அவசிய மில்லை" என்றார். 'பரீரா'வின் விடுதலையைப்பற்றி ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றுகிறார்கள். "ஒருநாள் 'பரீரா' என்னிடத் திற்கு வந்து நான் என்னுடைய எஜமானர்களுடன் 300-திர்ஹம்கள் பேரில் என்னைப் பதிவாக்கிக்கொண்டேன். பதிவாக்கிக்கொள்ளல் என் பதற்கு தாத்பரியம் யாதெனில், எஜமான் தன் அடிமையிடம் நான் இவ்வளவுதொகை வாங்கிக்கொண்டபின் உன்னை விடுதலை செய்வேன் என்பது. அடிமை தனக்குரிய தொகையை செலுத்தி விட்டால் விடு தலையடைந்துபோவது முறை. 'பரீரா' ஏற்கனவே ஒருயூதனுக்கு அடி மைப்பட்டிருந்தவர் பிரதி வருஷமும் 40-திர்ஹம்வீதம் செலுத்துவ தாக அவர் அந்த யூத எஜமானனிடத்தில் உடன்பாடு செய்திருந்தார். தாங்கள் எனக்கு உதவி புரியுங்கள்" என்று தெரிவித்துக்கொண்ட போது நான் "உம்முடைய எஜமானர்கள் ஒரேதடவையில் உமக்காக தீர்மானிக்கப்பட்ட தொகையை வாங்கிக்கொண்டு முழுஉரிமையையும் எனக்கே விட்டுக்கொடுக்கும்பட்சத்தில் நான் உமக்குரிய தொகையை செலுத்திவிடத் தயாராக இருக்கிறேன்"என்று சொன்னேன். அதைக் 'பரீரா' தம்எஜமானர்களிடம் அதைப்பற்றி கேட்டுவருவதாகச்சொல் லிப்போனார். எஜமானர்களோ முதலில் நிராகரித்து விட்டனராகிலும் அப்பால் அவர்கள் பரீராவின் பேரில் தம்முடைய பாத்தியம் இருக்கு மென்ற நிபந்தனையின் பேரில் விடுதலை செய்யத் தயாரா யிருப்ப தாய்க் கூறினர்.

பின்னர், ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னிடம், "நீர் பரீராவை விலைக்கு வாங்கிக்கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு மகா ஜனங்களுக்கிடைபோய், "அல்லாவுடைய கிதாபுக்கு விரோதமாய் ஏற்படும் நிபந்தனைகள் அங்கீகரிக்கப்பட்டவைகளன்று, வேலைக்காரனையோ அல்லது அடிமையையோ விடுவித்து விடுபவனே சுயேச்சையின் பாத்தியத்தை அடைபவனாகிறான்" என்று பிரசங்கம் செய்தார்கள்.

## இரகசிய விஷயங்கள்.

ஹஸ்ரத் அஸ்வத் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள். "'ஒருதடவை 'இப்னுஸுபைர்' என்னிடம் 'ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் உங்களிடத்தில் அநேக ரகசிய விஷயங்களை கூறிவருவார்களே 'கஅபதுல்லா' கூட்டத்தைப்பற்றி அவர்கள் உங்களிடம் ஏதேனும் கூறினதுண்டா? எனக் கேட்க, நான் 'ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியவர்களுக்கு, ஆயிஷாவே! உம்முடைய கூட்டத்தார்கள் மூடபக்தியுள்ள காலத்திற்கு அணுகியில்லாம விருந்திருப்பாரகில் நான் 'கஅபா' கட்டடத்திற்கு இரண்டு வாயற்படிகளை அமைத்திருப்பேன் அவற்றுள் ஒன்று ஜனங்கள் பிரவேசிப்பதற்கும் மற்றொன்று ஜனங்கள் கஅபாவிலிருந்து வெளிப்பட்டுப்போவதற்கும் பயன்பட்டிருக்கும் என்று அருளினார்களென பதிலளித்தேன். என் பதிலைக்கேட்ட ஹஸ்ரத் ஸுபைர் கஅபதுல்லாவின் கட்டடத்திற்கு இரண்டு வாயற்படிகளை அமைத்து விட்டனர்.

## எம்மாதிரியான 'கபன்' அவசியம்.

யூசுப்பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகின்றது:—"நான் உம்முல்மூமினீன் ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களிடம் உட்கார்ந்திருந்தபோது, 'இராக்' வாசி யொருவர் வந்து ஆயிஷா நாயகியவர்கள் சமுகத்தில் மையத்துக்கு எத்தகைய 'கபன்' நல்லது? எனக்கேட்டார் அதற்கு ஆயிஷா நாயகியவர்கள் "அந்தோ! (மவுத்தானதற்குப் பின்னும்) நீர் எந்தவஸ்துவுக்காகவும் கஷ்டப்படுவீரா (அதாவது நல்லதும், கெட்டதுமான உடைக்காக வேண்டி) அப்பால் வந்தவர், "உம்முல்மூமினீன் அவர்களே! தாங்கள் எனக்குத் தங்களுடைய 'குர்ஆன் ஷரீபை காண்பியுங்கள்" என்றார்.

ஆயிஷா நாயகி யவர்கள், 'அதேன்?' என்று கேட்க, அவர் "நான் அதைப் பார்த்து என் குர்ஆன் ஷரீபையும் ஒழுங்குப் படுத்திக் கொள்ளுகிறேன். அநேகர் ஒழுங்கீனமாய் ஓதுகிறூர்கள்" என்று சொன்னூர். அதற்கு ஆயிஷாநாயகி யவர்கள், "பாதகமில்லை; எந்த ஆயத்தை வேண்டுமாயின் முதலில் ஓதலாம்" என்றூர்கள். எல்லாவற்றிற்கு முன்னர், சுவர்க்கம், நரகம் சம்பந்தமான ஆயத்துக்கள் இறங்கின. அப்பால் ஹலால், ஹராம் சம்பந்தமாயும் பின்னர் விஞ செய்யவேண்டாமென்பதைப் பற்றியும் ஆயத்துகள் இறங்கின.

### சஞ்சல நிவர்த்திக்குத் துவா.

ரசூலுல்லா சல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஆயிஷாநாயகி யவர்களுக்கு அவர்கள் தம் துக்கத்தை நிவர்த்தித்துக்கொள்ளும்படியான துவா வொன்று போதித்தார்கள். நாயனே! நான் உன்னிடம் நிகழ் காலத்திற்கும் எதிர் காலத்திற்கு மாகவேண்டி நன்மையைக் கோருகின்றேன். நான் அதை அறிகிறேனுகிலும் சரி அல்லது அறியாமலிருப்பினும் சரியே, இதைப்போலவே, நிகழ்காலத்திற்காக வேண்டியும், எதிர் காலத்திற்காகவும் கெடுதிகளை விட்டும் கார்மானத்தைக் கோருகின்றேன். நான் அதை அறிவேனுகிலும் சரி அல்லது அறியாமலிருப்பினும் சரியே. நான் உன்னிடத்தில் சுவர்க்கத்திற்காகவும், சுவர்க்கத்திற் கருகிலாக்கி வைக்கும் வஸ்துக்காகவும் கோருகின்றேன். அது சொல்லாய் இருப்பினும் சரி அல்லது செயலாய் இருப்பினும் சரியே, இன்னும் இதே விதமாக நான் நரகத்தை விட்டும் நரகத்திற்கு எற்றி வைக்கும்படியான வஸ்துவினின்றும் உன்னிடத்து கார்மானத்தைக் கோருகின்றேன். அது சொல்லாயினும் சரி அல்லது செயலாயினும் சரி. நான் உன்னிடம் உன்னுடைய தீர்க்க தரிசியாகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கோரியிருந்தபடியே நன்மையைக் கோருகின்றேன். இன்னும் நான் உன்னிடத்தில் உன்னுடைய தீர்க்க தரிசியும் அடியாருமாகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எந்த வஸ்துவை விட்டும் கார்மானத்தை தேடினூர்களோ அதே வஸ்துவை விட்டும் கார்மானத்தைத் தேடிக்கொள்ளுகிறேன். இன்னும் நான் உன்னிடத்தில் கோரிக்கொள்வது யாதெனில் எந்த விஷயத்திற்காக வேண்டி நீ எனக்குக் கட்டளையிடுகிறுயோ அதன் முடிவை ஓ! எல்லோரைக்காட்டிலும்

பெரிய இரக்கமுடையவனே! உன்னுடைய தயாபாத்தின் கீழ் நன்மை யாக்கி வைப்பாயாக!

### ஸ்திரீகளுக்குப் பையத்து கோடுத்தல்.

ஹஸரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள். "ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பையத்துக் கொடுக்கும் சமயங்களில் என்றைக்காகிலும் ஸ்திரிகள் மீது அவர்களின் திருக்கரங்கள் பட்டிருக்கவில்லை. பையத்து கொடுப்பதற்கு முன்னமேயே ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பையத்து கொடுக்கப்போகும் பெண்பிள்ளையுடன் சம்பாஷிப்பதினின்றுமே அவரை யறிந்துகொண்டு, "நான் உம்மைச் சம்பாஷணையின் மூலமாகவே பையத்தாக்கிக் கொண்டேன்" என்று மொழிவார்கள்.

### பில்லி சூனியத்தைப்பற்றிய விபரம்.

ஹஸ்ரத் ஆயிஷாநாயகி யவர்கள் மொழிகிறார்கள் "ஒரு தடவை நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள்பேரில் ஒருவர் பில்லி சூனியம் செய்து விட்டதன் பயனாக, ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தாங்கள் செய்யாத யாதொரு காரியத்தைச் செய்துவிட்டதாக கருதி வந்தார்கள். ஒரு தடவை (அச்சந்தர்ப்பத்தில்) ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னிடத்திலிருந்து வருகையில் அவர்கள் பல தடவைகளிலும் துவா கேட்டார்கள். பின்னர் அவர்கள், "ஆயிஷாவே! நான் அல்லாஹுத் தஆலாவிடத்தில் எதொன்றைக் கேட்டேனோ அதைப்பற்றி அவன் இன்று எனக்குப் பதில் கொடுத்து விட்டான் என்ற தகவல் உமக்குத் தெரியுமா? அதாவது என்னுடைய சொப்பனத்தில் இரண்டு பேர்கள் வந்தனர். அவர்களில் ஒருவர் என் தலை மாட்டிற் கருகிலும் மற்றொருவர் கால்மாட்டிற் கருகிலும் உட்கார்ந்துகொண்டு (தங்களுக்கிடை ஒருவருக்கொருவர்) "இவருக்கு(என்னைச் சுட்டிக்காட்டி) ஏற்பட்டிருக்கும் வியாதி எது? எனக் கேட்டபோது மற்றொருவர் இவர்கள்பேரில் சூன்னியம் செய்யப்பட்டிருக்கிறது என்றார். அதன்பேரில் அவர், யாரால் செய்யப்பட்டது? எனக்கேட்க, அவர் லுபைத்பின் ஆஸிம் என்னும் யூதனால் செய்யப்பட்டது' என்றார். அப்பால் எந்த வஸ்துக்களைக்கொண்டு செய்யப்பட்டது? என அவர்களில் ஒருவர் கேட்டபோது, ஒரு சீப்பு, தலைமயிர், கஜூர்குலை இம்மூன்று வஸ்

துக்களைக்கொண்டு செய்யப்பட்டது. அவை 'யாதம் ஸர்வான்' கிணற்றில் கிடக்கின்றன என பதிலளித்தார் என்று விவரித்தார்கள். அப்பால் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களுடைய ஸஹாபாக்களை அக்கிணற்றிற்கு அனுப்பி அதிலுள்ள அம்மூன்று வஸ்துக்களையும் வெளியிலெடுத்து எறிய வைத்தார்கள். மேலும் அக்கிணற்று நீர் மருதாணியைப்போல் அவ்வளவு சிவப்பு நிறங் கொண்டிருந்தது.

## ஆயிஷா நாயகியவர்கள் சண்டைகளில் சம்பந்தப்படுதல்.

ஹஸ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது. "நான் ஆயிஷா நாயகி யவர்களையும் உம்முஸல்மா (என்னுடைய தாயார்) வையும் உஹதுடைய சண்டையில் கண்டிருக்கிறேன். அவர்கள் தங்கள் சல்லடத்தின் ஓரங்களைத் தூக்கி விட்டுக்கொண்டு நீர் துருத்திகள் நிறைய தண்ணீர் மொண்டு காயமடைந்தோருக்கு குடிப்பாட்டிக் கொண்டிருந்தனர். அகழ்ச் சண்டையில் ஆயிஷா நாயகி யவர்கள் ஒரு கோட்டையில் அடைக்கலம் புகுந்திருந்தனர் அப்போது அவர்களுடன் 'ஸஅத்பின் முஆஸ்' உடைய தாயாரவர்களும் இருந்து வந்தார்கள். ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றுகிறார்கள். "நான் கோட்டையைவிட்டும் வெளியில் உலாவிக்கொண்டிருக்கையில் எனக்குப் பின்னால் ஒருவர் வருவதாக காலோசைக் கேட்டது. திரும்பிப் பார்த்தபோது 'ஸஅத்'ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தம் கையில் யுத்தாயுத்தத்தைப் பற்றிக்கொண்டு பெருங்கொந்தளிப்போடு முன்னோக்கிச் செல்லுவதையும் அப்போது அவர்கள் சில பாடல்களைப் படித்துக்கொண்டு போவதையும் நான் கண்டேன். அப்பாடல்களின் பொருள் யாதெனில், "சண்டையில் இன்னொருவனும் கலந்துகொள்ளுமளவில் சற்று தாமதியுங்கள். நேரம் வந்துவிடுமாகில் மரணத்திற்குப் பயப்படுவானேன்?" என்பதே.

'ஸஅத்' ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய தாயார், தம் மகனைக் கண்டதும் "மகனே! துரிதமாகச் செல்லுவதில் தாமதம் செய்யாதே" என்று கூவினார்கள். 'ஸஅத்' ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அணிந்திருந்த கவசமானது மிகவும் சிறிதாக விருந்தமையால் அவர்களுடைய இரண்டுகைகளும் கவசமின்றியிருந்தன. அதைக் கண்ட ஆயிஷாநாயகியவர்கள், 'ஸஅத்' ரலியல்லாஹு அன்ஹு

அவர்களுடைய தாயாரை நோக்கி, "அந்தோ! 'ஸஅத்' அவர்களுடைய கவசம் நீளமாக இருந்திருக்கப்படாதா?" என்று மொழிந்தார்கள்.

'பனுகரீதா உடைய சண்டையின்போதும் ஆயிஷா நாயகியவர்கள் அச்சண்டைக்குப்போயிருந்தார்கள். அவர்கள் அச்சண்டையில் ஒரு ஸ்திரீயினுடைய நடவடிக்கையைப்பற்றி மிகவும் வியப்படைந்து பேசுவார்கள். அதாவது ஒரு ஸ்திரீ கோட்டைமேலிருந்து ஒருகல்லை உருட்டிவிட்டு முஸ்லிம் ஒருவரைக்கொன்ற குற்றத்திற்காக கொல்லப்பட்டாள். ஆயிஷா நாயகியவர்கள் மொழிகிறார்கள். "ஹஸ்ரத் ஸஅத் பின் முஆஸ்" அவர்களுடைய தீர்மானத்திற்கிணங்க இச்சண்டையில் 400-பேர்கள் கொல்லப்பட்டனர். ஒருஸ்திரிதன் பெயரும் அத்தகைய மரணதண்டனைக்குட்பட்டவர்களின் ஜாப்தாவில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது என்ற செய்தி அவளுக்கு ஏற்கனவே தெரிந்திருந்தது. குற்றவாளிகள் ஒவ்வொருவராக அழைக்கப்பட்டு கொல்லப்பட்டனர். அந்தஸ்திரீயோவெனில், சிறிதும் கவலையின்றி என்னோடு சம்பாஷித்துக்கொண்டிருந்தாள். அவளுடைய ஒவ்வொரு வார்த்தையும்புன்சிரிப்புடனேயே பேசப்பட்டு வந்தது. இவளுடைய தண்டனையின் முறை வந்தபோது திடீரென இவளுடைய பெயர் கூறப்பட்டது. என்னோடு பேசிக்கொண்டிருந்த அவள் எழுந்து நின்றாள். நான், "நீர் எங்கே போகிறீர்?" எனக் கேட்டபோது, அவள் "நான் செய்துள்ள குற்றத்திற்குரிய தண்டனையை அனுபவிக்கப்போகின்றேன்" என்று கூறி பெரும் மகிழ்ச்சியுடனேயே சென்று தண்டனைபெறவேண்டிய ஸ்தலத்தில், ஓங்கினவாளின்கீழ் தன் தலையை குனிந்துக்கொண்டாள்.

'பனீமுஸ்தலக்' சண்டையிலும் ஆயிஷா நாயகியவர்கள் இருந்திருக்கிறார்கள். அச்சண்டை ⅕-வது ஹிஜிரி 'ஷஅபான்' மாதத்தில் நடந்தேறியது. இந்த சண்டையிலிருந்து திரும்பிப்போகும் சமயத்திலேயே வீண்பழிக்குரிய வருந்தத்தக்க சம்பவமொன்று சம்பவித்துள்ளது.

## ஆயிஷா நாயகியின் திருமொழிகள்.

'ஷைகீன்' ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றினார்கள். "ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வபாத்தடைந்த சமயம் என்னிடம் கொஞ்சம்போன்ற வாற்கோதுமையைத்தவிர வேறொன்றும்

சாப்பாட்டிற்கிருந்திருக்கவில்லை. அதுவே நீண்டகாலம் வரையில் என் சாப்பாட்டிற்காகவேண்டி பயன்பட்டுவந்தது. அப்பால் அது குறைய வில்லை. ஒருநாள் நான் தற்செயலாக அதை அளந்து பார்த்ததிலிருந்து அது குறைய ஆரம்பித்தது.

ஆயிஷா நாயகியவர்கள் மொழிகிறார்கள். "நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், படுத்துக்கொள்ளும்போது தங்களது வலது கையை தங்களது திவ்விய கன்னத்தின்கீழாக வைத்துக்கொள்வார்கள். இன்னும் அவர்கள் படுக்கைக்குப்போகும் சமயம் நல்லதும் சரியானதுமான துவாக்களை இறைவனுடைய சந்நிதானத்தில் கேட்பது வழக்கம். பெருமானவர்கள் கேட்டுவந்த துவாக்களின் போக்கையும் தாழ்மையும் கவனிக்குங்கால், அவர்கள் அந்த துவாவை கேட்கும் இரவே உலகத்தைவிட்டும் பிரியப்போவதாக நினைக்க நேரிடும்.

ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றியிருக்கிறார்கள். "ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எங்களுடன் சம்பாஷித்துக்கொண்டிருப்பார்களாயினும் தொழுகைநேரம் நெருங்கிவிடுமாகில் அவர்களுக்கேற்படும் நிலைமையானது அவர்கள் எங்களை அறியமாட்டார்கள்" என்று சொல்லும்படியாய் விடும். தொழுகை நேரத்தில் அவர்கள் எல்லாவிதத்திலும் ஆண்டவனுடைய வணக்கத்திலேயே அமர்ந்துகொள்வார்கள்.

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது. ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள். "எவனொருவன் ஆண்டவனுடைய இபாபத்தைமேற்கொண்டபின்னர் களைத்துப்போய் அதை விட்டுவிடுவானோ அவன்மீது ஆண்டவன் மிகவும் கோபமடைகிறான். நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வரிசைகளைப்பற்றி கூறிவருவதற்கிடையே ஆயிஷா நாயகியவர்கள் மொழிவது யாதெனில், "ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களுடைய 'நப்ஸ்' அதாவது இச்சைக்காகவேண்டி என்றைக்கும் அல்லது எவரிடத்தும் பழிக்குப் பழிவாங்க உடன்பட்டிருக்கவில்லை. எனினும் எவனொருவன் ஆண்டவனுடைய கட்டளைகளை அவமதிப்பானோ அவனிடத்து பழிக்குப் பழிவாங்காது போகமாட்டார்கள்."

ஆயிஷா நாயகியவர்கள் உபதேசிக்கிறார்கள், "10-விதமான விஷயங்கள் உன்னத நல்லொழுக்கங்களுக்குரிய முக்கியாம்சங்களாகும்.

எவரொருவரில் இந்த அம்சங்கள் அமைந்திருக்குமோ அவரை நல்லொழுக்கமுடையவரென கருதுங்கள். அந்த அம்சங்களாவன:— (1) உண்மைபேசுதல், (2) யதார்த்தம் அதாவது ஜனங்களோடு எக்காரியத்திலும் நேர்மையாகவே நடந்துகொள்ளுதல், (3) வேண்டுவோரின் வேண்டுதலை தடைசெய்யாதிருத்தல், (4) நன்றியின் பிரதிபலனை நன்றியைக்கொண்டே நிறைவேற்றிவைத்தல், (5) பரோபகாரம், (6) அமாநிதத்தைப் பரிபாலித்தல், (7) அண்டைவீட்டாரை ஆதரித்தல் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவுளம்பற்றினார்கள். "உங்களுக்கு எல்லோரைக்காட்டிலும் அதிக அருகாமையில் வசித்துவரும் அண்டைவீட்டார் உங்கள் ஆதரவுக்கு அதிக உரிமை வாய்ந்தவர்களாவர். (8) தோழர்களின் உபசாரத்திற்காகவும், அவர்களின் சகாயத்திற்காகவும் எண்ணம் பாராட்டுதல், (9) விருந்தினர்களுக்கு நல்லுபசாரம்செய்தல், (10) நாணத்தை கடைபிடித்தல் (வெட்கமே யாவற்றிற்கும் அஸ்திவாரப்படையாகும்) 'ஸஅத்பின் ஹஷாம்' ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது. "ஒரு நாள் நான் ஆயிஷா நாயகியவர்களுடைய சமுகத்திற்குச் சென்று ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய திவ்விய ஒழுக்கங்கள் சம்பந்தமாய் வினவியதற்கு அவர்கள் "ஸஅதே! நீங்கள் குர்ஆன் ஷரீபு ஓதுவதில்லையா?" எனக் கேட்க, நான் "ஓதுகிறேன்" என்று சொன்னேன். அப்போது ஆயிஷா நாயகியவர்கள், "அப்படியாயின், போதுமானது. ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய அரிய ஒழுக்கங்களுக்குத் திருக்குர்ஆனே அத்தாட்சியாகும். திருக்குர்ஆன்தானே அவர்களுக்கு மரியாதை கற்பித்துவந்தது என்பதற்கேற்ப. உஹுதுடைய சண்டையில் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய திருப்பற்கள் ஷஹீதாய்விட்டன. நெற்றியின்பேரில் ஏற்பட்ட காயத்தால் முகத்தின்பேரில் இரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது. அப்போது ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இரத்தத்தைத் துடைத்துக்கொண்டே "தம்முடைய நபியின் முகத்தை இரத்தத்தைக்கொண்டு வர்ணிக்கவைத்த சமூகத்தாருக்கு நன்மைஏற்படுவதெப்படி? அந்த நபியோ அவர்களைதம் நாயனிடத்திற்கே அழைக்கிறார்" என்று திருவுளம்பற்றினார்கள்.

ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மேற்கூறியவாறு மொழிந்தவுடனேயே, திருக்குருஆன் ஸலஸலக என்னும்

ஆயத்து இறங்கிற்று. (அருத்தம், அவர்களை மன்னிக்கவோ அல்லது அவர்கள் அநீதத்தின்பேரிலிருக்கிறார்களென அவர்களுக்கு வேதனையுண்டாக்கவோ உமக்கு சற்றும் அதிகாரமில்லை)

ஆயிஷா நாயகியவர்கள், திருவுளம்பற்றுகிறார்கள். "ஒருதடவை நான் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சமுகத்தில் "அல்லாவுடைய ரசூலே! தாங்கள் தலையணையை போட்டுக்கொண்டு சாப்பிட்டால் சுகமாயிருக்குமே" என முறையிட்டபோது ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்களுடைய (நெற்றி பூமிக்கு ஒட்டும்படியான அளவுக்கு) குனியவைத்து, "நான் அடியான் உண்பதைப்போல் உண்பேன். அடியான் உட்காருவதைப் போல் உட்காருவேன், என்று மொழிந்தார்கள். ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றுகிறார்கள். "ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு பொய்யே எல்லாவற்றிலும் அதிக வெறுக்கத்தக்க விஷயமாயிருந்தது. யாதொரு ஸஹாபி, பெருமானவர்களிடம் பொய்பேசியதாக அவர்களுக்குப் பட்டுவிடுமாகில், பொய்பேசியவர் தவ்பாச் செய்துகொள்ளாதவரையில், ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அச்சஹாபியுடன் சமாஸமாகப் பழகிக்கொள்ளமாட்டார்கள்.

மக்காமுகர்ரமாவில் விகடத்தொழில் செய்யக்கூடிய ஒருஸ்திரீ இருந்துவந்தாள், அவள் தனது விகடத்தைக்காட்டி ஜனங்களுக்கு உற்சாகத்தையுண்டாக்கி வருவது வழக்கம். அத்தகைய மற்றோர் ஸ்திரீ மதீனாவிலும் வசித்துவந்தாள். தற்செயலாக மக்கத்திலுள்ள அந்த ஸ்திரீ மதீனாவுக்குவர நேரிட்டபோது மதீனாவிலுள்ள தனது சுயத்தொழில் கொண்டவளிடமே போய்த்தங்கினாள். அப்பால் மக்கத்திலிருந்துவந்தவள். ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களிடத்திற்குச் சென்று தன்னுடைய விகடவார்த்தைகளைக்கூறி அவர்களை (ஆயிஷாநாயகியை) சிரிக்கவைத்தாள். பின்னர், ஆயிஷா நாயகியவர்கள் அவளை நோக்கி "நீ எங்கே இறங்கியிருக்கிறாய்" என வினவியபோது, அவள்தான் இறங்கியிருக்கும் ஜாகையை தெரிவித்தாள். அதைக்கேட்ட ஆயிஷா நாயகியவர்கள் "அல்லாவும் அவனுடைய ரசூலும் (அதாவது ஆத்துமாக்கள் கூட்டங்கூட்டமாக ஒன்றுபட்டிருக்கின்றன. ஆதியில் ஒருவரையொருவர் சந்தித்துக்கொள்பவர்களே, உலகத்திலும் வந்து ஒரு

வரையொருவர் நேசித்துக்கொள்ளுகிறார்கள். அங்கு சந்தித்துக்கொள்ளாதவர்கள் உலகத்திலும் வேறுப்பட்டே இருக்கின்றனர். இந்த ஹதீதானது தத்துவ ஞானசம்பந்தமான பல முக்கிய அம்சங்களை உணர்த்துவதாகும்.

ஹஸ்ரத் மஸ்ரூக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது. "நான் ஒருதடவை ஆயிஷா நாயகியவர்களிடம் போயிருந்தபோது அவர் "இன்னுனுடைய நிலைமை யென்ன? ஆண்டவனுடைய தீமொழி அவன்பேரில் வரக்கடவது!" என விசாரித்தபோது நான் "அவனே இறந்துபோனான்" என்று சொன்னேன். பின்னர் ஆயிஷா நாயகியவர்கள் "ஆண்டவன் அவன்பேரில் கிருபை செய்வானாக!" என்று கூறினார்கள். அதைக்கேட்ட நான் ஆயிஷா நாயகியவர்களிடத்தில் (முதலில் தீமொழியும் அப்புறம் கிருபையும்) என்று சொன்னதற்கு காரணம் யாது எனக் கேட்டேன். அப்போது ஆயிஷா நாயகியவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், இறந்தவர்களைப்பற்றி (லஅனத்) (தீமொழி) செய்யப்படாதென திருவுளப்பற்றினார்கள். (இதனாலேயே ஹுஸேன் றலியல்லாஹு அன்ஹு உடைய கொலைபாதகன் பேரிலும் 'லஅனத்' செய்வதில் எத்தகைய நன்மையுங் கிடையாது) என்றார்கள்.

ஒருவர் ஆயிஷா நாயகியவர்களிடஞ் சென்று "மனிதன் எப்பொழுது கெட்டவனாகிறான். அதாவது ஒருவன் கெட்டுப்போனான் என அறிவது எப்படி?" என வினவியபோது அவர்கள் "அவன் நான் நல்லவனாகிவிட்டேன், என்று தான் தானே சந்தேகிக்கத் தொடங்குவானாகில், அதுவே அதற்கு அடையாளம். இதனாலேயே வல்ல இறைவன் திருகுரு ஆனில் தங்களுடைய ஸத்காக்களை (தியாகங்களை) நன்றிகளைச் செய்தும் ஜனங்களுக்குக் கஷ்டத்தை யுண்டாக்கியும், சேதப்படுத்தாதீர்கள் எனக் கூறியுள்ளான்" என்று மொழிந்தார்கள்.

(ஸத்கா தர்மம் இவற்றைக் கைக்கொள்ளல் தனது அரியவழக்கமென எண்ணுபவனே நன்றிசெய்யத் தலைப்படுகிறான்.)

ஒரு ஸ்திரி ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்களிடம்போய், "உம்முல் மூமினீன்' என்மனம்மிகவும் கடினமுள்ளதாகிவிட்டது. அதற்கு என்ன செய்யலாம்?" என வினவியபோது ஆயிஷா நாயகியவர்கள்

"நீ உன்னுடைய மரணத்தை அதிகமாய் நினைத்து வந்தால் உன்மனம் மிகவும் மிருதுவாய்விடும்" என்று மொழிந்தார்கள். அந்த ஸ்திரி அவ் வண்ணமே செய்யத் தொடங்கியதிலிருந்து அவள் மனம் மிருதுவாகி விட்டது. அப்பால் அவள் ஆயிஷாநாயகி யவர்களிடத்தில் வந்து அவர்களின் உபதேசத்திற்காக அவர்களுக்கு நன்றி பாராட்டினாள்.

'ஸஹ்ஹாக் பின் சுப்யான்' என்பவர் மிகவும் அவலக்ஷணமான தோற்ற முள்ளவர். அன்னார் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பையத்துக்காக வேண்டி ஆஜரான சமயம் ஆயிஷா நாயகியவர்களும் ரசூலுல்லாஹி ஸல்லல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்திருந்தார்கள். (அதுகா றும் கோஷா உத்தரவு ஏற்பட்டிருந்ததில்லை.) பையத் முடிந்ததும் 'ஸஹ்ஹாக் இப்னு சுப்யான்' ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நோக்கி "ரசூலுல்லாவே! என்னிடம் இரண்டு ஸ்திரிகள் இச்சிவப்பான ஸ்திரியைக்காட்டிலும் அதிக லக்ஷணமுடைய வர்களா யிருக்கின்றனர். தாங்கள் நிக்காஹ் செய்துகொள்வதா யிருந்தால் நான் அவ்விரண்டி லொருவரைத் தாங்களுக்காகவேண்டி அனுப்பி வைக்கிறேன்" என்று கூறினார்.

அதைக் கேட்ட ஆயிஷா நாயகியவர்கள் அவரை நோக்கி, "உங்க ளுடைய ஸ்திரிகள் அதிக லக்ஷணமுடையவர்களா? அல்லது நீங்கள் அவர்களைக் காட்டிலும் அதிக அழகுள்ளவர்களா?" எனக் கேட்ட போது 'ஸஹ்ஹாக்' "நானே அவர்களைக்காட்டிலும் அதிக அழகுள்ள வனாவேன்" என்றார். ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அதைக்கேட்டதும் மிகவும் சிரித்தார்கள். 'ஸஹ்ஹாக்' தம்முடைய அவலக்ஷணத்தைப் பாராட்டாமலும் தம்முடைய தோற்ற மே நல்லது என்கிறாரே என்பது ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுக்கு சிரிப்பையுண்டாக்கியது. இந்த ரிவாயத்திலிரு ந்து தெரியவருவது யாதெனில் குறைந்த புத்தியுள்ளவர்களின் வார்த் தைகளைக்கேட்டு வருத்தமடையலாகாது. ஏனெனில், ஆயிஷாநாயகி யவர்கள் எந்த புத்திமானாவது இப்படி கூறியிருக்கும்பக்ஷத்தில் கட் டாயம் வருந்தியிருப்பார்கள்.

### வறுமையின் நிலைமை.

நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும், அவர்க ளது குடும்பத்தார்களும் உலக வருமானமின்றி கஷ்டத்தை யடைந்

திருக்கவில்லை என்பதற்கு ஏற்கனவே எண்ணிறந்த ரிவாயத்துகள் கூறப்பட்டுப் போயின. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்கள் சதா ஜெயபேரிகையையே அடைந்து வந்தவர்கள். அவர்கள் தங்களுடைய ஆதிக்கத்தின்கீழ் சண்டைக்குரிய சேனைகளை யும் வைத்து நடத்திவந்தவர்களே! இத்தகைய சேனாதிபதியவர்களிடத் திற்கு விரோதிகளினின்றும் கைப்பற்றப்பட்டுவரும் பொருளுக்கும் ஓரளவிருந்திருக்கவில்லை. ஆனால் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோ அப்பொருளைக்கொண்டு சதா ஏழை, அநாதை களையே ஆதரித்து வருவார்கள். 'மலகுல் ஜிபால்' ரசூலுல்லாஹி ஸல் லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சமுகத்தில் பொன், வெள்ளி பருவதங்கள் வேண்டுமாவெனக் கேட்கவந்தபோதும் ஹஸ்ரத் ஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், அவை தங்களுக்கு வேண்டிய தில்லை என்பதற்கு வெறுப்புக் காட்டினார்கள். பசி பட்டினியின் நிலை மையே பெருமானவர்களுக்கு பொருத்தமாயிருந்தது. எளிய நிலை மையில் அவர்கள் வருந்தி வந்தார்களாயினும் அவர்களுடைய புனித இருதயத்தில் எல்லாம் வல்ல நாயனின் மாட்சிமையும், மேன்மையும் செவ்வனே குடிகொண்டிருந்தன. சுப்ஹானல்லா! நபிகத்திலகமவர்கள், தாங்கள் செல்வ நிலைமையை யடைந்து கியாமத்நாளில் தங்களுடைய உம்மத்தார்களுக்குமுன் வெட்கமடைவதா என்பதை உணர்ந்துக்கொ ண்டார்கள். அரசரிடம் கியாமத்நாளில் "நீ ஏழைப் பட்டினியானவர் களை ஏன்கவனிக்கவில்லை. அவர்களுக்கு அன்னதானமளித்ததில் அச ட்டையாயிருந்ததற்குக் காரணம் என்ன? நீ உன்னுடைய தோழர்களில் சுகானுபவங்களை அனுபவித்துக்கொண்டிருக்க, ஏழை அநாதைகள் உன்னுடைய மாளிகையின் சுவர்களையொட்டி வெளித்தாழ்வாரங்களில் பட்டினியால் மடிந்தார்களே! நீயோ பட்டுஜருகை சம்பந்தமான விலை யுயர்ந்த ஆடைகளை அணிந்தாய். உன்னுடைய பிரஜைகளில் சிலர் தம் முடைய மானஸ்தானத்தை மறைக்க சாக்குத்துண்டும் கிடைக்காது தவித்தனரே நீ அவர்களை லக்ஷியம்செய்ய வில்லையே. இன்று நீதிவிசா ரணைக்குரிய நாளாகும். இன்று நம்முடைய மகிமையும் வல்லமையும் வெளியாகும். இன்றையதினம் சிலருடன் கடைபிடிக்கப்படும் நீதியி லிருந்து மிகைத்தவர்கள், தங்களுக்குக் கீழ்ப்படிந்தோர்மீது கொடுமை யநீதங்களைச்செய்து ஆறுதலுடன் இருக்கமுடியாதென்பதும் விளங்கிப் போம்' என நிகழப்போகும் நிகழ்ச்சியானதும் நம்பெருமானவர்களு

க்கு நினைப்பூட்டிக்கொண்டிருந்தது. இதே எண்ணங்களின் பயனாக வே ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பசிபட்டினியாக இருக்கவும் சம்மதித்துக் கொள்வார்கள். அவர்களுடைய குடும்பத்தினர்கள் பெரும் மகிழ்ச்சியுடன் பசியின் கொடுமைகளைச் சகித்துக்கொள்வார்கள். முஹாஜிரீன்களுக்கிடையும் அன்ஸார்களிலும், அநேகர் பசிகளை சகித்துக்கொண்டிருக்கிறார்களென்பதும் அநேகருக்கு ஒருவேளை சாப்பாடுங் கிடைப்பது கஷ்டமென்பதும் நம்முடைய கூட்டத்தார்களில் ஏழைகளே மிகுதமா யிருப்பார்களென்பதும் இஸ்லாம் ஏழைகளினின்றுமே உற்பத்தியானது. ஏழைகளிலேயே நிலைநிற்பது. ஏழைகளைக்கொண்டே முடிவடைவது என்பதும் அவர்கள் கொண்டுள்ள முக்கிய உணர்ச்சியாகும்.

எனவே, ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களோ அல்லது அவர்களுடைய குடும்பத்தினர்களோ எவ்வித பொருளை அடைவார்களோ அதை உடனுக்குடன் ஏழை அநாதைகளுக்கிடை தானஞ்செய்துவிடுவார்கள். தங்கள் வீட்டில் தாங்கள் பட்டினியாக இருந்துகொள்வதே அவர்களது உன்னதப்பதவியின் லக்ஷணமாக இருந்து வந்துள்ளது. அழிந்துபோகும் உலகத்தினுடைய சுகானுபவங்கள் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களினதும் அவர்களது புனித வீட்டினர்களினதும் பார்வையில் மிகவும் கேவலமாயிருந்தன. இரண்டு நாள் வாழ்வை மிக்க செல்வாக்குடனேயே கழித்துவைத்தல், நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய தீர்க்கதரிசனத்தின் பெருமைக்கு முற்றிலும் மாறாயிருந்து வந்தது. ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றுகிறார்கள். எங்களுடைய வீட்டில் தீமூட்டவும் அவசியமேற்படாவண்ணம் சில சமயங்களில் ஒவ்வொரு மாதகாலமும் கழிந்துபோவதுண்டு. கஜூர் தண்ணீர் இவ்விரண்டைத் தவிர எங்களுக்கு வேறு யாதொரு ஆகாரமும் புசிப்பாகாது. எப்போதாகிலும் யாராவது கொஞ்சம் இறைச்சியை வெகுமதியாக எங்களுக்கு அனுப்பிவைப்பார்களாகில் நாம் அதைப் புசித்துக்கொள்வோம்.

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது. ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடையவீட்டினர் என்றைக்காகிலும் இரண்டுநாள் தொடர்ச்சியாக கோதுமை ரொட்டியை வயிறாற புசித்திருக்கவில்லை. ஒருநாள் ரொட்டி கிடைக்குமாயின் மறுநாள்

கஜூரும் தண்ணீருமே புசிக்கநேரிடும். ஆனால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வபாத்து நாள் வரையில் நாங்கள் கஜூர்களைக்கொண்டும் தண்ணீரைக்கொண்டும் பசியாற்றிக்கொள்ளவில்லை.

அல்லாஹு அக்பர்! (லௌலாக லமாகலக்துல் அப்லாக்) வானமும் பூமியும் எவர்களுக்காக வேண்டி படைக்கப்பட்டதோ என்னும் திருவசனத்தில்கண்ட கிரீடம் எவர்களுக்காகவேண்டி வாய்க்கப் பெற்றதோ, 'காதமுன் னபியீன் என்ற அரியபட்டம் எவர்களுக்கு கிடைக்கப்பெற்றதோ, இன்னும் எவர்களுடைய ஸஹாபாக்களும் நண்பர்களும் அறபிய பாதுஷாக்களைக் காட்டிலும் அதிக செல்வம் படைத்திருந்தனரோ! அவர்களுடைய உலகவாழ்க்கை இவ்வளவு பரிதபிக்கத்தக்க நிலைமையில் இருந்திருத்தல் எவ்வளவு குறிப்பிடத்தக்க விஷயமாகும்.

ஹஸ்ரத் 'நொஅமானபின் பஷீர்' றலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்:-''ஓ ஜனங்களே! நீங்கள் எதொன்றைத் தின்னவேண்டுமென விரும்புகிறீர்களோ அது உங்களுக்குக் கிடைத்துப் போகிறது. ஆனால், நான் உங்களுடைய நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடத்தில் வயிறு நிறைய சாப்பிடத் தக்க அளவில் கெட்டுப்போன கஜூர்களாயினும் இருக்கக் கண்டதில்லை.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றியிருக்கிறார்கள். ''ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தாமே குறைவாகப் புசிப்பதற்கேற்பவே. குறைவாய் புசிப்பவர்களையும் ஆசிப்பார்கள். ஒரு தடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஒரு அடிமையை விலைக்கு வாங்க விரும்பியபோது அந்த அடிமைக்கு முன் சில கஜூர்களை வைத்து புசிக்கச்சொன்னபோது, அவன் எண்ணிறந்த கஜூர்களைத் தின்றுவிட்டான், அதைக் கண்ட ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், ''அதிகமாய் புசிப்பது விர்த்திக்காது'' என மொழிந்து, அந்த அடிமையைத் தமக்கு வேண்டாமெனத் திருப்பி அனுப்பிவிட்டார்கள்.

ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது. ஒருநாள் றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னிடம் வந்தபோது, 'உம்மிடம் ஏதேனுமிருந்தால் சாப்பிடக் கொண்டுவாரும் என்றார்கள், நான் ''என்னிடம் ஒன்றுமில்லையே, என முறையிட்டேன். அப்போது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ''நான் இந்த நேரமுதல் நோன்பு வைத்தலுக்குரிய நிய்

யத்தை கடை பிடிக்கிறேன்'' என மொழிந்தார்கள். பின்னர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மறுநாள் என்னிடம் வந்தபோது நான் அல்லாவுடைய ரசூலே! ஒருவர் என்னிடம் 'மலீதாஎன்னும் தின்பண்டத்தைக் காணிக்கையாக அனுப்பியிருக்கிறார்' என்று தெரிவித்தேன் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் ''அதைக்கொண்டு வாருங்கள்என்று கட்டளையிடவே நான் கொண்டுபோனேன் பெருமானவர்கள் அதைவாங்கி புசித்த பின்னர்நான் ''காலையில் நோன்பு பிடித்திருந்தேன்'' என்று திருவுளம்பற்றினார்கள். இதனின்றும், புசிப்பதற்கு யாதொன்றும் கிடைக்காதபட்சத்தில் நோன்புக்குரிய நிய்யத்தை செய்து கொள்வது ஜாயிஸாகுமென்றும்,சாப்பிடுவதற்கு ஏதேனும் கிடைத்தபோது அந்நோன்பை பூர்த்தி செய்துவைப்பதும் அல்லது கிடைத்த வஸ்துவைக்கொண்டு இப்தார் செய்து விடுவதும் நோன்பு வைத்தவரின் இஷ்டத்தைப் பொருந்தியதாகுமென்றும் தெரியவருகிறது.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது ''நானும் ஹப்ஸா ரலியல்லாஹு அன்ஹா அவர்களும் நோன்புக்கு நிய்யத்துச் செய்துகொண்டோம். தற்செயலாக எங்களுக்குச் சாப்பாடு கிடைத்தது. எங்களுக்கு அச்சமயம் பசிகடுமையாகவிருந்தது. (எத்தனை வேளையாக சாப்பாடில்லாமலிருந்ததென்பது ஆண்டவனுக்குத்தான்தெரியும்) ஆதலால் நாங்கள் அந்த சாப்பாட்டைக்கொண்டு தக்ஷணமே இப்தார் செய்துவிட்டோம். அப்பால் ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடத்தில், ''ரசூலுல்லாவே! நோன்பின் நிய்யத்தைக்கொண்டிருந்த எங்கள் இருவருக்குத் தற்செயலாக சாப்பாடு கிடைத்தது. நாங்கள் அதிக பசியாயிருந்தமையால் அதை புசித்துவிட்டோம்'' எனத்தெரிவித்தபோது, ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் நீங்கள் அதற்குபதில் நோன்பு வைக்கவேண்டும்'' என்று கூறினார்கள். (இது நபில் நோன்பைப்பற்றிய விஷயமாகும் ரமலான் நோன்புகளை முறித்தல் ஜாயஸ் ஆகமாட்டாது.)

உர்வா ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—ஆயிஷா நாயகியவர்கள் என்னிடம் கூறினார்கள் ''என் சகோதரப்பிள்ளாய்! நாம் முதல் மாதத்திய பிறையைவிட்டு இரண்டாம் மாதத்திய பிறையையும், அப்பால் மூன்றும்மாதத்திய பிறையையும், பார்க்கத்தக்க காலம் நீடித்துப் போமாயினும் ரசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வீட்டில் அதுகாறும் அடுப்பும் பற்றிவைக்கும்படியான அவசியம் ஏற்படமாட்டாது. அதைக்கேட்ட நான்

"என் தாயாரின் சகோதரியாரே! அப்படியாயின் உங்கள் காலக்ஷேபத்திற்கு வழி என்ன?" எனக் கேட்டபோது, உம்முல் மூமினீன் அவர்கள், "வேளா வேளைகளில் சில கஜூர்களும் தண்ணீரும் கிடைத்துப் போவதுண்டு. சிற்சில சமயங்களில் அன்ஸார்கள் பாலையனுப்பி வைப்பதுண்டு" என விடை பகர்ந்தார்கள். இது சம்பந்தமான ரிவாயத்து வந்திருப்பதற்கு விபரம் யாதெனில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு அண்டையில் குடியிருந்துவந்த அன்ஸார்களிடத்தில் பால் கொடுக்கும் பிராணிகளிருந்து வந்தன. அவர்கள், அப்பாலினின்றும் கொஞ்சம் நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய சமுகத்திற்கு அனுப்பி வைப்பார்களாகில் பெருமானவர்கள் அதிலிருந்துங்கூட ஸஹாபாக்களுக்குள் பகிர்ந்து விடுவார்கள் என்பதே. 'அபூதர்தா' றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—"ஆயிஷா நாயகியவர்கள் ஒட்டுப்போடப்பட்ட போர்வை யொன்றும், முரடான அங்கவஸ்திரமொன்றும் எடுத்துக்காட்டி ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய முபாரக்கான ரூஹ் (புனித ஆத்துமா) இதே இரண்டு வஸ்திரங்கள் ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களால் அணியப்பட்டிருந்த சமயம் 'மலகல் மௌத்' என்னும் வானவரால் பிரிக்கப்பட்டதென விவரித்தார்கள். நம் நபிகத்திலகம் ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களினது உலக வாழ்க்கையின் கடைசி இரவு அதாவது ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் இப்பூவுலகத்தைவிட்டும் பயணமான தருணத்தில், வீட்டின்விளக்கில் எண்ணையுங்கூட இருந்ததில்லை. ஆயிஷா நாயகியவர் அப்போது நேரிட்டுள்ள வெளிச்சத்தின் அவசியத்தைப் பாராட்டி தம்முடைய அண்டை வீட்டிலுள்ள அம்மையா ரொருவரிட மிருந்து விளக்கிற்கு எண்ணை தருவிக்க நேரிட்டது.

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்கள் திருவுளம்பற்றுகிறார்கள். ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பெரும்பாலும ஓதிவந்த துவா யாதெனில், இறைவனே! நான் ஒருநாள் பட்டினியாக இருப்பேனாக! ஒருநாள் சாப்பாடு கிடைக்க! பசியில் உனக்கு முன் நயந்து உன்னிடத்தில் கேட்டும் புசித்தும், உன்னை புகழ்ந்து பாராட்டுவேனாக!

ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் மற்றொரு விதத்தில் கேட்டுவந்த துஆ யாதெனில், "நாயனே! முஹம்மத்

ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் உடைய சந்ததியாருக்கு அவர்கள் தங்கள் அவசியத்தை நிறைவேற்றிக்கொள்ளும் விதத்தில் ஏதாவது கொஞ்சத்தை வயிற்றில் போட்டுக்கொள்ளும்படியான அளவுக்குக் கொடுப்பாயாக!'' என்பதாகும். உலக ஐசுவரியம் எத்தகையது என்பதன் உண்மையைப்பற்றி நாம் சிந்தித்தறிவோமாகில் நாம்அதன்பால் வெறுப்படையாமற் போகமாட்டோம். ஒருதடவை, ஹஸ்ரத் அப்துர் றஹ்மான் பின்ஒளப் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் வியாபாரச் சரக்குகளால் நிறப்பப்பட்ட எண்ணிறந்த ஒட்டகங்களை எமனிலிருந்து மதீனுவுக்குக் கொண்டுவந்தார்கள். எண்ணிறந்த ஒட்டகங்கள் மீது ஏராளமான வியாபாரச் சரக்கு வந்திருக்கும் பிரஸ்தாப இரைச்சல் மதீனுவாசிகளுக்குள் கிடுகிடுத்துப் போயிற்று. ஆயிஷா நாயகியவர்கள் அதைப்பற்றி விசாரித்தபோது, ஹஸ்ரத் அப்துர் றஹ்மான் பின்ஒளப் திரளான ஒட்டகங்களைக் கொண்டுவந்திருக்கிறார்களென அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. அதைக்கேட்ட ஆயிஷா நாயகியவர்கள், "அல்லாவும் அவனுடைய ரசூலும் உண்மையைக் கூறியிருக்கின்றனர்'' (அவர்கள் கூறியது பிற்காலத்தில் தெரியவரும்) என்று மொழிந்தார்கள். இச்செய்தி எப்படியோ ஹஸ்ரத் அப்துர்றஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு எட்டியது. உடனே அவர்கள் ஆயிஷா நாயகியவர்களிடம் புறப்பட்டுப்போய், "உம்முல் மூமினீன் அவர்களே! ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்னைப்பற்றி, என்ன கூறினார்கள்?'' எனக் கேட்டபோது ஆயிஷா நாயகி, "ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் நான் சுவர்க்கத்தின் புறமாய் முஹாஜிர், அன்ஸார் இவர்களினின்றும் ஏழையாயிருக்கப்பட்டவர்கள் ஓட்டமாய் ஓடிப்போய்ச் சேருகிறார்கள் என்பதையும், அவர்களுடன் செல்வந்தர் ஒருவருமில்லாமலிருப்பதையும் ஆனால் 'அப்துர்றஹ்மான் பின்ஒளப் மாத்திரமே முழங்கால்களை ஊன்றிப் போவதையும் கண்டேன் என்றார்கள்' எனக் கூறினார்கள்.

அதைக்கேட்ட ஹஸ்ரத் அப்துர் றஹ்மான் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், அதே நேரம் அந்த எல்லா ஒட்டகங்களையும் அவற்றின்மீதுள்ள சாமான்களையும் ஆண்டவன் பாதையில் தானஞ் செய்து விட்டார்கள். அவ்வொட்டகங்களைப் பராமரிப்பதற்கென விலைக்கு வாங்கப்பட்டிருந்த அடிமைகளும் விடுதலை செய்யப்

பட்டனர். ஹஸ்ரத் அப்துர் ரஹ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இவ்வாறு செய்ததற்கு காரணம் றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ஹதீதில் கண்டபடி ஏழைகளுடன் தாமும் சேர்ந்தோடி சுவர்க்கத்தையடைந்து போகலாமோ என்ற எண்ணத்தைக்கொண்டுள்ளதாகும். இமாம் கஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் இஹ்யாவுல் உலூம்; என்னும் கிதாபில் இந்த ரிவாயத்தை வரைந்திருப்பதை யொட்டி "ஓ கண்டாளனே! நீ இப்போது உன்னுடைய பொருளாசையைப்பற்றி நினை, ஹஸ்ரத் அப்துர்றஹ்மான் பின் ஔப்' அவர்கள், எவ்வளவுமேம்பாடும், தக்வாவும், தர்மசிந்தையும் வாய்ந்திருந்தவர்கள், அவர்கள் நபிகள்நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் விசேஷ ஸஹாபியாகவும் வழங்கப்பட்டுவந்தவர்கள், அவர்கள் சுவர்க்கவாசியென்ற சந்தோஷகரமும் வாய்க்கப்பெற்றவர்களன்றோ? அப்படியிருந்தும் அளவிறந்த திரவியத்தின் காரணமாய் சுவர்க்கத்தை நோக்கி ஓடமுடியாமற்போக நேரிடுமென்றும் கியாமத்துடைய மைதானங்களில் தடங்கலேற்படுமென்றும் அவர்கள்கேட்டவுடன் அதனை விட்டொழித்தார்கள். அவர்களது ஹலாலான சொத்திலிருந்தும் அவர்கள் ஏழை அநாதைகளைப் பராமரித்து வந்தார்களேயன்றித் தம்முடைய சுகானுபவத்திற்கென அவர்கள் அதை சேகரித்திருந்தது மில்லை. அவர்களுமோவெனில், இதர ஏழை ஸஹாபாக்களைப்போலவே சாதாரண ஆகாரத்தையே புசித்து வருவார்கள். சுப்ஹானல்லா! ஹஸ்ரத் அப்துர் ரஹ்மான் ரலியல்லாஹு அன்ஹு என்னும் புனித ஸஹாபியவர்களே திரவியத்தை முன்னிட்டு மேற்கூறியவாறு நடந்து கொண்டார்களென ஏற்படுகையில் அல்லும் பகலும் உலக சம்பாத்தியத்திற்காக வேண்டியும் திரவியத்தைத் தேடவேண்டுமென்ற கவலையிலும் ஜாயிஸ் நாஜாயில் (கிரமம், அதிக்கிரமம்) என்ற முறைகளையும் கவனியாது பாடுபடுபவர்களின் கதிஎன்ன ஆகுமென்பது சிந்திக்கத்தகும். றசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் அவர்களின் சுற்றத்தார்களும் திரவிய சேகரத்தினுல் ஏற்படும் பயனின்னதென்பதை நன்குணர்ந்திருந்திருந்தனர். அதன் பொருட்டே அவர்கள் சதா ஏழ்மையையே கடைபிடித்துவந்தார்கள், இதன் உண்மை அறியாதவர்களுக்கிடை கவலையின்மையே நிலைகொண்டிருக்கிறது. ஷைதான் இவர்களுடைய ஆறுதலுக்காகவேண்டி சிலசொத்துள்ள ஸஹாபாக்களினது திருஷ்டாந்தங்களையும் நினைப்பூட்டிவிடுகிறது. அந்தோ!

அந்த ஸஹாபாக்களை இவர்களுக்காக ஒப்பிடவும் முடியுமோ? அந்த புனிதஸஹாபிகள் இவர்களைப்போல் ஐசுவரியத்திற்காக அபேக்ஷைக் கொண்டும் உலகாசைகளுக்கென்றே பொருளைச் சேர்க்கவில்லை. அவர்களுடைய பொருளோவெனில், இறைவனுடைய பாதையில் செலவு செய்வதற்கென்றே சம்பாதிக்கப்பட்டு வந்தது. இவர்களோ வென்றால் தங்களுடைய சுயநலத்திற்காகத்தான் பொருளைத் தேடி வைக்கிறார்கள். (அந்தோ! என்னுடைய சமுகத்தார் இந்த அந்தரங்கத்தை அறியாமற் போனார்களே!)

ஹஸ்ரத் ஆயிஷாநாயகி யவர்கள் திருவுளம் பற்றுகிறார்கள். ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்றைக்காவது வயிறு நிறைய புசித்திருக்கவில்லை. சிற்சில சமயங்களில் நான் அவர்களுடைய பசியின் நிலைமையை யுணர்ந்து அவர்கள்பேரில் ஏற்படும் இரக்கத்தின் பயனாக அழவும் நேரிடுவதுண்டு. அநேக சந்தர்ப்பங்களில் நான் பரிதாபத்துடனேயே ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வயிற்றை என் கையால் தடவிவிட்டு "ரசூலுல்லாவே! நான் தங்களுக்காகத் தியாகமாய் போவேனாக! தாங்கள் தங்களுடைய தேகபலத்திற்காகவும் பசியின் கொடுமையைவிட்டும் தப்பித்துக் கொள்ளும்படியாகவும் அவசியமான அளவுக்காவது ஆகார மெடுத்துக்கொள்ளுங்கள்" என்று கேட்டுக்கொள்வேனாகில், ஹஸ்ரத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "ஆயிஷாவே! என்னுடைய சகோதரர்கள் அதாவது முன்னுள்ள நபிமார்கள் இப்பூவுலகின்கண் என்னைப் பார்க்கிலும் அதிகமான கஷ்ட நஷ்டங்களை யடைந்துவிட்டு அவர்கள் தங்களுடைய சிருஷ்டிகர்த்தனாகிய ஆண்டவனிடத்திற்குச் சென்றபோது அவர்களுக்குப் பெரும்பதவி கிடைத்தது. அவர்கள் பெரும் புண்ணியத்தை யடைந்தனர். அதை உத்தேசிக்கு மிடத்து, நான் இவ்வுலகத்தில் சுகத்தை அனுபவிப்பேனானால் நாளை கியாமத்தில் அந்நபிமார்களைக் காட்டிலும் கீழ்ப்பதவியை யடைய நேரிடுமோவென அஞ்சுகிறேன். ஆதலால் ஸபூர் செய்வதே உத்தமமாகும்" என்று மொழிவார்கள். ஆயிஷா நாயகியவர்கள் கூறுகிறார்கள். "ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் கடைசியாக மேற்கூறியவாறு விடைபகர்ந்த ஒரு வாரத்திற்குள் வபாத்தடைந்து விட்டார்கள்!"

ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களால் அறிவிக்கப்படுகிறது. "ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களுடைய வபாத்திற்குப்பின்னர் முதன் முதலாக ஜனங்களுக்கிடை பாவியுள்ள பித்அத் என்னும் துர்ஆச்சாரம் யாதெனில், அவர்கள் (ஜனங்கள்) வயிறு நிறைய புசிக்கத்தொடங்கினர். (இவ்வாறு செய்வதனால், அவர்களுடைய இச்சைகள் கட்டாயம் உலகாசைகளைக்கொள்ளும்.) அஸ்ஹாபெஸபா அவர்களுடைய ஆகாரம் எம்மட்டிலாயிருந்ததெனில், அவர்களுக்குத் தலைக்கு காலேஅரைக்கால் படிகொண்ட அளவுக்கு கஜூர்கள் கிடைக்கும். அதிலுள்ள கொட்டைகளை நீக்கியானபின் அவைகள் மூன்று ஆழாக்குவரையில் தேருவதும் கஷ்டம். இதைக்கொண்டே அவர்கள் நாள்முழுவதையும் கழிப்பார்கள்."

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் ஆயிஷா நாயகியவர்களுக்குத் திருவுளம்பற்றினார்கள். "ஆயிஷாவே! வீண்செலவுசெய்வதினின்றும் தப்பித்துக்கொள்ளும். ஒருநாளில்இருமுறை புசித்தல் வீண்செலவிலேயே சேர்ந்ததாகும். ஆனால் இரண்டு நாளில் ஒரு தடவை புசிப்பதோ இச்சையின்பேரில் மிகுதத்தைச் செய்ததுபோலாகும். அது மிகவும் குறைந்த ஆகாரமெனப்படும். எனவே ஒருநாளில் ஒருதடவை புசிப்பதே நடுத்தரமானது. இறைவனும் தன்னுடைய வேதத்தில் இதைப்பற்றியே சிலாக்கித்துக் கூறியுள்ளான்" என்பதே

மஸ்ரூக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது. ஆயிஷா நாயகியவர்கள் கூறினார்கள். நான் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களுடைய சமுகத்தில், "பெருமானே! தங்கள் பசியாறத் தக்கவளவில் தாங்கள் இறைவனிடம் ஆகாரத்தை என் வேண்டிக்கொள்வதில்லை" எனக் கேட்டதற்கு ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம், "ஆயிஷாவே! என்உயிரைத் தன்வசத்திலாக்கிக்கொண்ட ஆண்டவன்பேரில் சத்தியமாகச் சொல்லுகிறேன். நான் ஆண்டவனிடத்தில் திரவியத்தை மட்டும் கேட்டிருக்கும் பட்சத்தில் அவன் என்னோடு தங்கப்பருவதங்களையேநடத்தாட்டியிருப்பான். நான் எங்கேபோனாலும் அங்குள்ள பூமியில் அவை எனக்காகத் தயாராயிருந்திருக்கும்; ஆனாலோ நான் பூர்த்தியைக் கொண்டு பசியையும், ஏழ்மையைக் கொண்டு செல்வத்தையும், துக்கத்தைக் கொண்டு சந்தோஷத்தையும் அனுபவித்துக் கொள்ளுகிறேன். ஆயிஷாவே!

இவ்வுலகமானது முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்காகவும் அவருடைய சந்ததியார்களுக்காகவும் பொருந்திய தல்ல. ஆயிஷாவே! இறைவன், மேம்பாடுள்ள நபிமார்கள் உலகத்தி லுள்ள நிஷ்டூரங்களைப் பொறுமையுடன் அனுபவிக்கவேண்டுமெனவும் உலகத்தின் அருமையான வஸ்துக்களை இச்சிப்பதினின்றும் விலகி யிருக்கவேண்டுமெனவும் விரும்பியதற்கிணங்கவே, முந்தின நபிமார் களைப்போல் நானும் கொடிய கஷ்டங்களை அனுபவிக்க வேண்டுமென இறைவன் நாடுகின்றான். திருக்குர்ஆனில் வந்திருக்கிறது.

(அதாவது மேம்பாடுள்ள தீர்க்கதரிசிகளைப் போலவே நீயும் பொறுமையை அடைந்துகொள்.) எனவே, இதர ரசூல்மார்கள் துன்பங்களின் பேரில் ஸபரு (பொறுமை) செய்து கொண்டதற் கிணங்கவே, நானும் என்னால் கூடியமட்டில் ஸபரு செய்வேன். ஆனால் இறைவனுடைய அனுக்கிரகம் குன்றாமலிருக்குமாயின் நான் இக்கர்மத்தை நிறைவேற்றிவைப்பேன். இல்லையேல், என்னில் அவ் வளவு சக்திகிடையாது" என்று திருவுளம்பற்றினார்கள்.

ஹஸ்ரத் ஆயிஷாநாயகி யவர்கள் கூறுகிறார்கள். "ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் என்றைக்காவது (அவர் கள் வபாத்தடைந்து போகும் வரையில்) 3-நாள் தொடர்ச்சியாக வயிறாற புசித்தார்களென சொல்லமுடியாது. ஆனால் அவர்கள் இப் படி புசியாமற்போனார்களென்பதற்கு அவர்களுக்குச் சாப்பாடு கிடைக் காமற்போகுமோவென நினைக்கமுடியாது. நாங்கள் விரும்பியிருப்போ மாகில் வயிறாறபுசித்திருப்போம். ஆனால் முஹாஜிர்களைப் பசியாற்றி வைப்பதையே நாங்கள் பிரதானமெனக்கருதி எங்களுடைய இச்சை களை அடக்கினோம். ஒருதடவை ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு விருந்தாளி வந்தார். அப்போது பெரு மானவர்கள் வீட்டில் புசிப்பதற்குரிய எவ்வகைப் பதார்த்தமும் இருந் திருக்கவில்லை. இறைவனுடைய செயல்! அதே சமயம் அன்ஸார் கூட் டத்திலுள்ள ஒருவர் அங்கு வந்து அந்த விருந்தாளியை தம்முடைய வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போனார். போனதும் அந்த விருந் தாளிக்கு முன் சாப்பாட்டைக் கொண்டுவந்து வைத்து தாமும் அவ ருடன் சாப்பிட உட்கார்ந்தும் விளக்கு வெளிச்சம் நின்றுவிட்டது. (அதாவது அவர் தம்மனைவியிடம் விளக்கை அணைத்துப்போடும்படி யாக ஏற்கனவே சொல்லியிருந்தார்.) இந்த அன்ஸார் ரலியல்லாஹு

அன்ஹு அவர்கள் அந்த விருந்தாளியுடன் தாமும் சாப்பிடுவதைப் போல் சாப்பாட்டில் கையை வைத்து வாய்க்குள் சாப்பாட்டை அள்ளி வைக்கும் பாவனையாக நடந்துகொண்டார்கள். விருந்தாளி சாப்பிட்டு முடியும் வரையில் அவர் அவருடனிருந்தார்.

மறுநாள் காலையில் அந்த அன்ஸார் ரலியல்லாஹு அன்ஹு நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களுடைய சமுகத்தில் ஆஜரானபோது, பெருமானவர்கள் அவரை நோக்கி, "நீங்கள் நேற்றிரவு செய்தவேலை ஆண்டவனுக்கு மிகவும் பொருத்தமாயிற்று" என மொழிந்தபோது, திருக்குருஆன் (விருந்தினரை தங்களுடைய உயிரைக்காட்டிலும் பிரதானமாகக்கொண்டு தாங்களே பட்டினியாயிருந்துக்கொள்ளுகிறார்கள்) என்னும் ஆயத்து இறங்கியது.

மேற்கூறிய ஆயத்திலிருந்து ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் தங்களது பசியின் கொடுமையைப்பற்றி அன்ஸார் முஹாஜிர்களுக்கும் தெரிவிக்கமாட்டார்களென்பதும் நன்கு வெளியாகிறது. ஏனெனில், ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களுடைய வீட்டில் அச்சமயம் சாப்பிடுவதற்கு ஒன்று மிருக்கவில்லை யென்ற இரகசியம் அந்த அன்ஸாரிக்குத் தெரிந்திருக்குமாயின் அவர்கள் முதலில் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களின் சாப்பாட்டிற்கு ஆகுமான ஏற்பாடுகளையே செய்திருப்பார்.

ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வறுமையின் சம்பந்தமாக எண்ணிறந்த ரிவாயத்துக்கள் வந்திருக்கின்றன. ஆனால் இது ஆயிஷாநாயகி சம்பந்தமான சரித்திரமாகையால், இங்கு ஆயிஷா நாயகியவர்களால் கூறப்பட்டதும் அல்லது அவர்கள் சம்பந்தமாய் வந்துள்ளதுமான முக்கிய ரிவாயத்துக்களில் சில ரிவாயத்துக்களே வரையப்பட்டுள்ளன. ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வறுமையின் நிலைமையே அவர்களுடைய குடும்பத்தினர்களுடைய நிலைமையாகுமென்பதும் மறந்து போகத்தக்கதன்று. ஆதலால்தான் ஆயிஷா நாயகியவர்களும் வறுமையின் கஷ்டத்தைச் சந்தோஷத்துடன் அனுபவித்து வருவார்கள். அவர்களுடைய தேகத்தின் பேரில் ஒட்டுப்போடாத ஆடையிராது. இரண்டு நாளைக்காவது வயிறாரப் பசியாறி யிருக்கவில்லை. சுருங்கக் கூறுமிடத்து

அல்லாவுக்கும் அவனுடைய ரசூலுக்கும் இத்தகைய நிலைமையே பொருத்தமாயிருந்ததை முன்னிட்டு ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய குடும்பத்தினர்களும் அதையே கடைபிடித்திருந்தனர்.

இக்காலத்தில் பிச்சைக்காரர்களும் பிச்சையெடுத்து சிறந்த கட்டிடங்களைக் கட்டிக்கொண்டு சுகவாழ்வு பெறவேண்டுமென்றே நினைக்கிறார்கள். சில யாசகர்கள் தங்கள் யாசகத்தின் மூலமாய் பொருளைச் சேர்த்துத் தங்கள் சந்ததியார்களுக்கு விட்டுப்போயிருப்பதாயும் அவர்களின் சந்ததியார் பிற்காலத்தில் தாங்களும் சீமான்களென வழங்கப்படுவதாயும் விளங்கக் கிடக்கிறது.

## நம்பிராட்டியார்களின் ஆசாபங்கம்.

ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுக்கிடை செல்வமாய் தம்முடைய குழந்தைப்பருவத்தில் போஷிக்கப்படாமல்வந்த நம்பிராட்டியார் இருந்திருக்கவில்லை. ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைகிவசல்லம் அவர்கள் தங்களின் நற்போதனைகளைக்கொண்டு அவர்களை அநேகமாய்ச் சீர்படுத்தியிருந்தார்களாயினும் மானிட இயற்கைக்குரிய ஆசை அவர்களைவிட்டும் அறவே ஒழிந்திருக்கவில்லை. மேலும் அது, ஸ்திரிகள் ஆடவர்கள்மீது அதிகாரஞ் செலுத்தக்கூடிய காலமாகவும் இருந்துவந்தது. மதீனாவுக்கு வந்தபின்னரோ ஸ்திரிகளுடைய அதிகார இயக்கம் இன்னமும் பலங்கொண்டுவிட்டது. அன்ஸாருடைய ஸ்திரிகள் தங்கள் புருஷர்களை மிகைத்து நடக்கிறார்களென்பதையும் உணர்ந்த நம்பிராட்டியார்கள் தாங்களும் ஓரளவில் தம்போக்கை மாற்றிக்கொள்ளத் துணிகிறார்கள் பொதுவாக, குறைஷியர் தங்களுடைய ஸ்திரிகளுக்கு அன்ஸார்களுடைய ஸ்திரிகளின் தைரியத்திற்கொப்பான தைரியமடைவதற்கு இடங்கொடுத்திருக்கவில்லையாயினும் மதீனாவில் வந்த பிறகு அவர்களும் (குறைஷியர்களும்) தங்கள் ஸ்திரிகளுடைய பழக்கவழக்கங்களில் சிற்சில மாறுபாடுகளைக் காணநேரிடுகிறது.

ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய நம்பிராட்டியார்களுள் சீமான்களுடைய வீட்டுப் பெண்களு மிருந்து வந்தனர். அதாவது ஹஸ்ரத ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியார். ஹஸ்ரத் ஹப்ஸா ரலியல்லாஹு அன்ஹா ஹஸ்ரத்

உமர் பாருக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வியார். ஹஸ்ரத் ஸபிய்யா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய தந்தையார் கைபரிலுள்ள பிரபலத்தலைவராவார். ஹஸ்ரத் ஜுவைரியா ரலியல்லாஹு அன்ஹா பனிமுஸ்தலக்கூட்டத்தின் தலைவருடைய புதல்வியார். உம்மெஹபியா குறைஷிய தலைவரொருவரின் புதல்வியாராவார். முடிவில் எல்லா நம்பிராட்டியார்களும் தங்கள் தங்கள் பெற்றோர் வீடுகளில் செல்வ ராஜ்ஜியத்தை ஆண்டு வந்தவர்களே யாவர். அப்பேர்ப்பட்டவர்கள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய வீட்டிற்கு வந்து பார்த்தபோது அங்குள்ள ஜீவிய போக்கு அவர்களது பெற்றோர்களின் செல்வநிலைமையின் போக்கிற்கு மாறாய் இருப்பதைக் காண்கிறார்கள். ஆனாலோ இஸ்லாம் மதவெற்றிக்கு மட்டும் குறைவில்லை. எதிரிகளிடமிருந்து கைப்பற்றப்படும் பண்டங்கள் நாலா புறங்களிலிருந்தும் குவியல் குவியலாகக் கொண்டு வந்து போடப்படுகின்றன. அவைகளைப் பார்க்கும் நம்பிராட்டியார்களுக்கு, "ஆஹா! இப்பொருளினின்றும் சிலவற்றை எங்களுக்குத் தலைக்குக் கொஞ்சமாக கொடுத்து விட்டாலோ நாங்கள் சுகமாய் காலங் கழித்துக் கொள்ளலாமே" என்ற எண்ணம் உதயமாகிறது. அவ்வாறு உதயமான எண்ணத்தின் பயனனது அவர்க ளெல்லோரையும் அவர்கள் தத்தம் ஜீவனும்சத்தைப்பற்றி நபிகள் நாயகமவர்கள் பால் கோரிக்கை செய்து அதனை அதிகப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதாய் வற்புறுத்தியது. அத்தகைய எண்ணம் பொதுவாய் எல்லோருடைய மனங்களிலும் ஏககாலத்தில் தோன்றி யிராவிட்டாலும் ஆரம்பத்தில் ஒரு நம்பிராட்டியாருடைய மனதில் உதிக்கவே மற்றெல்லோரும் அவரை ஆமோதிக்கத் தொடங்கினர் என்றும் கூறத்தகும்.

மேலேகூறிவந்தபடி மானிட சுபாவத்திற் கிணங்கிய அவர்களின் அத்தகைய இச்சையானது நீண்ட நாளாக் அவர்களுக்கிடை அந்தரங்கமாக இருந்துவந்ததாயினும் 9-வது ஹிஜ்ரியில் எல்லா நம்பிராட்டியார்களும் தங்கள் தங்கள் ஜீவனும்சத்தை அதிகரித்துக்கொள்ள விரும்பியதானது ஒருபுறமிருக்க, அவரவர்களும் தங்கள் தங்கள் அந்தஸ்தையும் பாராட்டி ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் முறையே தத்தமிடத்திலேயே பிரீதிவைக்க வேண்டுமென்ற வழியிலும் உபாயஞ்செய்து வந்தனர். ஆனல் ஒருவர் உயர்ந்தவர், மற்றொருவர் தாழ்ந்தவர் என்ற சமத்துவபேதத்திற்கோ பெருமானவர்களுடைய

கொள்கை இடங்கொடுக்கக்கூடியதா யிருந்திருக்கவில்லை யென்பதைக் கண்ட அவர்கள் தங்கள் பிரயத்தனத்தில் தோற்றுப்போயினர். ஆயினும் மேற்கூறிய மற்றொரு எண்ணத்தில் சித்திபெற வேண்டுமென்பதிலோ ஏகமனதுடன் ஒன்றுபட்டிருந்தனர். அங்ஙனம் அவர்களுடைய இயக்கத்தையுணர்ந்த ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு அதிகமனவேதனை ஏற்பட்டதன் பயனாக ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஒருமாதம் வரையில் தங்களது நம்பிராட்டியார்களைக் காண்பதில்லை யென்பதாய் மனதில் கங்கணம் கட்டிக் கொண்டார்கள்.

நபிகத்திலகம் அவர்களின் திடசித்தத்திற்குச் சான்றாகவே அவர்கள் அச்சந்தர்ப்பத்தில் குதிரையினின்றும் கீழே விழுந்து அவர்களது திரு கெண்டைக் காலின்மீது காய மேற்படத்தக்க சம்பவமொன்றும் சம்பவித்துள்ளது. இனி ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் வீட்டு மெத்தையின் மீதேறி தனியே வசிக்கத் தொடங்கினார்கள். ஆனாலோ அப்போதைய நிலைமையின் போக்கைக்கண்ட அநேகருக்கு ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்கள் நம்பிராட்டியார்களைத் தலாக்குச் செய்துவிட்டார்களோ வென்று நினைக்கவும் நேரிட்டது.

இச்சந்தர்ப்பத்தில் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்குக் கிஞ்சித்தும் ஆறுதலுக்குரிய காலமாயிருக்கவில்லை. ஷாம்தேசத்தில்ரூமியர்களின் அதிகாரத்திற்குட்பட்டு அரசுபுரிந்துவந்த 'கஸ்ஸாயி' என்னும் அரேபிய வம்சத்தினர் ரூமியர்களின் ஏவுதலின் பேரில் மதீனாமுனவ்வாராவின்மீது படையெடுக்கப்போகிறார்களென்ற செய்தியும் மதீனாவுக்குள் எட்டியிருந்தது. இச்சந்தர்ப்பத்தில் நம்பிராட்டியார்களுடைய நிர்ப்பந்தங்கள் ஒருபுறம் இருந்துவருகின்றன. நபிகள்நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களோ பெரும் சஞ்சலமுள்ளவர்களாயிருக்க நேரிடுகிறது.

உண்மையிலோவெனில், ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எக்காரியத்திற்கும் இறைவனுடைய உத்தரவை எதிர்பார்த்தவர்களா யிருந்துவந்தவர்கள். எதிரியிடமிருந்து கைப்பற்றப்படும் பொருளோவெனில், அவர்களுடைய சொந்தப்பொருளாக விருந்திருக்கவில்லை. ஏழைகளும் திக்கற்றவர்களுமே அப்பொருளுக்குப் பாகஸ்தர்களா யிருந்துவந்தனர். அப்படியிருக்கையில், அப்

பொருள்களிடத்து நம்பிராட்டியார்கள் விருப்பங்கொள்வதென்றால் அது தகாத விஷயமே.

கடைசியாக, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், தாங்கள் கங்கணங்கட்டிக்கொண்டிருந்த ஒருமாதகாலத்தை கழித்துவிட்டு மெத்தைவீட்டினின்றும் கீழே இறங்கிவந்தார்களாகில் பொதுவாக எல்லோருமே அவர்களைக் கண்டுகொள்ள முன்னேக்கிச் சென்றனர். சர்வவல்ல இறைவன் ரசூலுல்லா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களது நம்பிராட்டியார்களின் வழக்கு சம்பந்தமாக கீழ்க்கண்ட ஆயத்துகளைக்கொண்டும் தீர்ப்புச்செய்வித்தான். அதாவது யாஅய்யுஹன்னபிய்யு குல்லி அஸ்வாஜிக என்னும் ஆயத்துக்கள் இறங்கிற்று.

அருத்தம்:-நபியே! உம்முடைய நம்பிராட்டியார்களுக்கு, "நீங்கள் உலக வாழ்க்கையையும் உலக சுகானுபவங்களையுமே ஆசிக்கும்பட்சத்தில் வாருங்கள். நான் உங்களுக்கு வழியனுப்பும் உபசாரத்தை நல்ல விதமாகச்செய்து அனுப்பிவைக்கிறேன். உங்களுக்கு அல்லாவும், அவனுடைய ரசூலும், மறுமையும் வேண்டியிருக்கும்பட்சத்தில்,ஆண்டவன் தன்னுடைய நல்லடியார்களுக்காகவேண்டி அரும்பெரும் நன்மையை ஏற்படுத்தியிருக்கிறான்" என்று அறிவித்துவிடும். நம் நபிகத்திலகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இந்த ஆயத்து இறங்கிய பின்னர், தங்கள் நம்பிராட்டியார்களுக்கு அந்த ஆயத்திற் கண்ட தீர்ப்பையொட்டி எவ்வாறு சொல்லுகிறார்களென்றால், "இப்போது உங்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்றி வைப்பதற்கு என்னிடம் இரண்டு மார்க்கங்கள் உண்டு. அதாவது நீங்கள் உலகத்தை பெரிதென்றெண்ணி யிருக்கும்பட்சத்தில் நான் உங்களது திருப்திக்கிணங்கியமட்டில் பொருளைக்கொடுத்து உங்களை விட்டுவிடுகிறேன். இந்நிலைமையில் நீங்கள் வறுமையடையவேண்டுமென்ற அவசியமில்லை. அவ்வாறன்றி நீங்கள் அல்லாவையும், அவனுடைய ரசூலையும், மறுமையையுமே கோரிநிற்கும்பட்சத்தில் மௌனமாயிருந்துகொண்டு சந்தோஷமாகக் காலங்கழிப்பீர்களாகில் இறைவன் பெரிய நன்மையைத் தருவதாக வாக்களித்திருக்கிறான்"என்பதே. நபிகள் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மெத்தைவீட்டினின்றும் இறங்கியவுடன், நேரே ஆயிஷாநாயகி யவர்களிடத்திற்கே சென்று ஆண்டவனால் இறக்கப்பட்ட கட்டளையைச் செவ்வனே கேட்கவைத்தார்கள். ஒருமாதம்

வரையில் நபிகள்நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தம்மைவிட்டும் தனியே பிரிந்திருந்தார்களென்ற உணர்ச்சியொன்றே ஆயிஷா நாயகியவர்களுக்கு அவர்கள் கொண்டிருந்த எண்ணத்தை மறக்கச்செய்திருந்தது. ரசூலுல்லாவுடைய பிரீதியும் அல்லாவுடைய கடுங்கோன்மையுமே அவர்களுடைய இயக்கத்தை அதஞ்செய்து அவர்களுடைய எண்ணத்தையே ஒருமிக்க சீர்படுத்திவிட்டது. இச்சந்தர்ப்பத்தில் பெருமானவர்களால் கூறப்பட்டுள்ள இறைவனது கட்டளையைக்கேட்ட ஆயிஷா நாயகியவர்கள் தக்ஷணமே தலைகுனிந்து, "அல்லாவுடைய ரசூலே! நான் என்னுடைய பலவித எண்ணங்கள் யாவற்றையும் விட்டொழித்து அல்லாவையும் அவனுடைய ரசூலையும் பின்பற்றிக் கொள்ளுகிறேன்" என்றார்கள்.

யதார்த்தத்தின் வெற்றியையும், தீர்க்க தரிசனத்தின் அற்புதத்தையும், சிந்தியுங்கள்! அரேபியாவிலுள்ள பிடிவாதத் தன்மை வாய்ந்த ஸ்திரீகள் தங்கள் கோரிக்கைகளை முற்றிலும் ஒழித்து விடுகிறார்கள். அது எவ்வாறெனில் ஹஸ்ரத் ஆயிஷா நாயகி யவர்கள் மட்டும் அல்லாவையும் அவனுடைய ரசூலையும் தாம் எல்லாவற்றிற்கும் அதிகமாய் சிலாகிப்பதாக ஒப்புக்கொள்ளவே மீதியான நம்பிராட்டியார்களனைவர்களும் ஆயிஷா நாயகியைப் போலவே தாங்களும் அல்லாவையும் ரசூலையுமே அங்கீகரிப்பதாய் ஏக மனதுடன் சம்மதித்தனர். இந்தப் பிரசினையோ இத்தோடு முடிந்தது.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள்மேலே கூறியபடி மேல் வீட்டை விட்டும் கீழே இறங்கி வருவதற்கு ஒருநாள் முந்தி அதாவது 29-வது தினத்தன்று ஹஸரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தன்மனையில் தம்முடைய மனைவியாரை யாதொரு குடும்ப காரியத்தில் கண்டித்தபோது அவர் (மனைவியார்) ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையே கடிந்துபேச ஆரம்பித்தனர். அப்போது ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தம்மனைவியாரை நோக்கி, "நீ என்னோடு தர்க்கம் செய்கி..யா?" வென்றுகேட்டதற்கு அவர்கள், "நீங்களென்ன பிரமாதம்! ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களோடு தாமே அவர்களுடைய நம்பிராட்டியார்கள் கோபித்துக் கொண்டு நாள் முழுதும் இருந்துவிடவில்லையா? மேலும்அவர்கள் ரசூலுல்லா ஹிஸல்லல்லாஹு

அலைஹிவஸல்லம் அவர்களுடன் தர்க்கம் செய்யவில்லையோ?'' என்ருர்கள்.

தம்மனைவியாருடைய மொழிகளைக் கேட்ட ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு அதிக கோப மேற்பட்டது. அவர்கள் நேரே தம் புதல்வியாராகிய ஹஸ்ரத் ஹப்ஸா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுடைய வீட்டிற்குச்சென்று அவரிடம், "ஹப்ஸாவே! என்ன நீ உண்மையாகவே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடத்து அதிருப்தி காட்டுவதுண்டா?'' எனக் கேட்டபோது ஹப்ஸா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் "ஆம்!'' என ஒப்புக்கொண்டார்கள். உடனே ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "ஹப்ஸாவே! ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய அதிருப்தி அல்லாஹுத் தஆலாவுடைய அதிருப்தியாகுமென்பதை நீ உணரவில்லையா? நான் உண்மையாகச் சொல்வது யாதெனில், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எனக்காகத்தான் யோசிக்கிருர்களே யன்றி மற்றபடி உன்னை அவர்கள் இதுவரையில் தலாக்குச் செய்திருக்கக்கூடும்'' என்று கூறிவிட்டு உம்மெஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடத்திற்குப்போய் மேற் கூறியவாறே அவர்களிடமும் மொழிந்தார்கள். அதைக்கேட்ட உம்மெஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், "உமரே! நீங்களோ இப்போது எல்லா விஷயங்களிலும் ஈடுபடத் தொடங்கி விட்டீர்கள். நம்பிராட்டியார்களுடைய காரியங்களிலும் தலையிடுகிறீர்களே!'' என்று கூறினர்கள். ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அதற்கு யாதொரு பதிலும் கூருமலே தங்களுடைய வீட்டிற்குப்போய் விட்டார்கள். ஆயினும் ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமக்குள், "ஆண்டவனே! இதென்ன விந்தையாயிருக்கிறது, யாரிடம்போனாலும் அவர்கள் கடிந்தே பேசுகிருர்களே'' என்று சிந்தித்துக்கொண்டிருக்கையிலேயே அவர்களது வீட்டுக்கதவை யாரோ வெளிப்பக்கத்திலிருந்து பலமாய்த்தட்டும் சத்தங் கேட்டது. கதவைத் தட்டினவர் அப்பான் பின்மாலிக் என்பவராயிருந்தார். உடனே ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அவ்வளவு பலமாய் கதவைத் தட்டுபவர் ஒருக்கால், 'கஸ்ஸானி' என்னும் சமூகத்தார்கள், மதீனவின்பேரில் படையெடுத்து வந்துவிட்டனர் என்ற செய்தியை அறிவிக்கத்தான் வந்திருக்கிருரோ என்றெ

7A
12-23

ண்ணி திகிலடைந்தவர்களாய்வந்து கதவைத்திறந்து பார்த்தபோது, வந்துள்ள அன்ஸாரியானவர், "ரசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹி ஸல்லம் அவர்கள் தங்களது நம்பிராட்டியார்களைத் தலாக்குச் செய்து விட்டார்கள்" என்ற செய்தியை அறிவித்தார்கள். ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள், அதிகாலையில் மதீனமுனவ்வராவுக்குப்போய்ரசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடன் காலைத்தொழுகையை நிறைவேற்றினார்கள். தொழுகை முடிந்ததும் ரசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மேல் வீட்டிற்குச்சென்று அங்கே தனியே இருந்துகொண்டார்கள். ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு, ஹஸ்ரத் ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் போனபோது, ஹஸ்ரத் ஹப்ஸா றலியல்லாகு அன்ஹா அவர்கள் அழுதுகொண்டிருப்பதைக் கண்டார்கள். கண்டதும் அவர்கள் ஹப்ஸா றலியல்லாஹு அன்ஹாவை நோக்கி, "ஹப்ஸாவே! என் அழுகிறாய்? நான் உனக்கு எற்கனவே சொல்லவில்லையா?" என்று சொல்லிவிட்டு நபவி பள்ளிவாசலுக்குள் போனபோது அங்கேயும் இதா சில ஸஹாபாக்கள் மிம்பர் மேடையையொட்டி உட்கார்ந்து கொண்டு அழுவதைக் கண்டார்கள். ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களும் அந்த ஸஹாபாக்களுடனேயே சிறிது நேரம் வரைக்கும் உட்கார்ந்திருந்தார்களாயினும், அவர்களுக்கு மன ஆறுதலில்லாமலிருந்தபடியால் அதைவிட்டும் ரசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், இருந்துவந்த மேல்வீட்டிற்குச் சென்று பெருமானவர்களின் விசேஷ ஊழியராகிய 'ரியாஹ்' என்பவரிடம் தாம் வந்திருக்கும் செய்தியைத் தெரிவிக்கும்படியாய்க் கூறினார்கள். 'ரியாஹ்' என்பவர் அவ்வாறே தெரிவித்தாராயினும் ரசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அவருக்கு எத்தகைய பதிலையும் அளிக்கவில்லை. எனவே, ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்கள் பள்ளிவாசலுக்குப்போய் சிறிதுநேரங் கழித்ததும் மீண்டும் கவலையுடன் மெத்தைவீட்டிற்குப்போய் திரும்பவும் தாம் வருவதற்கு அனுமதியளிக்க வேண்டுமென்பதாக அந்த ஊழியர் மூலமாய் தெரிவித்துக்கொண்டபோது இத்தடவையிலும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஒன்றும் பேசாமலே இருந்து கொண்டனர்.

அதையுணர்ந்த ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஒருவித அலட்டுதல் ஏற்பட்டுவிட்டமையால், அவர்கள் உடனே உரத்த சப்தத்துடன், "ஓ ரியாஹ்! நீர்போய் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் நான் வரலாமா வென்பதற்கு அனுமதிகேளும். ஒருக்கால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் நான் ஹப்ஸாவைப்பற்றி ஏதோ சிபார்சு செய்ய வந்திருக்கிறேன் என்று எண்ணியிருக்கலாம். ஆண்டவன்மீது சத்தியமாகச் சொல்லுகிறேன். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் 'ஹப்ஸா' வுடைய தலையை வெட்டி தங்களுடைய சமுகத்தில் கொண்டுவரும்படி கட்டளை யிடுவார்களாயினும் நான் அத்தகைய கட்டளைக்குக் கீழ்ப்பட்டு நடக்கவும் தயாராயிருக்கிறேன்" என்று கூறினார்கள்.

அதைக்கேட்ட ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ரியாவுக்கு ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களைத் தம்மிடத்திற்கு அனுப்பும்படி அனுமதித்தார்கள்.

ஹஸ்ரத் உமர் றலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படுகிறது:—"நான் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இருந்துவந்த ஸ்தலத்திற்குச்சென்றபோது என்னபார்க்கிறேனென்றால், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் முரடான ஒரு கட்டிலின்பேரில் படுத்திருக்கிறார்கள். அக்கட்டிலின் முரணானது அவர்களுடைய திருதேகத்தின்பேரில் பதிந்து வடுக்களை உண்டாக்கி யிருந்தது. சுற்றிப்பார்த்தபோது ஓரிடத்தில் ஒரு கைப்பிடிக்கொண்ட அளவுக்கு வாற்கோதுமை இருந்து வந்தது. மற்றொரு இடத்தில் சுவற்றின்மீதுள்ள முளை யொன்றில் யாதொரு பிராணியின் தோலொன்றும் தொங்கிக்கொண்டிருந்தது. அவற்றைக் கண்டவுடன் என் கண்ணில் நீர் தாரை தாரையாய் வடிந்தது. நான் புண்பட்ட மனதுடன், "ஓ இருலோக பாதுஷாவே! தாங்கள், அல்லாவின் திருத்தூதரா யிருக்கையில் கைஸர், கிஸ்ரா என்னும் பாதுஷாக்கள் அடையும் சுகானுபவங்களைப் போன்ற சுகானுபவத்தையாவது அனுபவிக்கக்கூடாதா?" எனக்கேட்டதற்கு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், "உமரே? கைஸர் 'கிஸ்ரா' இம்மையையும், நாங்கள் மறுமையையும் அடையவேண்டு மென்பதற்கு நீங்

கள் சம்மதிக்க வில்லையா?'' என்று திருவுளம் பற்றினார்கள். அப்பால் நான் (உமர் ரலியல்லாஹு அன்ஹு)''ரசூலுல்லாவே! தாங்கள் தங்கள் நம்பிராட்டியார்களைத் தலாக்குச் செய்து விட்டீர்களா?'' எனக் கேட்டதற்கு பெருமானவர்கள், ''இல்லை'' என்று மொழியவே, நான் 'அல்லாஹு அக்பர்' எனக் கோஷமிட்டேன். பின்னர், அதைப்பற்றி பகிரங்கப் படுத்துவதற்காக ரசூலுல்லாஹிஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்களிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு பள்ளிவாசலுக்குவந்து அங்கு இருந்தவர்களுக்குத்தெரிவித்தேன்'' இதற்குப் பின்னரே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மெத்தை வீட்டை விட்டும் கீழே இறங்கி வந்து அல்லாஹுத் தஆலாவுடைய அது சம்பந்தமான கட்டளைகளை மேலே கூறப்பட்டபடி தம்முடைய நம்பிராட்டியார்களுக்கு எடுத்துக் கூறினார்கள் என்பதாகும்.

## ஆயிஷா நாயகியவர்களின் வபாத்து.

உம்முல் முமினீன் ஹஸ்ரத் ஆயிஷா நாயகியவர்களின் வபாத்து நேரம் நெருங்கிவிட்டபோது, அவர்கள் மிக்க தாழ்மையோடு, ''அந்தோ! நான் ஒரு மரமாக படைக்கப்பட்டிருந்தாலாவது ஜனங்களின் உபயோகத்திற்குப் பயன்பட்டிருப்பேனே! அல்லது நான் மண்ணாகவாவது சிருஷ்டிக்கப்பட்டிருக்கலாகாதா? நான் உலகத்தில் சிருஷ்டிக்கப்படாமலே இருந்திருந்தாலென்ன?''வென் பெருமூச்சிட்டு மொழிந்தார்கள்.

நோய் ஏற்பட்ட காலத்தினிடையே ஆயிஷா நாயகியவர்கள் குர்ஆன்ஷரீபை திலாவத்துச்செய்வதிலும் இறைவனைத் தியானிப்பதிலுமே எந்நேரமும் ஈடுபட்டிருந்தார்கள். ஒரு தடவை அவர்கள் குர்ஆன் ஷரீபுடைய (வஆகறூனஃதறபூ) என்னும் ஆயத்தை ஓதிமுடித்து, ''இறைவனே! நான் பாவாளியாயிருக்கிறேன் என்பதை ஒத்துக்கொள்ளுகிறேன். உன்னுடைய கிருபையில் எனக்கு வீதமுண்டு என்பதை பாராட்டியே நான் பெருமையடைகின்றேன்'' என்றுகூறினார்கள். வபாத்துடைய வியாதியின்போது ஹஸ்ரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆயிஷா நாயகியவர்களின் வீட்டிற்குப்போய்,தாம் அவர்களைப் பார்க்கவந்திருப்பதாகத் தெரிவித்தபோது. அவர்களை வீட்டிற்குள் அழைக்கும்படி அனுமதிக்கப்

